# ஒன்று சேர்ப்பது

## ஒரு கோப்பை புத்தம் புதிய, தெம்பூட்டும்

# ப்ரூக் பாண்ட் காபி

எங்கும் ... எந்நேரமும் ... நண்பர் குழாம் ஒவ்வொன்றிலும், ப்ரூக் பாண்ட் காபி உல்லாசம் உண்டு பண்ணுகிறது. மக்களை ஒன்று சேர்க்கிறது. நாகரீக வாலிபர்கள் ஆணையிட்டுச் சொல்வார்கள். பெற்றோருக்கோ இது இல்லாவிட்டால் முடியாது! ஏன்? புத்தம் புதிய, தெம்பூட்டும், கமகமவென்ற மணம் இருப்பதால்தான் - எப்போதைக் காட்டிலும், இன்று ப்ரூக் பாண்ட் காபி தரத்தை நிர்ணயிக்கிறது!




BENSONS2/BBC-16 DTM

# கல்கி



மழை நீர் மேடான பகுதியில் தங்குவதில்லை. பள்ளத்தை நோக்கியே பாய்கிறது. அதுபோல் இறைவனின் அருளானது தற்பெருமையும், அகந்தையும் கொண்ட உள்ளத்தில் தங்கி நிற்பதில்லை. பணிவுள்ளவர்களின் நெஞ்சத்தையே சென்று அடைகிறது.

— ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸர்

## பொருளடக்கம்

விசுவாவசு மாசி 16 ● பிப்ரவரி 27

"சாப்பாடு வரும் வரை இவர் சோஷலிஸத்தைப் பற்றி ஒரு சொற்பொழிவு ஆற்றுவார்!"





"மன்னிக்கவும். இப்பொழுது இறங்குவதற்கில்லை!"




கொள்கைக் குழப்ப மூடுபனி

PK



மலர் 25 ● இதழ் 31



# சந்திர மண்டலப் பயணம்

**ராஜாஜி**

**வி**ண்வெளிப் பிரயாணங்கள் பற்றிய 'மயிர்க்கூச்செறியும்' சாதனைகள் என்னை ஈர்க்காததற்குக் காரணம் என் சுபாவத்திலேயே உள்ள ஏதோ கோளாறு போலும் என்று இவ்வளவு காலமாக எண்ணி வந்தேன். எனவே என்னைப் போலவே 'மந்த'மாக இன்னொருவர் இருக்கிறார் என்று சமீபத்தில் அறிந்தபோது திருப்தியா யிருந்தது. அவர் 'ஸாடர்டே ரிவ்யூ' என்ற பிரபல பத்திரிகையின் முக்கியமான ஆசிரியர்களில் ஒருவரான ஜோஸஃப் வுட் க்ரட்ச். 'எங்கேயோ உள்ள ஜான்ஸிபாரில் எத்தனை பூனைகள் இருக்கின்றன என்று எண்ணுவதற்காக உலகத்தில் ஒரு பாதியைச் சுற்றுவது தகுமா?' என்று தொரோ கேட்டார். ஜான்ஸிபார் பூனைகளை எண்ணப் போவது போன்றதுதான் விண்வெளிப் பயணங்கள் எனக் கருதுகிறார் க்ரட்ச். உலகத்தில் ஒரு பாதியைச் சுற்ற வேண்டுமாயின் அதற்கு ஜான்ஸிபார் பூனைகளை எண்ணுவதை விட நல்ல பயன் இருக்க வேண்டும் அல்லவா?

மலையேறிய ஒருவரிடம் குறிப்பிட்ட சிகரமொன்றின் மீது அவர் ஏற விரும்புவதற்குக் காரணம் கேட்டபோது, 'காரணமா? இப்படியொரு சிகரம் இருப்பதேதான் காரணம்' என்றாராம். இதன் கீழ் ஒரு தத்துவமே உள்ளது. இந்தக் காலத்தில் இதுவே ஒரு மந்திரமாகிவிட்டது. ஒரு காரியத்தை நாம் செய்ய முடியும் என்பதற்காக மட்டும் அதைச் செய்து காட்டுவது நியாயமாகாது; இவ்வளவு சிரமங்கள் மேற்கொள்வதற்கு ஈடாக அந்தக் காரியம் நன்மை பயப்பதாகவும் இருப்பது அவசியமாகும். இதை எடுத்துக் காட்டும் க்ரட்ச், ஒரு சாதனையின் அற்புதத்தை நினைத்தே நாம் மலைத்துப் புகழுவதையும், அற்புதத்தின் காரணமாக அதற்கு எவ்வளவு முக்கியத்துவம் அளிக்க வேண்டும் என்ற பாகுபாட்டைக்கூட இழந்து விடுவதையும் எடுத்துக் காட்டுகிறார்.

இதற்கு ஸயன்ஸையும், தொழில் நுட்ப அறிவையும் குறை கூறிப் பயனில்லை. பல பெரிய விஷயங்களை அறிவதற்கு ஸயன்ஸ் உதவி புரிகிறது; பல பெரிய காரியங்களைச் செய்வதற்குத் தொழில் நுட்ப அறிவு உதவுகிறது. ஆனால் நாம் அறிகிற அல்லது செய்கிற விஷயங்களை மதிப்பிடுவதற்கு ஸயன்ஸும், தொழில் நுட்ப அறிவும் உதவா. அவை நாம் சந்திர மண்டலத்தைச் சென்றடைய உதவி புரியலாம்; ஆனால் சந்திர மண்டலத்துக்கு நாம் போக வேண்டியது அவசியமா இல்லையா என்பதை அவை உணர்த்த மாட்டா.

நாம் ஸயன்ஸால் அறிகிற பல விஷயங்களை நடைமுறையில் செய்து காட்டுவதால் என்ன விளைவுகள் ஏற்படும் என்பது ஆரம்பத்தில் தெரிவதில்லை. நாம் ஒன்றை அறிவது வேறு விஷயம்; அதைக் காரியத்தில் செய்து காட்டுவது வேறு விஷயம். அறிவதையெல்லாம் செய்து விடுவது அஜாக்கிரதையாகும். அணுவின் நுட்பத்தை அறிந்ததால் 1945ல் அணுகுண்டைக் கண்டுபிடித்து அதைக் காரிய ரீதியில் உபயோகப்படுத்தியதின் கெட்ட விளைவுகளை இப்போது நன்கு உணர்கிறோம். இதை எண்ணும்போது அணுவின் இரகசியம் அறியப்படாமலே இருந்திருந்தால் அனைவருக்குமே க்ஷேமம் என்று தோன்றுகிறது.

பூமியின் ஆகர்ஷண சக்தியிலிருந்து விடுபட்டு ஒரு ராக்கெட் அதன் இலட்சியத்தை அடைவதற்கு முன்னால் அது புவி ஈர்ப்பிலிருந்து 'தப்பித்துக்கொள்ளும் வேக'த்தைப் பெறுவதாகச் சொல்லப்படுகிறது. இப்போது விண்வெளி ஆராய்ச்சியும் நமக்கு நெருக்கமான பிரச்னைகளை மறந்து அவற்றிலிருந்து 'தப்பித்துக் கொள்ளும் வேக'த்தைப் பெற்றுவிட்டது என்று க்ரட்ச் கேலியாகக் கூறுகிறார். பின்தங்கிய நாடுகளில் குறைந்த பட்சக் கல்வியும், ஆரோக்கியமும், நாகரிகமும் உண்டா

வதற்குப் பயன்பட வேண்டிய ஏராளமான நிதியம் இப்போது அமெரிக்கா, ருஷியா இவற்றின் விண்வெளிப் போட்டியில் விரய மாகிறது.

ஹிந்து மத கிரந்தங்களின் முடிவில் அவற்றைப் படிப்பதாலும், கேட்பதாலும் உண்டாகும் நல் விளைவுகளைக் கூறும் பலச்ருதி என்ற ஒன்றுண்டு. அதே சமயத்தில் அந்த நூலின் உயர்ந்த தத்துவத்தை மத நம்பிக்கையும் சேவை மனப்பான்மையும் இல்லாதோரிடமும், ஆசாரவீனர்களிடமும் உபதேசிக்கக் கூடாது என்ற எச்சரிக்கையும் காணப்படும். ஒரு குறிப்பிட்ட விஷயத்தை அறிவதற்கு முன்னால் அவ்வாறு அறிபவரிடம் சில யோக்கியதாம்சங்கள் இருந்தாலே அவ்வறிவு தவறான வழியில் பிரயோகமாகாது என்பது இதன் தாத்பரியம். படித்தவர்களும், சமூகத்தில் உயர் வகுப்பில் உள்ளவர்களும் சுயநலனுக்காகவே இப்படித் தடை விதித்தனர் என்று பலர் நினைப்பது நியாயமல்ல. பக்குவமில்லாத ஒருவர் அத்வைதத்தைப் பின்பற்றுவதாகக் கொள்வோம். உலகம் ஒரு மாயை என்பது அத்வைதத்துடன் இணைத்துப் பேசப்படுவது. இக்கொள்கையையும் ''என்னைச் சரணடைந்த எல்லோரையும் மன்னித்துக் காப்பாற்றுகிறேன்'' என்று கண்ணன் கீதையில் சொன்னதையும் பக்குவமில்லாத ஒருவர் தமக்குச் சாதகமாகப் பொருள் கொண்டால் சமூகத்துக்குத் தாம் ஆற்ற வேண்டிய தார்மிகப் பொறுப்புக்களைத் தட்டிக் கழித்து விடக்கூடும். எனவே அறிவைப் பெறுவதற்கு ஒரு தகுதியை நிர்ணயிப்பது மிகவும் நியாயமே. அறிவினால் நலனும் விளையக் கூடும்; ஆபத்தும் விளையக் கூடும். அறிவு மரத்தின் பழத்தைப் புசிப்பதற்கு யூத மதமும், கிறிஸ்துவ சமயமும் விதித்துள்ள தடையையும் எண்ணிப் பார்க்க வேண்டும். அணுவின் அமைப்பையும், அதனுள் தேங்கியுள்ள சக்தியையும், அமெரிக்க ஸயன்ஸ் நிபுணர்கள் 'வெற்றிகர'மாகக் கண்டு பிடித்ததன் விளைவுகள் அறிவு மரத்தின் பழத்தைப் புசிப்பதற்குக் கிறிஸ்துவ வேதம் தடை விதித்ததன் பொருளை நேரடியாக உணர்த்துகிறது.

# இரு அறிஞர்களின் கருத்து

மிஹாஜ்லவ் என்பவர் சோவியத் ருஷிய வாழ்க்கையைப் பற்றி மிக அழகாக ஒரு புத்தகம் எழுதியுள்ளார். அதில் அவர் கண்டுள்ள முடிவு, பொருளாதாரம் மட்டுமின்றி ஆன்மிகமும் மக்கட் குலத்தின் ஒரு முக்கியமான சக்தி; இதற்கு ருஷியர்கள் விதிவிலக்கல்ல என்பதாகும். கம்யூனிஸத்தின் பிரமையிலிருந்து விடுபட்டுவிட்ட சோவியத் இளைஞர்கள் ஆன்மிகத் துறையில் ஒரு புரட்சி ஏற்பட வழி தேடுகிறார்கள் என்கிறார் அவர். தனிநபர் மாண்பை அழுத்தமாக வெளியிடுவதே அவர்களது இலட்சியம் என்று தாம் கருதுவதாக மிஹாஜ்லவ் கூறுகிறார். தாம் கிறிஸ்துவ சமயத்தில் நம்பிக்கை கொண்டவர் என்றும், தனிநபர் சுதந்திரத்தை விரும்பும் மனிதாபிமானி என்றும் அவர் திரமாக, பகிரங்கமாகக் கூறியிருக்கிறார். மனித குலத்தைக் கம்யூனிஸத்தால் காப்பாற்ற முடியாது, கிறிஸ்து சமயத்தின் அன்பினாலேயே காக்க முடியும் என்ற கருத்தை அவர் வலியுறுத்துகிறார்.

ஃ ஃ ஃ

தீரமமான போராட்டத்தில் இறங்கியுள்ள எவருமே சந்தர்ப்பவாதியாகவும், சகிரக்க மற்றவராகவும் ஆகிவிடுவது இயற்கை. கம்யூனிஸ்டுகள் எப்போதுமே போராடிக் கொண்டிருப்பதால் அவர்களது சந்தர்ப்பவாதமும் கடுமையும் மிகவும் நன்றாகத் தெரிகின்றன. எனினும் சமுதாயத்தின் பரிணாமத்தில் கம்யூனிஸமும் ஜனநாயகமும் கூட இறுதியில் ஒரு கொள்கையாக இசைய முடியும் என்று டாக்டர் தோர்பெக் அவர்கள் ஒரு நூலில் கூறுகிறார். இரு தரப்பினரும் ஒருவரை மற்றவர் தாக்கிக் கொள்ளாமல் இசைவுக்கு முயல வேண்டும் என்பது அவரது கோரிக்கை. இப்போதே எல்லா ஜனநாயகங்களிலும் சமத்துவக் கொள்கை உட்புகுந்து வருவதையும், அதே போல் கம்யூனிஸ நாடுகளில் தொழில் சுதந்திரங்கள் ஓரளவுக்குப் பிரவேசித்திருப்பதையும் அவர் எடுத்துக் காட்டுகிறார். சீனத்தின் போக்கு கம்யூனிஸக் கொள்கையின் நிரந்தரமான வளர்ச்சியில் எழுந்ததல்ல வென்றும், நீண்ட காலம் அந்நிய ஆதிக்கத்தில் இருந்ததன் எதிர் விளைவாகவே சீனம் இந்த ரீதியில் செல்கிறதென்றும் டாக்டர் தோர்பெக் கருதுகிறார்.

இவ்வாறெல்லாம் சித்தாந்த ரீதியில் அவர் பேசியபோதிலும் கம்யூனிஸ விஸ்தரிப்பைத் தடுக்க நிகழ்காலத்தில் ராணுவ ரீதியில் பலம் பெறுவதன் அவசியத்தை அவர் உணராமலில்லை. வெளியார் எதிர்ப்பை விட கம்யூனிஸ நாடுகளுக்கு உள்ளேயே தொழிலாளர்களின் சுதந்திர வேட்கை மிகுந்து வருவதையும், அங்குள்ள நிர்வாகஸ்தர்கள் நடைமுறைக்கு உகந்த விசால மனப்பான்மை காட்டுவதையும் அவர் முக்கியமாகக் குறிப்பிடுகிறார். எந்த சமூகத்துக்குமே ஜீவநாடி விவசாயம்தான். அதுதான் கம்யூனிஸத்தின் பலவீனமான அங்கம் என்பது தெரிந்து விட்டது. மேலும் உலக கம்யூனிஸம் என்ற ஓரமைப்பு இப்போது பிரிந்து போனதால் அதன் எதேச்சாதிகார சக்தி முன்னளவு இல்லை. இனி காலக் கிரமத்தில் கம்யூனிஸ நாடுகளும் ஜனநாயகங்களும் பல விதத்தில் விநோதமான தொடர்புகள் கொள்ளக்கூடும். இதன் இறுதியில் ஒரு சந்தோஷமான சமாதான உலகம் பிறக்கக் கூடும் என்பது தோர்பெக்கின் நம்பிக்கை. எல்லாக் கனவுகளையுமே வெறும் கனவுதான் என்று நாம் தள்ளி விடுவதற்கில்லை. எனினும் அணு ஆயுதங்களும் அவற்றை எங்கு வேண்டுமாயினும் ஏவக்கூடிய கணைகளும் உள்ளவரை மனித குலம் தோர்பெக் கூறுகிற முறையில் முன்னேறி வளருமா என்பது சந்தேகமே.

★

சீனத்தின் விஸ்தரிப்பு இலட்சியம் உலக கம்யூனிஸத்தின் முக்கியமான நோக்கமாகி விட்டால் அது மிகப் பெரும் அபாயமாகி விடும் என்று புகழ்பெற்ற ஆசிரியர் நார்மன் கஸின்ஸ் எச்சரிக்கிறார். இந்த எச்சரிக்கையோடு இந்தியாவும் பாகிஸ்தானும் நட்புக் கொள்வதற்கு தாஷ்கெண்டில் ருஷியா முன்னின்று வழி கண்டதை இணைத்துப் பார்க்கும்போது தாஷ்கெண்டின் விளைவுபற்றிய நமது மகிழ்ச்சி அதிகமாகிறது. ஒருபுறம் தாஷ்கெண்ட் சந்திப்பு நிகழக் கூடாது என்று சீனம் முயன்று தோல்வியுற்றபோது மறுபுறம் ருஷியா சந்திப்பு ஏற்படுவதில் வெற்றி கண்டது ருஷ்யாவின் அந்தஸ்தை உயர்த்தி விட்டது. இந்தியா — பாகிஸ்தான் நட்பைப் போலவே சீனத்தின் இந்தத் தோல்வியும் முக்கியமானது.

★

சீனத்துடன் இந்தியா சமாதான முறையில் தீர்வு காண வேண்டும் என்று இந்திய கம்யூனிஸ்ட் கட்சியின் இரு பிரிவுகளும் யோசனை கூறுகின்றன. முதல் தோற்றத்தில் இது நல்ல சமாதான முயற்சி என்றே தோன்றும். ஆயினும் சிந்தித்துப் பார்த்தால் சீன அபாயமென்பது பேச்சுவார்த்தையால் தீர்வு காணக் கூடிய வெறும் எல்லைப் பிரச்னை அல்ல என்பது தெரியும். பலாத்கார முறையாலும் கம்யூனிஸத்தை விஸ்தரிக்க வேண்டும் என்ற சீனக் கொள்கை சமரஸம் செய்து கொள்ள முடியாத நிரந்தர ஆபத்து. எனவே சீனத்துடன் பேச்சு வார்த்தை தொடங்குவதால் தற்போது இந்தியாவில் பிளவுபட்டுப் பலவீனமாகியுள்ள கம்யூனிஸ்ட் கட்சிகளை ஒன்றுபடுத்திப் பலமூட்டுவது தவிர வேறு பலன் இராது. சிறிய பிரதேச உரிமைப் பிரச்னைகளை நாம் சீனத்துடன் பேசித் தீர்த்துக் கொள்ள முடியுமாயின் அதைத் தடுக்க வேண்டியதில்லை. ஏனெனில் போர் என்பது எப்போதுமே தீயதுதான் என்பதில் சந்தேகமில்லை. ஆயினும் சீனத்தை அதனுடைய நிச்சயமாகிவிட்ட கொள்கையிலிருந்து விடுவிப்பதற்கு யாரால் பேச்சு வார்த்தை நடத்த இயலும்?

★

தாஷ்கெண்ட் ஒப்பந்தம் என்னவாயினும் 'நெருக்கடி நிலைமை'யை நீடித்தேயாகவேண்டும் என்று முதன் மந்திரிகள் யாவரும் விரும்புவது இயற்கையே. சகஜ நிலையில் அரசியல் சாஸனம் அளிக்காத அதிகாரங்களையெல்லாம் 'நெருக்கடி' நிலைமையும் பாதுகாப்புச் சட்டமும் முதன் மந்திரிகளுக்கு அளித்திருக்கின்றன. ''பணத்தாசையைவிட அதிகாரப் பசியாலேயே உலகம் அதிகம் இன்னலுற்றிருக்கிறது'' என்று ராஷ்டிரபதி ராதாகிருஷ்ணன் அவர்கள் குடியரசு தின உரையில் கூறியது மிகவும் சரி.

★

பாகிஸ்தானுடன் ஒற்றுமை காண்பதற்கு முயன்றபோதிலும் இந்தியாவின் நலன்களை முக்கியமாகக் கருதப்படும் என்று கூறுகிறார்கள். பாகிஸ்தானுடன் சமாதானமாகி நல்லெண்ணம் ஏற்படுத்திக் கொள்வது இந்தியாவின் நலனுக்கு உகந்ததல்ல என்பதுபோல இது தொனிக்கிறது.

★

'நீங்கள் என்னை எவ்வளவு தூரம் நம்பத் தயாராக இருக்கிறீர்களோ அதைவிட அதிகமாக நான் உங்களை நம்புகிறேன்' என்பதே இந்தியாவுக்கும் பாகிஸ்தானுக்குமிடையே தற்போது பரஸ்பரம் நிலவ வேண்டிய மனோபாவம். பாகிஸ்தானுக்கு முன்னதாக இந்தியா நெருக்கடி நிலைமையை ரத்து செய்யுமாயின் நாம் யாரையும் தாக்காமலே ஒரு நல்ல அம்சத்தில் வெற்றி பெற்றவராவோம். அது தாஷ்கெண்ட் ஒப்பந்தத்துக்கு இன்னுமொரு முத்திரை வைத்ததாகவும் ஆகும்.

தாஷ்கெண்ட் ஒப்பந்தத்தின்படி ஒழுக வேண்டும் என்பதில் தற்போதுள்ள தேச உணர்ச்சி பலவீனமடையுமுன் பொருளாதார ஒத்துழைப்புக்கு நடவடிக்கை எடுப்பதில் தான் நமது நாடுகளின் எதிர்காலம் உள்ளது. நம் நாடுகள் மட்டுமின்றி கம்யூனிஸத்தைத் தழுவாத ஆசிய நாடுகள் அனைத்தின் எதிர்காலமுமே இதைத்தான் சார்ந்துள்ளது எனலாம். நம்பிக்கையும் தைரியமும் இதற்குத் தேவை. ஐரோப்பாவில் இதைவிட விஸ்தாரமான ரீதியில் மிகவும் சிக்கலானதோர் அமைப்பின் கீழ் பல நாடுகள் பொதுச் சந்தை ஏற்படுத்திக் கொள்வதைக் கண்டு நாமும் தளருகிற உற்சாகத்துக்குப் புத்துயிர் ஊட்டிக் கொள்ளலாம்.




★

ஒவ்வொரு முறையும் பார்லிமெண்ட் கூட்டத் தொடக்கத்தில் ராஷ்டிரபதி நிகழ்த்தும் உரையைப் பத்திரிகைகள் பிரசுரிக்கும் முறையைப் பார்த்தால், உரையின் கருத்துக்கள் யாவும் தத்துவ அறிஞரான நம் ராஷ்டிரபதியின் தனிக் கருத்துக்களே என்று தோன்றும். இது முற்றிலும் தவறு. ராஷ்டிரபதியின் உரை என்பது சர்க்காரின் உரையன்றி வேறல்ல. பிரிட்டிஷ் பார்லிமெண்டில் ஆள்கிற கட்சிக் கொள்கைகளை ராணி எடுத்துக் கூறுவது போன்றதே இதுவும்.

★

வியட்நாமைக் குறித்துப் பேராசிரியர் ஹெச். எஸ். கம்மேகர் எழுதியிருப்பதில் அடியில் கண்டுள்ள வாசகங்கள் பெரிய பொது உண்மைகளைக் கூறுகின்றன:

ஒரு நாடு கண்டன விமரிசனங்களையும் கருத்து மாறுபாட்டையும் வாயடைக்கச் செய்யுமாயின் அது தன் தவறுகளைத் திருத்திக் கொள்ளும் சக்தியையே இழந்து விடுகிறது. முன்பு நாஜி ஆட்சியிலிருந்த ஜெர்மனியிலும், தற்போது தென்னாப்பிரிக்காவிலும் உள்ளது போன்ற அநாகரிக முறையில்தான் எதிர்ப்புக் குரலை ஒடுக்க வேண்டுமென்பதில்லை, எதிர்ப்புக் குரல் எழுப்புவதைவிட மௌனமாக இருப்பதே சிலாக்கியம் என்று மக்கள் எண்ணுகிற சூழ்நிலையை உண்டாக்குவதுகூடத் தவறுதான்.

பேச்சுச் சுதந்திரம் அளிப்பதன் நோக்கமும் நியாயமும் மக்கள் தங்கள் மனத்தைத் திறந்து காட்டச் செய்வது மட்டுமல்ல. இச் சுதந்திரம் இருந்தாலே தவற்றைத் தடுக்கவும், சத்தியத்தைக் கண்டெடுக்கவும் இயலும். வேறு வழியிலும் தவற்றைத் திருத்திச் சத்தியத்தைக் காண முடியுமோ என்னவோ? இதுவரை நாம் அப்படியொரு வழியைக் காணவில்லை.

இதோடு என் கருத்தொன்றையும் சேர்க்கிறேன்: மற்றக் கட்சியினர் இடம் பெறாத ஆளும் கட்சியின் கூட்டங்களில் இரகசியமாக நடத்தும் விவாதங்கள் இவ்வாறு 'தவற்றைத் தடுக்கவும் சத்தியத்தைக் காணவும்' இன்னொரு வழி என்று கூறப்படலாம். ஆனால் இத்தகைய உள் விவாதங்கள் நிலைமையைச் சீராக்க ஒருகாலும் போதாது.

★

வியட்நாமில் சமாதானம் ஏற்படுவதற்கான சாத்தியக்கூறுகளை அமெரிக்கா பரீட்சை பார்க்கும்போதே, தான் தோல்வியை ஏற்கத் தயாராக இல்லை என்பதையும் உறுதியாகக் காட்ட வேண்டியிருப்பதாகவும், இது காரணமாகவே அமெரிக்கா மீண்டும் வியட்நாமில் குண்டுபோடுமாறு நேர்ந்திருக்கிறது என்றும் ஒரு பேர்லின் தினசரி கூறுகிறது. வியட்நாமில் அமெரிக்காவுக்கு உள்ள ராணுவ சிரமங்களை நீண்ட காலத்துக்கு முந்திய குறள் ஒன்று நன்கு விளக்குகிறது:

சிறை நலனும் சீரும் இலர் எனினும் — மாந்தர்
உறை நிலத்தோடு ஒட்டல் அரிது.

'எதிரியின் அரணும் ராணுவமும் பலவீனமாயிருப்பினும், அவர்கள் தமது சொந்த நாட்டில் போரிடும் அநுகூல நிலையைப் பெற்றுள்ளவரையில் அவர்களை வெல்லுவது கடினம்' என்பது இதன் பொருள்.

★

ஸ்ரீ லால்பஹாதூர் அவர்கள் இந்திய மக்கள் அனைவரின் நலனுக்காகவும் பாகிஸ்தான் மக்களின் நலனுக்காகவும் தமது உயிரை நீத்தார்; காங்கிரஸ் கட்சியின் நலனுக்காகவும், அது அடுத்த தேர்தலில் வெற்றி பெறுவதற்காகவும் உயிரைத் தரவில்லை என்ற நியாயமான கருத்தை எல்லா மக்களும் ஏற்பார்களென நம்புகிறேன். அவரது பிராணத் தியாகம் மக்களுக்கு அவர்களது கடமையை நினைவூட்ட வேண்டுமேயன்றி, ஒரு குறிப்பிட்ட கூட்டத்தின் நலனுக்கு அதை துஷ்பிரயோகம் செய்து கொள்வது முறையல்ல. லால்பஹாதூரின் மரணம் தனக்கு ஒரு நல்ல தேர்தல் சொத்து, என்றுகூட ஏகபோக்கிய எண்ணம் ஊறிவிட்ட காங்கிரஸ், பிரமை கொள்ளலாம். தேர்தலில் இன்னின்ன செய்யக் கூடாது என்று தடுக்கும் விதிகள் லால் பஹாதூரின் மரணத்தைக் கட்சிக்குப் பயன் செய்து கொள்வதைக் கட்டுப்படுத்தாது என்றும் காங்கிரஸார் எண்ணக்கூடும். ஆனால் உண்மையில் இந்தியா பாகிஸ்தான் இரு நாடுகளும் நெருங்கிச் செயலாற்றிச் சுபிட்சம் காண வேண்டும் என்று விரும்பும் யாவரும் ஸ்ரீ லால்பஹாதூர் சாஸ்திரியின் நினைவுக்கு வாரிசுகளாவர். இதை ஒரு கட்சிக்காக மட்டும் ஏகபோக்கியம் செய்துகொள்ள முயல்வது மிகவும் அயுக்தம் என்பதுடன் தேர்தல் அடிப்படையில் குற்றமுமாகும்.

★

தில்லியிலுள்ள ஸெயின்ட் ஸ்டீஃபன் கல்லூரியைச் சேர்ந்த மூன்று மாணவர்களுக்கும் ரங்கா கல்லூரியைச் சேர்ந்த ஒரு மாணவருக்கும் என் மனமார்ந்த பாராட்டுதல்கள். அவர்கள் வகுப்பு முடிந்து வீட்டுக்குத் திரும்பும்போது இரண்டு கொலைகாரத் திருடர்கள் கொள்ளைச் சொத்துடன் தப்பி ஓடுவதைக் கண்டு அவர்களைத் தொடர்ந்து சென்று சண்டையிட்டு ஒருவனை வெற்றிகரமாகப் பிடித்து 32,000 ரூபாய் கொள்ளைப் பணத்தையும் மீட்டிருக்கின்றனர். இம்மாணவர்கள் இப்போதே டிகிரிப் பட்டம் பெறத்

தகுதி அடைந்து விட்டனர். நமது இளைஞர்கள் யாவரும் உஷாராகவும், திரமாகவும் இருக்க வேண்டும், கருகருப்புடன் முடிவுகள் எடுக்க வேண்டும் என விரும்புகிறோம். தில்லி மாணவர்கள் ஓர் உதாரணமாக அமைந்து விட்டனர்.

★

சர்க்காரைக் குறித்து மக்களுக்கு உள்ள குறைகளை விசாரிப்பதற்காகவுள்ள 'ஆம்பட்ஸ்மான்' என்ற அமைப்பை இரண்டு லட்சம் பவுன் செலவில் (அதாவது 26 லட்சம் ரூபாய் செலவில்) ஏற்படுத்த பிரிட்டன் உத்தேசித்துள்ளது. நிதானமாகக் காரியம் நடந்தாலும் நிச்சயமாக ஆம்பட்ஸ்மான் அமைக்கப்படும் என்று தெரிய வருகிறது. ஸ்காண்டிநேவியாவிலும், பிரான்ஸிலும் நீண்ட காலமாக இருந்து வரும் இவ்வமைப்பு ஃபின்லாந்து, டென்மார்க், நார்வே, நியூஜிலாந்து நாடுகளிலும் இடம் பெற்றுள்ளது.

★

மக்கள் அனைவரும் கவனிக்க வேண்டிய ஒரு தீர்ப்பு:

நெருக்கடி நிலைமை என்று சாக்குக் காட்டி மனம் போனபடி கைதுசெய்து விசாரணையின்றியே காவலில் வைக்கும் போக்கை பிப்ரவரி 16ந் தேதியன்று நாட்டின் தலைமை நீதி பீடமான ஸுப்ரீம் கோர்ட் ஒரு தீர்ப்பில் கண்டித்திருக்கிறது. மண்ணெண்ணெய் வியாபாரி ஒருவரைப் பாதுகாப்புச் சட்டத்தின் கீழ் கேரள சர்க்கார் கைது செய்ததை ஆட்சேபித்துத் தொடுக்கப்பட்ட வழக்கை விசாரித்த சுப்ரீம் கோர்ட், வியாபாரியை விடுதலை செய்ய வேண்டும் எனத் தீர்ப்புக் கூறியுள்ளது. தீர்ப்பை வெளியிட்ட பிரதம நீதிபதி ஸ்ரீ கஜேந்திர கட்கர் அவர்கள் இது அதிகார துஷ்பிரயோகமாகும் என்று கூறினார்.

★

இந்தியாவில் உள்ள ஒவ்வோர் ஆணும் பெண்ணும் குழந்தையும் சராசரியில் அந்நிய நாடுகளுக்கு 85 ரூபாய் கடன்பட்டிருப்பதாக ஸ்ரீ மகாவீர் தியாகி அவர்கள் ஜயபுரி காங்கிரஸில் கூறியுள்ளார். இதுவரை இந்தியா அந்நிய நாடுகளுக்கு 3500 கோடி ரூபாய் கடன்பட்டிருக்கிறது. மேலும் இது ஏறிக் கொண்டே போகிறது.

சர்க்காருக்காக நம் மக்கள் தலைக்கு ரூ. 85 கடன்பட்டிருப்பதைத் தவிர சொந்தமாக உள்நாட்டிலேயே பட்டுள்ள கடன்கள் வேறு உள்ளன. இதையெல்லாம் சேர்த்துப் பார்த்தால் இந்தியா எப்படி 'வளர்ச்சி' பெற்றிருக்கிறது என்பதற்கு முழுச் சித்திரம் கிடைக்கும். ஸ்ரீ தியாகி தமக்கே உரிய முறையில் வெடுக்கென்று கூறினார்: "கடன் தொகையை இஷ்டப்படியெல்லாம் செலவழியுங்கள். ஆனால் இறுதியில் வட்டியுடன் அதைத் திருப்பித்தானாக வேண்டும். இப்போது உணவுக்காக எப்படி அழுகிறோமோ அப்படியே கடன் தீர்ப்பதற்கும் அழுவோம்."



ஏராளமாகக் கடன் வாங்குவதை ஆட்சேபித்து நான் முதலில் குரல் கொடுத்த போது இன்றைய காங்கிரஸ் அக்கிராசனர் கூறியது எனக்கு நினைவு வருகிறது. 'நமக்குக் கடன் கொடுப்பவர்களே அதைத் திருப்பிப் பெறுவது பற்றி எதுவும் கூறவில்லை. ராஜாஜி எதற்காக நாம் கடனைத் திருப்பித் தரவேண்டும் என்று கூறிச் சிரமப்படுகிறார்?' என்று கேட்டார் அவர். அவரது அன்பர்கள், என்னை அவர் 'நொறுக்கி விட்டதாக'ப் பெருமைப் பட்டுக் கொண்டார்கள்.

கடன் சுமை, வரிச் சுமை இவற்றிலிருந்து தேசத்தை விடுவிப்பதற்கு வழி இல்லாமல் போகவில்லை. அந்த வழியில் முதல் அடி எடுத்து வைப்பது இந்தியா-பாகிஸ்தான் ஒத்துழைப்பைப் பெறுவதேயாகும். மற்ற நடவடிக்கைகளையும் சுதந்திரக் கட்சி காலக்கிரமத்தில் வெளியிடும். உரிய பாதையை மறந்துவிட்டால் பிரசார கோஷமும் தற்பெருமையும் பிரமையும் சுமையைப் பெருக்கவே உதவும்.

"விவேகம் வீதியில் தன் குரலை எழுப்புகிறது. ஆயினும் அசட்டை செய்பவர்கள் அதை அசட்டை செய்வதிலேயே மகிழ்கிறார்கள். அறிவீனர்கள் விவேகத்தை வெறுக்கிறார்கள்" என்று ஸாலமன் கூறுகிறான். "இன்னலும் துன்பமும் பெருகும்போதே அவர்கள் என்னைத் தேடுகிறார்கள். ஆனால் அவர்களால் அப்போது என்னைக் காண முடியாது." இது கிறிஸ்துவ வேத வாக்கியம்.

## என் பாரி மிட்டாய் எல்லாத்தையும் கொடுன்னு அவன் வம்புக்கு வந்தாம்மா!

சூரப்பயல்! அவனுடைய பங்கை இன்னொருவன் கொண்டுபோக விடுவானா என்ன!... ருசி மிக்கதும் புஷ்டி சத்து நிறைந்ததுமான பாரி மிட்டாய்கள் என்றால் சிறுவர் முதல் பெரியவர்வரை யாருக்குமே அடக்கமுடியாத ஆவல் உண்டாகத்தான் செய்கிறது! எந்த சந்தர்ப்பத்திலும் பாரி மிட்டாய்களை நீங்கள் ருசித்துச் சுவைத்து அநுபவிப்பீர்கள். அவற்றைச் சில்லரையாகவோ அல்லது அழகுவண்ண டின்களிலோ வாங்கிப் பிறருடன் சேர்ந்து ருசித்து மகிழுங்கள். இனிப்பான பாரி மிட்டாய்கள் வாழ்க்கையை இன்பமயமாக ஆக்குகின்றன.




பாரிஸ்
-உயர்தர மிட்டாய்
தயாரிப்பாளர்கள்

சுவைத்திருக்கிறீர்களா? சூப்பர் பட்டர் ஸ்காட்ச் — ஹெல்த் ப்ரூட்ஸ் — டேவன் க்ரீம் டாபிகள் — ஜிஞ்ஜர் கேப்ஸ்.
பாரீஸ் கன்பெக்ஷனரி லிமிடெட், மதராஸ்

JWT-PRS-345



## செய்திப் படங்கள்

1. பல்லாவரத்தில் லண்டன் ரப்பர் கம்பெனியைத் தொழில் மந்திரி ஆர். வேங்கடராமன் ஜனவரி 26ந் தேதி தொடங்கி வைத்தார். படத்தில் பிரிட்டிஷ் ஹைகமிஷனர், கம்பெனி டைரக்டர் பெர்ஹாம் ஆகியோரைத் தொழில் மந்திரியுடன் காணலாம்.



2. ஸ்ரீ கலாநிகேதன் ஆதரவில் குமாரி சந்திரகாந்தாவின் சிவகாமி யின் சபதம் வெள்ளி விழா நாட்டிய நாடகம் அறிஞர் அண்ணு தலைமையில் சிறப்பாக நடைபெற்றது. விழாவுக்கு வந்திருந்த திரு ம. பொ. சிவஞானம், ஸ்ரீ ஏ. எல். சீனிவாசன், நடன ஆசிரியர் தண்டாயுதபாணி பிள்ளை, எவரெஸ்ட் ராமணுர் ஆகியோரையும் காணலாம்.

3. சிவகாமியின் சபதம் வெள்ளி விழா நாட்டிய நாடகத்தினை யொட்டி குமாரி சந்திர காந்தாவுக்குப் பரிசை வழங்குகிறுர் திரு சி. என். அண்ணுதுரை.





4. உடுமலைப்பேட்டை ஸ்ரீ செளரிராஜப் பெருமாளுக்குக் கும்பாபிஷேக வைபவம் ஜனவரி 28ந் தேதியிலிருந்து பிப்ரவரி 2ந் தேதிவரை விமரிசையாக நடந்தது. இந்தக் கும்பாபிஷேகத்தைப் பக்தர்கள் கண்டு களித்ததோடு, ஸ்ரீ எம்பார் விஜயராகவாச்சாரியாரின் கதாகாலக்ஷேபத்தையும் கேட்டு மகிழ்ந்தனர்.

**''ஓவியக் கலையில் 'மாடர்ன் ஆர்ட்' என்ற ஒருவித புரட்சியைத் தோற்றுவித்திருக்கிறார்களே! இது நம்முடைய இந்திய சம்பிரதாயத்திலிருந்து மாறுபட்ட ஒரு புதுமையா?''**

''யார் அப்படிச் சொன்னார்கள்? இந்திய சம்பிரதாயத்துக்கு இது புதுமையே இல்லை! சொல்லப் போனால் இது நமக்கு ஒரு ஏன்ஷியண்ட் (Ancient) அதாவது புராதன பாணிதான். தொன்றுதொட்டு நம்மில் பலருடைய வீடுகளில் வரலட்சுமி விரதத்துக்காகச் சுவரில் காவிக் கட்டியின் உதவியினால் மண்டபமும் படமும் போடுவதைப் பார்த்திருப்பீர்களே! ஏன்! பல கிராம எல்லைகளில் ஐயனார் கோயில் குதிரைப் பொம்மைகள் வைத்திருப்பார்களே! வரலட்சுமி படம், ஐயனார் கோவில் பொம்மை, திருப்பதி மரப்பாச்சி எல்லாமே இன்றைய மாடர்ன் ஆர்ட் தத்துவத்தை அன்றே தன்னுள் அடக்கிக் கொண்டவைதான்! உருவத்துக்கு முக்கியத்துவம் கொடுப்பதைக் குறைத்து உணர்ச்சிக்கு முக்கியத்துவம் கொடுக்க முனையும் போது தோன்றும் பேதத்தையோ மாறுதலையோ மாடர்ன் ஆர்ட் என்று குறிப்பிடலாம். மேலை நாடுகளுக்கு இது புதிய பாணியாக இருந்தாலும், நமக்கு இது புதிது என்று சொல்வதற்கில்லை. பெண்மணிகள் வீட்டு வாயில்களில் என்று கோலம் போடத் தொடங்கினார்களோ அன்றே அவர்கள் 'மாடர்ன் ஆர்ட்டை'க் கற்றுக்கொண்டு விட்டார்கள். இரண்டு வட்டத்தைப் போட்டு அதன் மேல் ஒரு சதுரத்தை வரைந்து ரதமாக்கி விடுவார்கள். எட்டு மாதிரி பக்கவாட்டில் ஒரு பக்கம் வளைவாகவும் மறுபக்கம் நேராகவும் இழுத்து மீனாக்கி விடுவார்கள். புகைப்படத்தில் காணும் ரதம் போலவோ மீன் போலவோ இல்லாத போனாலும், அந்த உருவங்களின் தத்துவத்தை ஓரளவு வெளியாக்குவதே மாடர்ன் ஆர்ட். கொண்டபள்ளி பொம்மைகள் மாடர்ன் ஆர்ட்டின் பிரதிபலிப்புத்தான். குதிரையின் பாய்ச்சலுக்கு முதலிடம் கொடுக்கிறார்களே தவிர அதன் அங்க அமைப்புகளுக்கில்லையே!''

# நவீன ஓவியங்கள்





பூர்ணத்துவத்தைக் கொடுக்கும் சம்பிரதாயமான ஓவியங்களையும் பாவம் சொட்டும் ரவி வர்மா சித்திரங்களையும் பார்த்துப் பழகிய கண்களுக்குக் குறுக்குக் கோடுகளும், குவிந்து கிடக்கும் வர்ணத் திட்டுக்களும் சேர்ந்து குழப்பமாகத் தோற்றமளிக்கும் நவீன பாணி ஓவியங்கள் புதுமையாகத் தோன்றுவதோடல்லாமல் புரியாத புதிராகவும் இருக்கின்றன. இவைகளைச் சிலர் வெகுவாக ரசிக்கிறார்கள். சிலர் ரசிப்பது போல் வெகுவாக நடிக்கிறார்கள். பலர் புரிந்துகொள்ள முயற்சி செய்யாமலே வெறுக்கிறார்கள். சில சமயங்களில் இந்த ஓவியர்கள் தாங்கள் கொடுக்கும் ஆங்கில விளக்கங்களை, தங்கள் சித்திரத்தை விட ஒரு படி மேலாகவே குழப்பும் வகையில் அமைத்து விடுகிறார்கள்.

சம்பிரதாய மரபில் வந்த ஓவியர் மணியம் பிரபல மாடர்ன் ஆர்ட் மேதைகளிடம் மதிப்புக் கொண்டவர். ஆனாலும் தெய்விக மணம் கமழும் இந்திய பாணி ஓவியங்களையே விரும்பித் தீட்டுபவர். மாடர்ன் ஆர்ட் பற்றி அவர் கருத்துக்களை அறிய அவரைப் பேட்டி கண்டோம்.

**"மாடர்ன் ஆர்ட்டில் உருவத்துக்கு முக்கியத்துவம் இல்லை என்று சொல்லுகிறீர்கள்?"**

"ஆமாம், உருவத்தைவிட அது தோற்றுவிக்கும் உணர்ச்சிக்குத்தான் முக்கியத்துவம். சம்பிரதாய வழியில் வந்த ஓவியர் ஒரு மோட்டாரை நான்கு சக்கரங்களுடனும் மற்ற அமைப்புக்களுடனும் போட்டுக் காண்பித்தால், ஒரு 'மாடர்ன் ஆர்ட்' கலைஞர் போடும் அதே மோட்டார் படத்தில் மோட்டாரே இருக்காது! இரண்டு டயர்களின் அடிச்சுவட்டை மாத்திரம் அலட்சியமாகப் போட்டுவிட்டு நிறுத்திவிடுவார்! மோட்டார் ஓடியதைத் தொடர்ந்து ஏற்படும் சுவடு போதுமே மோட்டாரைக் குறிக்க என்பது அவர் கொள்கை. மோட்டார் என்பது ஓடுவதற்குத்தானே! ஆங்கிலத்தில் இதை (Symbolism) சிம்பாலிசம் என்று சொல்லலாம்."

**"சம்பிரதாயமான உருவக் கலைக்கும் புரட்சிகரமான இந்த உணர்ச்சிக் கலைக்கும் சம்பந்தம் இல்லை என்று சொல்லலாமா ஓவியர்களைப் பொறுத்தவரை?"**

"சரியாய்ப் போச்சு! இந்த உருவக் கலையிலே தேர்ச்சியும் முதிர்ச்சியும் அடைந்த ஓவியர்தான் அந்த உணர்ச்சிக் கலைக்குள் நுழைய வேண்டும். உழைத்து உழைத்து உருவத்தின் பூரணத்துவத்தைக் கண்டவனால்தான் அதன் உணர்ச்சியையும் அநுபவிக்க முடியும். உணர்ச்சிக்கு உருவம் கொடுக்க முடியும். சுருக்கமாகச் சொன்னால் சம்பிரதாய ஓவியக் கலையில் நீந்தித் திளைத்துப் பிறகு சந்நியாசம் வாங்கிக் கொண்டவர்கள்தான் இந்த 'மாடர்ன் ஆர்ட்' ஆசிரமத்தில் நுழைய வேண்டும். வெகு அபூர்வமாகச் சிலர் பால சந்நியாசிகளாக நேராகவே இந்தப் புதிய ஆசிரமத்துக்கு வந்துவிடுகிறார்கள். ஆனால் அவர்கள் வெற்றி பெற்றார்கள் என்று சொல்வதற்கில்லை."

**"சன்யாசம், ஆசிரமம் என்றெல்லாம் சொல்லுகிறீர்களே! இந்தப் புரட்சி ஓவியக் கலையில் குரு சிஷ்ய பாவம் இருப்பதாகத் தெரியவில்லையே. ஒவ்வொரு 'மாடர்ன் ஆர்ட்' உபாசகரும் தம் சிருஷ்டிகளுடன் ஒரு தனித்துவத்தை இணைத்துக் கொள்ளுகிறாரே? அது சரியா?"**

"அது ரொம்ப கரெக்ட்! இந்தத் துறையில் குருவுக்கு இடமில்லை. ஆத்ம விசாரம், ஆத்மசக்தி என்பது போல் இது ஒருவித ஆத்ம கற்பனை வியவகாரம். வீடுகளில் ஏதாவது விசேஷ



பூஜை புனஸ்காரங்களில் ஈடுபடும்போது புரோகிதர் இரண்டு சிமிட்டா மஞ்சள் பொடியைக் குழைத்தோ, உதிர்ந்த வெல்லக் கட்டியை ஒன்றாக்கியோ பிள்ளையார் என்று சொல்லித் தட்டில் வைத்துப் பூஜை செய்வதை நாம் பார்க்கிறோம். 'மாடர்ன் ஆர்ட்' இந்தக் கட்டத்தில்கூட உருவாகிறது. அந்த மஞ்சள் பொடி நம் கற்பனையில் விநாயகராகி விடுகிறது. நம் பக்தி வேகத்தில் அதே பொடி விநாயகரின் உணர்ச்சியையும் பெற்று விடுகிறது. நம்முடைய பூஜை வியவகாரம் புரியாத அந்நியர் யாரும் அதைப் பார்த்தவுடன் விநாயகர் என்று ஊகிப்பார்களோ? மாட்டார்கள்! இது போல் அவரவர்கள் கற்பனையில் தோன்றும் ஓவியங்களும் சிற்பங்களும் பிறருக்குச் சட்டென்று புரிய வேண்டும் என்று அவர்கள் எதிர்பார்ப்பதில்லை. இதனால் மரபு, வழி, சம்பிரதாயம் என்ற விஷயங்கள் இடம் பெறுவதில்லை. ஆகையால் அவரவர்களே அவரவர்களுக்குக் குரு! அவ்வளவுதான்."

**"பார்த்தவுடன் எளிதில் புரிந்து கொள்ள முடியாத வர்ணத் திட்டுக்களையோ விகார உருவங்களையோ, ரசிகர்களால் எப்படிப் பாராட்ட முடியும்? அவைகளின் சிருஷ்டிகர்த்தாக்களின் கண்கள் வழியாகவே மற்றவர்களும் பார்க்க வேண்டுமென்று எதிர்பார்க்க முடியுமா?"**

"ஆனானப்பட்ட நவீன ஓவியக் கலைத் தாத்தா பிக்காசோவே இதை எதிர்பார்ப்பதில்லையே! 'இந்தச் சித்திரங்களைக் கூர்ந்து கவனித்து விளக்க முயற்சி செய்வோர் எப்போதுமே தப்பிதமாகத்தான் விளக்கம் கொடுப்பார்கள். எனக்கே, ஓர் ஓவியத்தைத் தீட்ட ஆரம்பித்த பிறகு அடுத்தாற்போல் அதில் என்ன வரும் என்று தெரியாது. ஆகையால் அதற்கு விளக்கம் கொடுக்கவும் நான் முயலுவதில்லை. ஓர் ஓவியன் தன் மனத்திலுள்ள உணர்ச்சிக் குழப்பத்தை வெளியே

கொட்ட வேண்டும் என்ற வெறிக்கு ஆளாகும் போது கொஞ்சம் வர்ணத்தை எடுத்துத் திரைச் சீலையிலே கொட்டுகிறுன். அவ்வளவுதான்!''— என்று அந்த பிக்காசோவே சொல்லியிருக்கிறுர். மார்க்சகால் என்ற ரஷ்ய நவீன கலைப்பாணி ஓவியன் தீட்டும் படங்களிலெல்லாம் அவன் கற்பனை செய்யும் உருவங்கள் அனைத்தும் தரையைத் தொடாமல் அந்தரத்தில் மிதந்து கொண்டே யிருக்கும். அதற்கு என்ன காரணம் கொடுத்தான் தெரியுமா? 'கவிஞர்கள் மாத்திரம் இஷ்டம் போல் காற்றிலே மிதப்போம், ககனத்தில் சாடுவோம் என்றெல்லாம் பாடுகிறுர்களே! அந்தக் கவிஞர்களுக்கு உள்ள கருத்துச் சுதந்திரம் ஏன் ஓவியக் கலைஞனுக்கும் இருக்கக்கூடாது? அதனுல் என் சிருஷ்டிகள் மிதக்கின்றன' என்றுன்.''

**''தாங்கள் உபாசிக்கும் இந்த நவீன கால ஓவியக் கலையை ஏற்று ரசிக்காதவர்கள், தங்கள் கலைமேலுள்ள விரோதத்தாலும் அதைப் புர்ந்துகொள்ள இயலாததாலும், சம்பிரதாய வழி ஈடுபாட்டினுலும் தான் இப்படிச் செய்கிறுர்கள் என்று சிலர் குற்றம் சாட்டுகிறுர்களே! இதில் உண்மை இருக்கிறதா?''**

''இதற்கு நேரடியாக இல்லாமல் வேறு வழியில் பதில் சொல்லுகிறேன்.

''1913ம் ஆண்டில் முதல் தடவையாக நியூயார்க் நகரத்தில் நவீன பாணி ஓவியங்களின் கண்காட்சி ஒன்று நடந்தது. அதில் வைக்கப்பட்டிருந்த படங்களின் ஜாபிதாவைத் தயாரித்த போது அதில் முகவுரையாகச் சில வரிகளையும் சேர்த்திருந்தார்கள். 'கலை என்பது வாழ்க்கையின் அறிகுறி. மாறுதல் இல்லாமல் வாழ்க்கை இல்லை. மாறுபட்டிருப்பதையும், கண்களுக்குப் பழக்கமில்லாத புதுமையையும் கண்டு அஞ்சி ஒதுங்குவது வாழ்க்கையைக் கண்டே அஞ்சுவது போலாகும்' என்பதுதான் அந்த வரிகள்.

''அந்தக் கலைக் காட்சிக்கு வந்து போனவர்களைப் பற்றிப் பிறகு பத்திரிகை ஒன்றில் செய்தி வெளியாகியிருந்தது. சில பேர்கள் இதில் ஆர்வம் காட்டினுர்கள் என்றுல் பலர் ஆத்திரமே அடைந்தார்கள். கண் காட்சியில் ஓர் அறையில் அதுவரை கலை ஆர்வம் கொஞ்சம்கூடக் குறைந்து போனதாகக் காண்பித்துக் கொள்ளாத ஒரு கனவான் திடீரென்று கூச்சல் போட்டு அங்கிருந்த பிக்காசோ ஓவியம் ஒன்றைக் கூட வந்தவர்கள் பார்க்கக் கூடாது என்று தடுத்தாராம். அதே சித்திரத்தைத் தம் சிஷ்யர்களுடன் வந்த உள்ளூர் ஓவியர் ஒருவர் மிகவும் புரிந்து கொண்டு ரசிப்பது போல் நெப்போலியன் பாணியில் நின்று தம் சிஷ்யர்கள் பார்வையில் மதிப்பைப் பெற நடித்தாராம்!

''இந்த இரண்டு குறிப்புகளிலிருந்தே இந்தக் கலையின் தன்மையை நாம் ஓரளவு புரிந்து கொள்ளலாம். சில ஓவியங்களின் தன்மை தாமாகவே நம் அறிவுக்குப் புலப்படும். சிலவற்றை அவைகளுக்குச் சூட்டப்படும் நாமகரணங்களைக் கொண்டு புரிந்துவிட்டதாக நாம் திருப்திப்பட்டுக் கொள்ளலாம். அவ்வளவுதான்!''

**'''மாடர்ன் ஆர்ட்' கலைக்கும் குறுந்தாடிக்கும் ஏதாவது உறவு உண்டா? இந்தக் கலைஞர்கள் எல்லோருமே குறுந்தாடி அபிமானிகளாக இருக்கிறுர்களே?''**

''அதெல்லாம் ஒன்றுமில்லை. ஆதி நாட்களில் பாரிஸ் நகரத்தில் இந்தப் பாணியில் கவனத்தைச் செலுத்திய ஓவியர்கள் தாடி வைத்திருந்தார்கள். தினசரி முகக்ஷவரம் செய்து கொள்ளக் கூட அவகாசம் இல்லாமல் ஓவியம் தீட்டுவதில் ஈடுபட்டிருந்தார்கள் என்பது ஐதிகம். மற்ற அம்சங்களில் இல்லாத மரபு இந்தத் தாடி வைத்துக் கொள்வதில் மாத்திரம் ஒட்டிக்கொண்டு விட்டது. பிக்காசோ, இந்த மாதிரி தாடி வைத்துக் கொள்ளவில்லை என்பது குறிப்பிடத் தக்கது.''

**''இந்த நவீன பாணி ஓவியங்களை ரசிப்பது எப்படி?''**

''உணர்ச்சி என்பதற்கு ஒரு வரையறை கிடையாது. அது போலத்தான் அந்த உணர்ச்சியின் உருவமும் எந்த வரையறைக்கும் அடைபடாது. எந்த எல்லைக்கும் அடைபடாத ஒரு கலையை எந்த நிலையைக் கொண்டு அளப்பது? புரிந்து கொண்ட அளவு ஏற்றுக் கொள்வோம்!''

**''மாடர்ன் ஆர்ட் நம் நாட்டில் வளர வேண்டும் என்று விரும்புகிறீர்களா?''**

''ஆட்சேபணையே இல்லை, தாராளமாக நன்றாக வளரட்டும், வளரத்தான் வேண்டும். ஆனல் அந்த மாடர்ன் ஆர்ட்டும் முழுக்க முழுக்க இந்தியப் பண்பாட்டோடு விளங்க வேண்டும். மேனுட்டு ஓவியங்களைக் காப்பி அடிக்கவோ பின்பற்றவோ முயலுவது நல்லதல்ல! வங்கத்தில் ஜாமினிராய் இவ்விஷயத்தில் நம் ஓவியக் கலைஞர்களுக்கு வழிகாட்டியாக இருந்து வந்திருக்கிறுர்.''

— மேஞ

# வேண்டாத விபத்துக்கள்



பொதுவாக, மோட்டார் வாகனங்களின் எண்ணிக்கை பெருமளவில் அதிகரிப்பதனுல் போக்குவரத்து நெரிசல் அதிகரித்து அதன் மூலம் விபத்துக்களின் எண்ணிக்கை பெருகக் கூடும். ஆனுல் இந்தியாவில் 1956–61, இந்த ஐந்து வருடங்களில் வாகனங்களின் எண்ணிக்கை 60 சதவிகிதத்துக்கும் குறைவாகவே அதிகரித்துள்ளது. ஆனுல் இந்தக் காலத்தில் சாலைகளில் ஏற்பட்ட விபத்துக்களின் எண்ணிக்கை 130 சதவிகிதம் அதிகரித்தது. இந்த நிலை துரதிருஷ்டவசமாக நீடித்து வருகிறது.

சென்ற ஐந்து வருடங்களுக்கான விவரம் :

| வருடம் | சாலை விபத்துக்களில் உயிரிழந்தோர் |
|---|---|
| 1961 | 62 |
| 1962 | 77 |
| 1963 | 79 |
| 1964 | 88 |
| 1965 | 107 |

இந்த வருடத்தில் (1966) பிப்ரவரி முதல் தேதிவரை 14 பேர்கள் சாலை விபத்துக்களில் உயிர் இழந்தனர்.

கடந்த சில வருடங்களில் ஏற்பட்ட சாலை விபத்துக்களை ஆராய்ந்தால் பெரும்பாலான கோர விபத்துக்கள் பாதசாரிகள், பஸ் மற்றும் லாரி டிரைவர்களது அஜாக்கிரதையால் ஏற்பட்டன எனத் தெரிய வருகிறது. சென்னை நகரைப் பொறுத்தமட்டில் சமீப காலத்தில் பஸ்களால் ஏற்படும் உயிர்ச் சேதம் மிகப் பயங்கரமாக அதிகரித்துள்ளது. இதற்கு பஸ் 'ரூட்'களின் அமைப்பு வெகு காலமாக மாற்றப்படாமல் இருந்து வருவதும் ஒரு முக்கிய காரணமாகும். ஒவ்வொரு சாலைக்கும் அதன் போக்குவரத்தைத் தாங்கும் சக்தி இவ்வளவுதான் என்று நிர்ணயித்து விட்டு,





வேறு புதிய பாதைகளில் புது மார்க்கங்களை அமைக்க வேண்டும். துரதிருஷ்டவசமாக வேறு மாற்று சாலைகள் கிடைக்கக் கூடிய இடங்களில் கூட மிக நெரிசலான பழைய மார்க்கங்களிலேயே பஸ் போக்குவரத்தை விரிவுபடுத்தியுள்ளார்கள்.

லாரிகளினுலும், பஸ்களினுலும் அதிக அளவில் விபத்துக்கள் ஏற்படுவதற்கு டிரைவர்களின் போக்குவரத்து விதிகள் பற்றிய அறிவு குறைவாக இருப்பதும் ஒரு முக்கிய காரணம். லாரி, பஸ் போன்ற கனரக வாகனங்களை ஓட்டுவதற்கான 'லைசென்சு' வழங்கும் முறையில் மாற்றங்கள் செய்யப்பட வேண்டும். டிரைவர்களின் தகுதியை இன்னும் கடினமான முறையில் மனோதத்துவ சோதனைகள் மூலம் பரீட்சிக்க வேண்டும். அல்லது அவர்களுக்குக் கட்டாயமாக நல்ல பயிற்சி அளிக்க வசதிகள் செய்ய வேண்டும்.

கடந்த சில மாதங்களில் ஸ்கூட்டர்களிலும் ஏற்படும் விபத்துக்களும் மிக அதிகரித்துள்ளன. மோட்டார் வாகன விதிகளின்படி மோட்டார் சைக்கிள் மற்றும் ஸ்கூட்டரில் இருவருக்குமேல் செல்வது குற்றம். அப்படி இருந்தும், இந்த விதி பெருமளவுக்கு மீறப்படுகின்றது.

**விபத்துக்களைத் தவிர்க்க, மக்கள் செய்ய வேண்டியது இது:** போக்குவரத்து பற்றிய விதிமுறைகளை நன்ருகத் தெரிந்து கொள்ளுங்கள். உங்கள் குழந்தைகளுக்கும் அவற்றைச் சொல்லிக் கொடுங்கள்.

**அரசினர் உடனே செய்ய வேண்டியது இது:** சென்னைக்கு அடுத்த பத்து அல்லது இருபது வருடங்களுக்கான போக்குவரத்து பற்றிய திட்டத்தைத் தயாரித்து, பெருகி வரும் போக்குவரத்து நெரிசலைச் சமாளிக்க முயலுங்கள்.

—எஸ். விசுவநாதன், ஆசிரியர் 'மோபைல்'






# உங்கள் கேசம் பளபளப்புடன் திகழ்வதன் ரகசியம்...

முட்டையின் சத்து அடங்கிய

## பொன்னிற TIARA டியாரா ஷாம்பூ

உங்கள் கூந்தலைத் துப்புரவாகச் சுத்தம் செய்து மேலும் பட்டுப்போன்ற மென்மையுடனும், மிருதுவாகவும், சுலபமாகப் படியும் நிலையிலும் வைத்திருக்கிறது. முட்டையின் சத்து அடங்கிய டியாரா ஷாம்பூவின் உபயோகத்தினால், உங்கள் கேசம் கட்டுக்கடங்கும் விதத்தைக் கண்டு புளகாங்கிதம் அடைவீர்கள்.

உங்கள் கேசம் புத்துயிர் பெற்று, பளபளப்புடனும், சிறந்த பட்டுபோன்ற மென்மையுடனும் திகழ உதவுவது டியாராதான். கேசத்தை தடவிப் பார்த்தால், அதன் மழமழப்பும், படியும் விதமும் உங்களை மகிழ்விக்கச் செய்யும். ஒரு முறை டியாரா ஷாம்பூவை உபயோகித்துப்பாருங்கள், என்றென்றும் உபயோகிக்கத் தோன்றும்.



**J.K. Helene Curtis**

இந்தியாவில் ஏகபோக விநியோகஸ்தர்கள்:

ஸ்பென்சர் அண்ட் கோ. லிட்.,
சென்னை 2 • பம்பாய் 26
டெல்லி 6. • கல்கத்தா 23

நவரச நிகழ்ச்சிகள்







# கள்வனுக்கு எங்கும் வழி உண்டு

1937-ம் ஆண்டில் டிசம்பர் மாத இறுதி. ஹங்கேரி நாட்டிலுள்ள புடாபெஸ்ட் நகரில் நடந்த பரபரப்பூட்டும் ஒரு நிகழ்ச்சி. மாதம் சுமார் நூறு பவுன் ஊதியம் பெறும் (ஹங்கேரி நாணய விகிதத்தில் 6000 பெங் கோக்கள்) அலெக்ஸாண்டர் மார்வே என்னும் ஆசாமி தான் காஷியரா கப் பணியாற்றி வந்த பாங்கியின் இரும்புப் பெட்டியிலிருந்து ஒரு சனி ஞாயிறு விடுமுறைக்கு முந்திய வெள்ளிக்கிழமை மாலையில் பாங்கியை மூடும்போது, சுமார் ஒன்பதினாயிரம் பவுன்களை அபகரித்து விட்டான். இரும்புப் பெட்டிக்கான சாவிகள் பாங்கித் தலைவரிடமும் மார்வேயிடமும் தான் உண்டு. அந்த வெள்ளிக்கிழமையன்று கடைசியாகப் பாங்குக் கட்டிடத்தை விட்டு வெளியேறின ஆசாமி மார்வேதான். இரும்புப் பெட்டியின் கைப்பிடிகளில் மார்வேயின் கைரேகைகள் பதிந்திருந்தன.

மூன்று வார காலத்துக்குப் பிறகுதான் போலீஸார் மார்வேயைக் கைது செய்தார்கள். அதற்குள் அவர்கள் பல துப்புகளைச் சேகரித்தார்கள்.

முதலாவது இந்தத் திருட்டு நடந்த இரண்டு மூன்று நாட்களுக்குள் புடாபெஸ்ட் நகரின் மற்றொரு பகுதியிலுள்ள வேறு பாங்கி ஒன்றில் அன்னுநாகி என்ற பெயரில் சுமார் எட்டாயிரத்து ஐந்நூறு பவுன் பெறுமான பெங்கோக்கள் செலுத்தப்பட்டு, ஒரு புதுக் கணக்குத் திறக்கப்பட்டிருந்தது. மார்வேயின் மனைவியின் பெயர் அன்னுநாகி.

இரண்டாவது இந்தத் திருட்டு நடந்த மறுநாள் மார்வே தம்பதிகள் பல கடைகளுக்குப் போய் ஏராளமான துணிமணிகள், ரேடியோகிராம்,

தட்டுமுட்டுச் சாமான்கள் ஆகியவற்றைச் சுமார் எழுநூறு பவுன்களுக்கு வாங்கியிருக்கிறார்கள். இந்த இரண்டு விஷயங்களுமே மார்வேக்குப் பாதகமாக அமைந்ததில் வியப்பொன்றும் இல்லை.

புதிதாக பாங்கிக் கணக்கு திறந்த அன்னாநாகி மார்வேயின் மனைவிதான் என்று ஊர்ஜிதம் செய்து கொள்ள அந்தப் பாங்கிக் காஷியரைக் கொண்டு அடையாளம் காட்டப் போலீசார் ஏற்பாடு செய்தார்கள். ஆனால் எதிர்பாராத வகையில் பணத்தை வாங்கிக் கொண்டு கணக்கைத் தொடங்கிய அந்தக் காஷியர் கிறிஸ்துமஸ் பண்டிகைக்கு மறு நாள் மாரடைப்பினால் காலமாகி விட்டிருந்தார். ஹங்கேரி நாட்டு பாங்கி விதிகளின்படி கணக்கு வைத்துக் கொள்பவர்கள், தங்கள் வீட்டு விலாசங்களைக் கொடுக்க வேண்டிய அவசியமில்லை. பெயரையும் மாதிரி கையெழுத்துக்களையும் மட்டும் கொடுத்தால் போதும்.

இந்த அடையாளம் காட்டும் வாய்ப்பு இல்லாமற் போனதற்காகப் போலீஸார் தயங்கவில்லை. மற்ற சந்தர்ப்பச் சாட்சியங்களின் அடிப்படையில் மார்வேயைக் கைது செய்து விசாரணைக்கு அனுப்பிவிட்டார்கள். பாங்கியில் இருந்த மாதிரிக் கையெழுத்தை மாத்திரம் ஹன்னா கல்னர் என்னும் கையெழுத்து நிபுணரிடம் கொடுத்து அதையும், மார்வேயின் மனைவியின் கையெழுத்தையும் ஒப்பிட்டுப் பார்த்து அபிப்பிராயம் சொல்லும்படி கேட்டுக் கொண்டார்கள்.

மேலெழுந்தவாரியாக, பாங்கியிலிருந்து வந்த கையெழுத்தும் மார்வேயின் மனைவியான அன்னாநாகியின் கையெழுத்தும் ஒரே ரகமாகத் தோன்றினாலும் கூர்ந்து கவனித்தபோது பாங்கியில் இருந்த மாதிரிக் கையெழுத்தில் ஒருவித நடுக்கமும் ஆட்டமும் கண்டிருந்தன. மார்வே மனைவியின் கையெழுத்து நிதானமாக ஒரே சீராக அமைந்திருந்தது.

இதற்குப் போலீஸாரே விளக்கம் கொடுக்க முயன்றார்கள். திருட்டுப் பணத்தை உபயோகிக்கிறோம் என்ற பீதியில் கையெழுத்து நடுங்கியிருக்கலாம். அல்லது வேண்டுமென்றே கையெழுத்தை அப்படிப் போட்டிருக்கலாம் என்பது அவர்கள் வாதம். மேலும் மூன்று வார காலத்துக்கு மேலாக இந்தப் பாங்கித் திருட்டு விவகாரம் பத்திரிகைகளில் அடிபட்டும் வேறு யாரும் 'நான்தான் பாங்கியில் பணம் போட்டேன்' என்று சொல்லி முன்வரவில்லை. ஆகையால் இந்த அன்னாநாகிதான் அந்தக் கணக்கை ஆரம்பித்திருக்க வேண்டும் என்று முடிவு கட்டினார்கள்.

கையெழுத்து நிபுணர் ஹன்னா கல்னர் தம் பரிசோதனை சாலையில் இந்த இரண்டு கையெழுத்துக்களையும் தீவிரமாக ஆராய்ந்து பார்த்தார். பாங்கிக் கையெழுத்தில் கண்ட நடுக்கம் இயற்கையான நடுக்கமாக இருந்தது. வயது முதிர்ந்த ஒரு ஸ்திரீயின் கையெழுத்துத்தான் அப்படி இருக்கும். அந்த ஸ்திரீ ஒரு நோயாளியாகவும் இருக்கலாம் என்று ஊகிக்க வேண்டியிருந்தது. நிச்சயமாக அது இளம் வயதுள்ள மார்வேயின் மனைவியினுடைய கையெழுத்தில்லை என்ற முடிவுடன் தம் அபிப்பிராயத்தை நீதிமன்றத்துக்குச் சமர்ப்பித்தார்.

ஆனால் நீதிமன்றம் அதை ஏற்றுக் கொள்ளவில்லை. விசாரணையின் விளைவாக மார்வே தண்டனை பெற்றுச் சிறைக்கு அனுப்பப்பட்டு விட்டான்.

ஹன்னாகல்னருக்கு மாத்திரம் மனத்திலே நீதிமன்றம் தவறு செய்து விட்டது என்ற அபிப்பிராயம் ஏற்பட்டது. யாரோ அன்னாநாகி பாங்கியில் பணம் போடப் போக, இந்த அன்னாநாகியின் கணவன் தண்டனை அடைந்து விட்டான் என்றுதான் நினைத்தார். அதிகாரிகளின் அனுமதி பெற்று மார்வேயைச் சிறைக்கூடத்தில் போய்ச் சந்தித்தார்.

அலெக்ஸாண்டர் மார்வே சோர்வுற்று மனம் தளர்ந்திருந்தான். தான் ஒரு நிரபராதி என்றும் ஆனால் சந்தர்ப்ப சாட்சியங்களுக்கு எதிராகத் தன் வாக்குமூலம் எடுபடவில்லை என்றும் திருப்பித் திருப்பிச் சொன்னான். எட்டு மாத கர்ப்பிணியான தன் மனைவியின் ஆசைகளைப் பூர்த்தி செய்ய நான்கு ஆண்டு காலத்துக்கு மேலாகச் சிரமப்பட்டுச் சேர்த்து வைத்த பணத்தைக் கொண்டுதான் அவன் சாமான்கள் வாங்கியிருந்தான். அவன் மனைவி புதுக் கணக்கு ஏற்படுத்த எந்தப் பாங்கிக்கும் போகவில்லை. குறிப்பிட்ட வெள்ளிக்கிழமையன்று சிப்பந்திகளின் சம்பளப்பட்டுவாடாவுக்காகக் கடைசியாக இரும்புப் பெட்டியைத் திறந்தவன் அவன்தான்! அவன் அதை மூடியபோது பணம் பத்திரமாக இருந்தது என்று உறுதியாகச் சொன்னான்.

பிரசவத்துக்குப் பின்னால் ஆஸ்பத்திரியில் இருந்த அன்னாநாகியையும் கையெழுத்து நிபுணர் சந்தித்தார். பாங்கிக் கையெழுத்து தன் கையெழுத்தே இல்லை என்று உறுதியாகச் சொன்னாள் அவள்.

மார்வேயின் சார்பில் ஆஜரான வழக்கறிஞரையும் அந்த நிபுணர் சந்தித்தார். அந்த வழக்கறிஞருக்கே தம் கட்சிக்காரர் மார்வேயினிடம் நம்பிக்கை குறைந்திருந்தது. 'யாராவது கூட்டாளியின் துணை கொண்டு தன் மனைவியின் பெயரில் அவன் பாங்கியில் கணக்கை ஏற்படுத்தியிருக்கலாம். வெளிக் கிராமங்களிலிருந்து யாராவது பணம் போட்டிருக்கிறார்கள் என்று வைத்துக் கொண்டாலும், ஒருவராவது அதைப் பற்றிப் பத்திரிகைச் செய்திகளைப் பார்த்த பிறகும் தகவல் கொடுக்க முன்வரவில்லை. ஹங்கேரியில் எத்தனை அன்னாநாகிகள் இருக்கிறார்கள் என்று எண்ண முடியுமா?' என்று நம்பிக்கை ஊட்டாத வகையில் பதில் சொல்லிவிட்டார். கையெழுத்து நிபுணர் மனம் உடைந்து திரும்பினார். ஆனாலும் அவர் மார்வே குற்றம் செய்யவில்லை என்றுதான் நம்பினார்.

ஃ ஃ ஃ

சில நாட்கள் கழித்து அவர் ஒரு நாள் ஒரு டாக்டர் நண்பருடன் விருந்து சாப்பிட்டுக் கொண்டிருந்த போது மார்வே வழக்கைப் பற்றிப் பேச்சு வந்தது. ஹன்னா கல்னர்

மார்வே குற்றவாளியாக இருக்க முடியாது என்று தம் அபிப்பிராயத்தை எடுத்துச் சொன்னார். டாக்டர் நண்பர் சிரித்தார். ''கருணைக்கும் ஓர் அளவு உண்டு. மார்வேக்கு எதிராக இருந்த சாட்சிகளை உங்கள் கருணை ஊடுருவ முடியாது'' என்றார்.

''என் கருணை விஞ்ஞானத்துடன் கலந்த கருணை. பாங்கிக் கையெழுத்து நிச்சயமாக ஒரு நோயாளியினுடையது. ஆனால் நான் பார்த்த அன்னநாகி இடாகாத்திரமான நபர். அவளால் இப்படி ஒரு வயோதிகக் கையெழுத்தைப் போட முடியாது'' என்றார்.

''நோயாளி என்று சொல்கிறீர்? அப்படியானால் புடாபெஸ்ட் நகரில் உள்ள ஆஸ்பத்திரிகளில் விசாரிக்கலாமே?'' என்றார் டாக்டர்.

'ஆஸ்பத்திரி' என்ற வார்த்தை ஹன்னு கல்நரின் மனக் கதவைத் திறந்து விட்டது. உடனே அந்த முயற்சியில் ஈடுபட்டார்.

முதல் ஆஸ்பத்திரியில் இருந்த அன்னநாகி என்பவள் ஒரு யுவதி. அவளும் பிரசவத்துக்காக வந்தவள்தான். அவளிடம் பாங்கியில் போட்டு வைக்கும்படியான பணம் ஒரு நாளும் இருந்ததில்லை.

இரண்டாவது ஆஸ்பத்திரியின்நோயாளிகள் பட்டியலில் அன்னநாகி என்ற பெயரே இல்லை.

மூன்றாவது ஆஸ்பத்திரியில் அவருடைய நம்பிக்கைக்கும் பயன் கிட்டியது. கிராமப் புறத்திலிருந்து வந்த அன்னநாகி என்ற வயோதிக ஸ்திரீ கண் ஆபரேஷன் செய்து கொண்டு படுக்கையில் இருந்தாள். கல்நர் அந்த அம்மையாரைச் சந்தித்தார்.

கிறிஸ்துமஸ் சமயத்தில் கிராமப்புறத்திலிருந்து வந்த அந்தக் கிழவி தான் கொண்டு வந்த பணத்தைப் பாங்கியில் போட்டுவிட்டு ஆஸ்பத்திரியில் சேர்ந்தாள். உடனேயே அவளுக்கு ஆபரேஷனும் ஆகிவிட்டது. கட்டு அவிழ்க்க நாட்கள் ஆகுமென்ற நிலையில் அவள் ஆஸ்பத்திரி படுக்கையிலேயே இருந்தாள். அவளுக்குப் பத்திரிகைச் செய்திகள் வாசித்துச் சொல்ல யாரும் இல்லை. உற்றார் உறவினருமில்லை. கல்நரிடம் அவள் போட்டுக் காண்பித்த கையெழுத்தும் பாங்கிக் கையெழுத்தும் ஒன்றாக இருந்தன. இந்த விவரங்களை கல்நர் நீதி ஸ்தலத்தில் சமர்ப்பித்தார். உடனடியாக மார்வே விடுதலை செய்யப்பட்டான்.

அடுத்தபடியாகப் போலீஸார் கவனம் பிரஸ்தாப இரும்புப் பெட்டிக்கு மாற்றுச் சாவி வைத்திருந்த மார்வேயின் பாங்கித் தலைவர் மீது பாய்ந்தது. அந்தத் தலைவர் தான் குறிப்பிட்ட வெள்ளிக்கிழமையன்று மார்வே கிளம்பிய பிறகு கையுறைகளை மாட்டிக் கொண்டு இரும்புப் பெட்டியிலிருந்த பணத்தை எடுத்துப் போய்விட்டதாகத் தெரிந்தது. அந்தத் தலைவர் மார்வே மாட்டிக் கொள்வான் என்று நினைத்துச் செய்தார். கடைசியில் மார்வே இருந்த சிறைக்கு அவரே போய்ச் சேர்ந்தார். கல்நரின் கருணையே மார்வேயை மீட்டது.

—கோமதி ஸ்வாமிநாதன்

(ஆதாரம்: ரீடர்ஸ் டைஜஸ்ட்)

நேசக்கரம்




## நெஞ்சில் நிலைத்தவர்

தக்க நேரத்தில் எனக்கு உதவி புரிந்தவர் பேராசிரியர் ரா. பி. சேதுப் பிள்ளை அவர்கள். பத்து ஆண்டுகளுக்கு முன் குடந்தை அரசினர் கல்லூரியில் இடைநிலை (இண்டர்மீடியட்)- தேர்வில் வெற்றி பெற்ற நான் பி. ஏ. (ஆனர்ஸ்) வகுப்பில் சேரும் பொருட்டு அண்ணாமலைப் பல்கலைக் கழகத்துக்கு விண்ணப்பித்தேன். திருத்தணிக்கும் எட்டுக்குடிக்கும் மெய்யன்பர்கள் பக்தி யுணர்ச்சியுடன், காவடி எடுப்பதைப் போல், நான் என் சொந்த ஊராகிய கொரடாச்சேரியிலிருந்து (தஞ்சை மாவட்டம்) அண்ணாமலை நகருக்குப் பன்முறை சென்று வந்தேன். அங்கு தக்கார் பலரைக் கண்டேன்; பல்கலைக் கழகத்தில் சேர முயன்றேன். நான் மேற்கொண்ட முயற்சிகள் யாவும் தோல்வியடைந்தன. ஆனால் நான் உள்ளம் தளரவில்லை.

சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்த் துறைத் தலைவராகத் திகழ்ந்த பேராசிரியர் ரா.பி. சேதுப்பிள்ளை அவர்கள் தற்செயலாக அண்ணாமலைப் பல்கலைக் கழகத்துக்கு வந்திருந்தார்கள். அவரை நான் எதிர்பாராத வகையில் கண்டேன். என் உள்ளம் அவரை நாடிற்று. உள்ளம் சென்ற வழியே உடலும் சென்றது. என் நிலையைச் சுருக்கமாக விளக்கினேன். நான் பெற்ற பல்வேறு நன் மதிப்பிதழ்களைப் பொறுமையாகப் பார்த்தார்.. என் தகுதியைச் சிந்தையால் அறிந்தார்; உள்ளத்தால் உணர்ந்தார். எனக்குத் துணை புரிய வேண்டும் என்று அவரது நல்ல உள்ளம் அவருக்கு உணர்த்தியது. சொல்லின் செல்வர் தம் செல்கின்ற சொல்லால் பல்கலைக் கழகத்தில் சேர எனக்குத் துணை புரிந்தார். பல்கலைக் கழகத்தில் சேர்ந்த பின் நான் அவர்களிடம் என் அகம் கனிந்த ஆழ்ந்த நன்றியைப் புலப்படுத்தினேன். 'நான் ஒன்றும் செய்துவிடவில்லை. என் கடமையைத்தான் செய்தேன்' என்றார் தமிழ் நெஞ்சம் கொண்ட டாக்டர் சேதுப்பிள்ளை.

வ. பெருமாள், தமிழ்ப் பேராசிரியர்
முதல்நிலைக் கல்லூரி, உரிகம், (மைசூர்)





## பெர்லினுக்கு வரட்டும்!

கம்யூனிஸம் மோசமானதாய் இருக்கலாம்; ஆனால் அது மக்களை சந்தோஷமாக வைத்திருக்கிறது என்கிறார்கள் சிலர். அவர்கள் பெர்லினுக்கு வரட்டும்!

கம்யூனிஸம் மோசமானதாக இருக்கலாம்; ஆனால் அது உற்பத்தியைப் பெருக்குகிறது என்கிறார்கள் சிலர். அவர்கள் பெர்லினுக்கு வரட்டும்!

ஜனநாயகம் என்றைக்குமே அப்பழுக்கு இல்லாததாகத் திகழ்ந்ததில்லை. ஜனநாயகத்தில் சில குறைபாடுகளையும் நாம் காண முடியும். ஆனால் எந்த ஒரு ஜனநாயகத்திலுமே மக்களைத் தங்கள்பால் இருத்திக் கொள்ளச் சுவர் எழுப்ப நேரிட்டதில்லை! — கென்னடி

## லட்சியக் கனவு

### டாக்டரானேன்!

நான் வேலை செய்து வந்த டிஸ்பென்ஸரியின் டாக்டர் கல் நெஞ்சம் படைத்தவர். நோயாளிகளிடம் பணம் இல்லையென்றால் 'வெளியே போ!' என்று கண்டிப்பாய்ப் பேசுவார். இதைப் பார்க்கும் ஒவ்வொரு நேரமும் என் நினைவு, 'நான் டாக்டராக வேண்டும். ஏழை நோயாளிகளுக்கு முடிந்த அளவுக்கு உதவி செய்ய வேண்டும்' என்பதுதான்.

ஒரு நாள் மாலை சுமார் மூன்று மணி இருக்கும். பரம ஏழை ஒருவர் வயிற்று வலியால் துடிதுடித்துக் கொண்டு வந்தவர் தாங்கமுடியாமல் டிஸ்பென்ஸரியில் கீழே சாய்ந்தார்.

''தற்சமயம் பணம் இல்லை. எப்படியும் தந்து விடுகிறேன். என்னைக் காப்பாற்றி விடுங்கள். உங்கள் உதவியை என்றும் நான் மறக்கமாட்டேன். என்னால் வலி தாங்க முடியவில்லை. என்னைக் காப்பாற்றுங்கள்'' என்று புலம்பினார் நோயாளி.

இதைக் கேட்டுக் கொண்டு நிற்க என்னால் முடியவில்லை. வீடு சென்று என் தந்தையைப் பார்த்து விஷயத்தைச் சொன்னேன். இளகிய மனம் படைத்த என் தந்தை உடனே தம்மிடம் இருந்த பணத்தில் 12 ரூபாய் தந்து, ''அந்தக் கல்நெஞ்சக்காரரிடம் கொடுத்து அந்த ஆசாமிக்குச் சௌகரியம் செய்'' என்றார்.

அன்று மாலையே நான் டிஸ்பென்ஸரியை விட்டு விலகிக் கொண்டேன். ஹோமியோபதி முறையில் படித்துத் தேறினேன். இனமாக வைத்திய ஆலோசனைகளை நேரிலோ தபால் மூலமோ தெரிவித்து வருகிறேன்.

இன்று நான் எத்தனை வகைக்கு டாக்டர் என்று தெரியுமா? பேனா டாக்டர்! கடிகார டாக்டர்! கிராமபோன் டாக்டர்! சைக்கிள் டாக்டர்! மாட்டு டாக்டர்! மனிதருக்கு நோய் தீர்க்கும் டாக்டர்!

— டாக்டர் எஸ். எம். அமீது



## மனிதனின் விலை பத்து ரூபாய்!

ஒரு மனிதனின் உடலில்: ஓர் அறைக்கு வெள்ளையடிப்பதற்கு வேண்டிய சுண்ணாம்பு, மூன்று நான்கு முறை எரிப்பதற்கான மக்னீசியம், நீரைப் பிரித்தெடுத்தால் ஒரு பீப்பாய் தண்ணீர், ஓர் ஆணி செய்வதற்கு வேண்டிய இரும்பு, ஏழு நீள சோப்புக் கட்டி செய்வதற்கு வேண்டிய கொழுப்பு, மூன்று டஜன் தீப்பெட்டிகளிலுள்ள நிக்குச்சிகளுக்கு வைக்கக்கூடிய அளவு பாஸ்பரஸ், ஒருவேளை சமையலுக்குத் தேவையான உப்பு, ஒரு பெரிய தேக்கரண்டி அளவு சர்க்கரை; இவைதவிர கந்தகமும், அமோனியாவும் கூடக் கிடைக்கின்றன. இவைகளை யெல்லாம் விலை கேட்டு இதுதான் ஒரு மனிதன் மதிப்பு என்று சொன்னால் மனிதன் உடலின் மதிப்புப் பத்து அல்லது பதினைந்து ரூபாய்க்கு மேல் போகாது!

— காழி ஜெயா



## ஓர் ஓட்டு வித்தியாசத்தில் தோற்ருர் !

தேர்தலுக்கு நின்ற அபேட்சகருக்கு மூன்று வோட்டுகள்தான் கிடைத்தன. முடிவு வெளியான பிறகு வீட்டுக்கு வந்தவரை மனைவி கோபமாக வரவேற்ருள். ''எனக்கு அப்போதே உங்கள் மேல் சந்தேகம்தான். என்னைத் தவிர மற்ருெரு பெண் உங்களுக்கு வோட்டுப் போட்டிருக்கிருள்!''

— குமாரி ஜெயா



## விநோத ஹாஸ்யம் !

செக்கோஸ்லாவாகியா ஒரு கம்யூனிஸ்ட் தேசம். அதன் தலைநகரான பிராகா (பிரேக்)வில் இப்படியொரு ஹாஸ்யம் நிலவுகிறதாம்:

''நாம் ருஷ்யர்களை ஏன் வெறுக்கிறோம்?''

''ஏனெனில், அவர்கள் நமக்கு விடுதலை வாங்கித் தந்தார்கள்.''

''நாம் அமெரிக்கர்களை ஏன் வெறுக்கிறோம்?''

''ஏனெனில், அவர்கள் இன்னும் நமக்கு விடுதலை வாங்கித் தராததினால் தான்!''

## பொத்தல் செய்ய இயந்திரம் !



தபால் ஸ்டாம்புகளைக் கிழிப்பதற்காக நடுநடுவே துவாரங்கள் இருக்கின்றனவே, முன் நாட்களில் அந்தத் துவாரங்கள் கிடையாது. இருபது தபால் பில்லைகள் கொண்டது ஒரு தாளாக இருக்கும். ஒரு ஸ்டாம்பு வேண்டுமானல் கத்தியினலோ அல்லது கத்தரிக்கோலாலோ அதை வெட்டிக் கொள்ள வேண்டும். ஒருவன் ஒரு கவரை எழுதி ஒட்டி விட்டான். அதன் மேல் ஸ்டாம்பு ஒட்ட வேண்டுமே! ஸ்டாம்பை வெட்டுவதற்கு அவனிடம் கத்தியோ கத்தரிக்கோலோ இல்லை. மனத்தில் தபால் இலாகாவைச் சபித்துக் கொண்டே ஒரு குண்டூசியை எடுத்துச் சிறுசிறு துவாரங்களை அந்தத் தாளில் பண்ணினன். அவன் படும் அவஸ்தையை அவன் எதிரில் உட்கார்ந்திருந்த ஹென்றி ஆர்சர் (Henry Archer) கண்டு ஏன் இதுமாதிரி துவாரங்கள் பண்ணக் கூடிய மிஷின் ஒன்று கண்டுபிடிக்கக் கூடாது என்று நினைத்தார். இச்சம்பவம் இங்கிலாந்தில் 118 வருஷங்களுக்கு முன்பு நடந்தது. 1848ம் ஆண்டு அதே ஆர்சர் துவாரம்பண்ணுகிற மிஷினைக் கண்டுபிடித்து விட்டார். அது முதல் தபால் ஸ்டாம்புகள் கிழிக்கவசதியாகத் துவாரங்களுடன் வெளிவர ஆரம்பித்தன.

ஆதாரம்: ''வீக் எண்ட்''
தகவல்: ஆர். கீதா



## வீண் சண்டை !

ஐ. நா. சபையில் ஒரு சமயம் நிகழ்ச்சி முறை பற்றிப் பலத்த வாதங்கள் நடந்தன. அதைக் கண்டு சகிக்காமல் சர் பி. என். ராவ் இந்தக் கதையைச் சொன்னர்:

''இந்தியாவில் ஓர் அரசர் இருந்தார். அவரைக் கால் பந்தாட்டம் ஒன்றைப் பார்க்க அழைத்துச் சென்ருர்கள். ஆட்டத்தில் வெற்றி பெற்ற கோஷ்டிக்கு ஆளுக்கு ஒரு கால் பந்து வீதம் அந்த அரசர் அடுத்த நாள் இனமாக அனுப்பினர். அவர் கூடவே இப்படி ஒரு கடிதமும் எழுதியிருந்தார்: 'ஒரே பந்துக்காக நீங்கள் பதினெரு பேரும் அப்படிச் சண்டை போட்டது எனக்குப் பிடிக்கவில்லை. அதனுலேயே இவைகளை அனுப்பினேன்.'

''ஆனல் இங்கே இருக்கிருேமே, நாம் பதினெரு பேர், நம் எல்லோருக்கும் ஒரு சமயத்தில் ஒரு பந்து போதும் என்றே நினைக்கிறேன். அதாவது, ஒரு சமயத்தில் ஒரே ஒரு தீர்மானத்தைப் பற்றி மட்டும் விவாதிப்போம்!''

ஆதாரம்: ''மேதைகள் தமாஷ்''
தகவல்: ச. சத்தியமூர்த்தி



# சிரஞ்சீவிக் கதைகள்...

11. ஹனுமான்



சீதையைத் தேடுவதற்கு சுக்ரீவன் தனது சைன்யத்தை நான்கு பிரிவுகளாகப் பிரித்தான். ஒரு பிரிவை ஹனுமானின் தலைமையின் கீழ் தென்திசை நோக்கி அனுப்பி வைத்தான். ராமன் ஹனுமானிடம் தமது முத்திரை மோதிரத்தை அடையாளமாக அளித்தார்.



ஹனுமானும் அவரது வானர சேனையும் மும்மரமாகத் தேடினர். சமுத்திரக் கரையை அடைந்ததும், செய்வதுஎன்ன என்பதறியாது திகைத்து நின்றனர்.



ஜடாயுவின் சகோதரனன சம்பாதி என்ற கழுகை அவர்கள் சந்தித்தனர். இலங்கைத் தீவு, அது இருக்கும் இடம், அதன் படை பலம் பற்றியெல்லாம் சம்பாதி அவர்களுக்கு அறிவித்தது.



ஹனுமான் தியானத்தில் ஆழ்ந்தார். புது பலம் பெற்றார். மகேந்திர மலை உச்சியில் ஏறி, பிரமாண்டமான வடிவம் எய்தி, வானத்தினூடே பாய்ந்தார்.



வழியில் சுரசா என்ற அரக்கி ஹனுமானை விழுங்கத் தன் வாயைத் திறந்தாள். ஹனுமான் தமது வடிவத்தைச் சுருக்கினார். அவளது வாயினுள் நுழைந்தார். மீண்டும் தமது பிரமாண்டமான உருவம் எய்தி, அவளது வலது காது வழியாக வெளியே வந்தார்.



இலங்கையை அடைந்ததும் ஹனுமான் இலங்கைக் கோட்டை முழுவதையும் தேடினார். வீரச் செயல்கள் பல புரிந்தார். கடைசியாக சீதையைக் கண்டார். தாம் வந்த விஷயத்தைச் சொல்லி ராமரது அடையாள மோதிரத்தையும் சீதையிடம் அளித்தார்.



# வாழ்வில் வசந்தம்

அண்ணன்-தம்பி இருவரிடையே பலத்த விவாதம் எழுந்து வார்த்தை தடிக்கிறது.

"அண்ணா! உன் இரட்டை வாழ்க்கையும் உன் மகனுடைய குடிகேடான வாழ்வும் ஊர் சிரிக்க வைத்துவிட்டன. நம் குடும்பத்தில் குணத்துடன் தப்பிப் பிறந்த வசந்தாவின் வாழ்வைப் பாழடித்து விடாதே!" - இது தம்பியின் தர்மக் குரல்!

"டேய்! பணத்தினாலே ஆகாத காரியமில்லேடா. அவள் இஷ்டப்படி அந்தப் பிச்சைக்கார எழுத்தாளன் கழுத்தில் தாலி கட்டினால் என் குடும்ப கௌரவம் என்ன ஆகிறது? அட்வகேட் சுப்பிரமணியத்தின் மகன் ராமசாமிக்கே என்ன ஆனாலும் என் மகளைக் கட்டி வைப்பேன். என் முடிவை மாற்ற முடியாது!"—இது அண்ணாவின் ஆணவக் கர்ஜனை.

பணமும் படாடோபமும், ஆணவமும் கொண்ட தொழில் அதிபர் சுந்தரம் பிள்ளை பிடிவாதமாகத் தம் மகளைப் பணக்கார இடத்தில் மணம் முடிக்கப் பகீரதப் பிரயத்தனம் செய்தார். பணத்தை வாரி இறைத்தார். பம்பாய் சுவாமிகளின் துணையை நாடினார். அப்பாவி (எழுத்தாளர்) நடராஜனை வேலையை விட்டு டிஸ்மிஸ் செய்வதற்குரிய கைங்கரியத்தை மேற்கொண்டார். ஆனால் கடைசியில் நடந்ததென்ன? வசந்தாவின் வாழ்வில் வசந்தம் மலர்ந்தது. அவள் எண்ணியபடியே அவள் காதலும் கைகூடியது.

நாடகத்தில் தொழில் அதிபர் சுந்தரம் பிள்ளையாகத் திரு எஸ். வி. சகஸ்ரநாமம் வருகிறார். நாடகத்துக்கு உயிரூட்டுகிறார். அவர் மனைவியாக ஸ்ரீமதி எஸ். என். லக்ஷ்மி வந்து சக்கைப் போடு போடுகிறார். பணம், பணக்காரர் மகன் இவையேதான் அவள் கண்ணில் படுகின்றன. ஆணவம் மிக்க தொழில் அதிபருக்கு ஏற்ற அதிகார மிடுக்குள்ள எஜமானி!

கதாநாயகி வசந்தாவின் பாகத்தை ஏற்ற நவகுமாரி, அண்ணனுக்குத் தம்பி சோடை இல்லை என்று காட்டும் விதத்தில் வசந்தாவின் சித்தப்பாவாக வரும் பசுபதி, அட்வகேட் சுப்பிரமணியத்தின் மகன் வேடம் தாங்கிய விஜயன் ஆகியோர் நன்றாக நடித்து நாடகத்துக்கு நல்ல பெயரைச் சம்பாதித்துக் கொடுக்கிறார்கள்.

நாடகத்துக்கு அழகிய வசனம் தந்திருப்பவர் திரு கு. அழகிரிசாமி. கரடுமுரடற்ற எளிமையான வசனம்; அழுத்தமான நயமாண்டிப் பேச்சு; கதையோடு கலந்த நகைச்சுவை ஆகியவை நாடகத்துக்கு மெருகேற்றுகின்றன. காட்சி ஜோடனை கண்ணுக்கு விருந்தாயிருந்தது.

'வாழ்வில் வசந்தம்' என்ற தலைப்புப் போட்டு விட்டு, இந்த நாடகத்தை இரண்டரை மணி நேரத்துக்குள் பாட்டோ, டான்ஸோ இல்லாமல் விறுவிறுப்புடன் நடத்திய சேவா ஸ்டேஜ் நாடகக் குழு அன்று ரசிகர்களின் பாராட்டைப் பெற்றதில் அதிசயமில்லை.

நாடகம் 'ரியலிஸ' பாணியில் அமைந்துள்ளது. ரியலிஸத்தைக் கையாளும்போது ரொம்ப ஜாக்கிரதையாக இருக்க வேண்டும். கொஞ்சம் அளவுக்கு மீறினால் நேர்மாறான விளைவு உண்டாகிவிடும். தொழில் அதிபர் சுந்தரம் பிள்ளை விபசாரியின் வீட்டுக்குப் போய்த் திரும்பும் காட்சியும், அவர் மகன் குடித்துவிட்டுத் தெருவில் 'கூத்தாடு'கிற இடமும் இதையே உணர்த்துகின்றன. இவற்றை இன்னும் கொஞ்சம் நாசூக்காகச் செய்திருந்தால் எதிர்பார்த்த பலன் கிட்டியிருக்கும். சம்பிரதாயமான நாடக பாணியை ஒதுக்கி, வசந்தா—நடராஜன் காதலை அத்துணை இயற்கையாக அமைத்தவர்கள் இதில் கொஞ்சம் 'ஓவரா'கப் போனது அதிசயம்தான். இதை விட்டால் 'ஓவர் ஆக்டிங்' (அளவுக்கு மீறிய நடிப்பு) என்ற குற்றத்தை நாடகத்தில் எங்கும் காண முடியவில்லை. மக்கள் விரும்பி ஏற்க வேண்டுமே என்றுகூடக் கவலைப்படாமல் இயற்கையான நடிப்பே இழையோடுகிறது நாடகம் முழுதும். திறமையான டைரக்ஷனை இதில் காண்கிறோம். இதையே கடைசிக் காட்சியில் விஜயன் ஒரு பெரிய தத்துவத்தை மிக எளிதாக அலட்சியமாகச் சொல்கிற கட்டமும் நிரூபிக்கிறது. 'பேஷ்' போட வைக்கிறது.

கதையில் புதுமை ஒன்றும் இல்லை. கதைக்கு அதிக முக்கியத்துவம் இல்லாமல் கதா பாத்திரங்களின் குண இயல்புகளைப் படம் பிடித்துக் காட்டுவதாக அமைந்துள்ள இந்நாடகம் ஒரு புது முயற்சி என்று சொல்லலாம். அந்த அளவில் இது பெருமளவுக்கு வெற்றி கண்டிருக்கிறது.




# கண்ணனைக் கண்டவர்

நீர் மட்டம் [மளமள வென்று ஏறி வருகிறது.

இடுப்பளவிருந்த ஓட்டம் மார்பைத் தொட்டுக் கொண்டு ஓடத் தொடங்கிவிட்டது.

இதோ இன்னமும் உயர்ந்து அவரது தொண்டையைக்கூடச் சூழ்ந்து விட்டது.

அந்தத் தொண்டையால் அவர் செய்த வேதாந்த விசாரம் கொஞ்ச நஞ்சமல்ல. உடம்பு வேறு ஆன்மா வேறு என்று அது எவ்வளவு விரிவாக எடுத்துச் சொல்லியிருக்கிறது! எனினும் இப்போது நீருக்குள் நிற்கவும் முடியாமல் பிரவாகம் அவரைச் சுற்றி சோதும்போது உடல் வேறு, ஆன்மா வேறு என்று அவரால் தெளிந்திருக்க முடியவில்லையே ! உடலைக் காத்துக் கொள்ள வழி ஏதுமுண்டா என்றல்லவா தவியாகத் தவிக்கிறார் !

நாசியினுள் புகுந்த நீர் பின் மண்டையில் எங்கோ சுரீலென்று தாக்கியபோது, புத்தியிலும் ஓர் உபாயம் சுரீலென்று உதயமாயிற்று.

தமது பரமாசாரியரான ஆதிசங்கரர் சூர்ணா நதியில் பிரவேசித்தபோது அவர் பாதத்தை முதலை கவ்வியதையும், சங்கரர் அப்போது சந்நியாசம் பூண்டதால் அவரது பிறப்பே மாறி, பிறப்புக்குரிய கருமப் பயனும் மாறி முதலை அவர் காலை விட்டதையும் நினைவு கொள்கிறார். இப்போது நாமும் அதுபோல் சந்நியாசம் பூண்டு விட்டாலென்ன? சம்சாரத்தைக் கடப்பதற்காக அல்ல; சம்ஸாரத்தை விட்டு நீங்காதிருக்கவே சந்நியாஸம் பூண்டுவிடலாமே! அப்படியும் பலனின்றி மூழ்கினாலோ, அதுவும் சரிதான்; இல்லறத்தானாக இருந்து மடிவதைவிடத் துறவு பூண்டு உயிர் நீத்தால் புண்ணியமே சேரும் என்றல்லவா சாஸ்திரம் கூறுகிறது ?

சகல சாஸ்திரமும் கற்றுத் தேர்ந்த அவர் சந்நியாசம் பூணுவதற்குரிய பிரைஷ மந்திரங்களைக் கூறத் தொடங்கினார்.

செவிகளினுள்ளே 'ஹோ'வென்று பாயும் தண்ணீரின் ஒலிக்கு மேலாக உள்ளுக்குள்ளே மந்திர நாதத்தை எழுப்பிக் கொண்டார். குழந்தைப் பிராயத்திலிருந்து இசை நுட்பங்களில் ஊறியிருந்த அவர் இன்று மௌன கானத்தில் மந்திரங்களை ஓதிக் கொண்டிருந்தார்.

உள் நாதம், வெளி நாதம் இரண்டுமே ஓய்ந்தன. தாம் என்ன ஆகிறோம் என்ற நினைப்பும் தப்பி விட்டது அவருக்கு.

நினைவு திரும்பியபின்னரும் 'ஹோ'வென்ற ஒலி மட்டுமே கேட்டது. இன்னமும் பிரவாகத்திலேயேதான் அல்லாடிக் கொண்டிருக்கிறோமோ என்று ஆச்சரியப்பட்டார். 'இல்லை; ஈசுவரனிடத்தில் சார்ந்து விட்டால் பாரம் குறைந்து விடும் என்பார்களே, அதே போல் கண்ணுக்குத் தெரியும் கடவுளாகிய நதியில் விழுந்தாலும் உடல் பாரம் குறைந்தல்லவா போகிறது? இப்போதோ தம் உடல் கனமாக அல்லவா கனக்கிறது? அப்படியானால் தாம் ஆற்றில் இல்லை என்று பொருளா? கரை சேர்ந்து விட்டோமா?'

ஆறுதான் அவரைக் கரையில் புரட்டித் தள்ளி விட்டதோ, ஆண்டவன் கருணைதான் அவரைக் கரை சேர்த்ததோ? அல்லது அது மந்திரத்தின் சக்திதானோ? யாரே கூறமுடியும்?

வேட்டகத்தை அவர் சென்றடைந்த நிசியில் அவரது மனைவி தவிர வேறு யாரும் விழித்திருக்கவில்லை. அவர் கதவைத் தட்டியதும் அவளேதான் திறந்தாள்.

அவர் மீது படிந்த அவளது பார்வை அப்படியே நிலைகுத்திட்டு விட்டது. அன்பு வேகத்தின் அதிர்ச்சியில் அயர்ந்துவிட்டாளோ என்றே அவர் முதலில் எண்ணினார். ஆனால் அந்தக் கண்களில் அன்பு கொப்பளிக்கவில்லை; சோகமும், தாபமும், வியப்புமே மிதந்தன என்பதை உடனே கண்டு கொண்டார்.

''என்ன, என்னை இப்படிப் பார்க்கிறாய்?'' என்றார் அவர் அவளை நெருங்கியபடியே.

''ஐயோ, என் அருகில் வராதீர்கள்'' என்று வீரிட்டாள் அவள்.

''ஏன், உனக்கு என்ன வந்து விட்டது?''

''உங்களுக்கு என்ன வந்து விட்டது?''

''எனக்குப் பேராபத்து வந்தது. வெள்ளத்தில் மூழ்கினேன். ஆனால் உன் மாங்கல்ய பலத்தால் பிழைத்து விட்டேன்.''

''மாங்கல்யமா?..:.. எனக்கா?''

''ஏன்? அதிலென்ன சந்தேகம்? ஏன் இப்படிக் குழறுகிறாய்? உனக்கு என்ன வந்து விட்டது?''

''எனக்கு... எனக்கு ஒன்றும் வரவில்லை. ஆனால் உங்களுடைய உடம்பில் பூணூல் உள்ள மட்டும்தானே என் கழுத்தி லுள்ள தாலிக்கும் உங்களுக்கும் சம்பந்தமுண்டு ?''

முப்புரி நூல் வெள்ளத்தில் அடித்துக் கொண்டு போய் விட்டதோ என்ற ஐயத் துடன் அவர் தம் மேனியையே நோக்கிக் கொண்ட போது......

சற்றுமுன் அவரைக் கண்டவுடன் அவரது மனைவியின் கண்கள் எப்படி நிலைக்குத்திட் டனவோ, அதுபோல் இப்போது அவரது கண்களே நிலைக்குத்திட்டன.

ஆம், அவரது உடலில் யக்ஞோபவீதம் இல்லாதது மட்டுமல்ல; புதிதாக ஒன்று அங்கு இருந்ததுதான் அவருக்குப் பெருவியப் பூட்டியது.

ஆற்று வெள்ளத்தில் அகப்பட்டுக் கொண்டதால் ஈர வஸ்திரம் அணிந்திருக்க வேண்டிய அவர் இப்போது நல்ல மொட மொடப்பான காஷாயம் அணிந்திருக் கிறார்! 'இது எப்படி' என்று யோசித்துத் தலையை அவர் தடவிக் கொண்டபோது அவரது அழகான கட்டுக்குடுமி கையில் தட் டுப்படவில்லை. ஆமாம், அவரது தலை மழிக் கப்பட்டிருக்கிறது. இதோ, இருட்டு வேளைக் குத் 'துணை'யாக அவர் கையில் எடுத்து வந்த கம்புகூடத் தண்டமாகியிருக்கிறது.

அவர் சந்நியாசியாகியிருக்கிறார்!

யார் சந்நியாசம் கொடுத்தார்கள்?

ஏன், தாமேதான் கொடுத்துக்கொண்டார்.

வெள்ளம் வடிந்தபின் அடியிலுள்ள பொருட்கள் தெரிவதுபோல், அவரது சிந்தனையிலும் ஒரு வெள்ளம் அடங்க, அதன் கீழ் பழைய நடப்புக்களெல்லாம் பளிச் சென்று தெரிந்தன.

ஆற்று வெள்ளத்தில் அகப்பட்டுக் கொண்ட போது பிரைஷ மந்திரம் கூறித் தாம் துறவு பூண்டது அவர் நினைவில் வந்தது. 'தம் வார்த்தை பொய்யாகக் கூடாது என்பதற்காக ஆண்டவனே சந்நி யாசச் சின்னங்களை அளித்து விட்டான். உள்ளத்தால் மறந்ததைப் புறத்தால் நினை ஊட்டி விட்டான்.'

அவர் பாதத்தின் கீழ் பதுமையெனப் பணிந்து வீழ்ந்திருந்த பெண்மணியைப் பார்த்தார். அவளது முதுகும் பின்தலையும் தான் தெரிந்தன. வகிட்டு உச்சி வரையில் குங்குமத்தை அப்பிக் கொண்டிருந்தாள். அதுவே அவளைக் காஷாயமாகக் காக்கட்டும் என ஆசி கூறியபடி அங்கிருந்து வெளி யேறினார் அவர்.

அவர் யார்? அவர் பேரென்ன? ஊரென்ன?

அதை யெல்லாம் யாரும் நிச்சயமாகச் சொல்வதற்கில்லை. அவருடைய பழைய ஜன்மம் போய்விட வேண்டுமென்பதற்காக அவரைப் பிடிவாதமாகத் துறவியாக்கிவிட்ட ஆண்டவன், அவரது அந்தப் பழைய ஜன்ம விவரங்களைக்கூட மறைத்தே விட்டான்.

ஆண்டவன் மறைத்ததை இன்று ஆராய்ச்சி யாளர்கள் தேடிப் பார்க்கிறார்கள். பலவித மான அபிப்பிராயங்களைத் தெரிவிக்கிறார்கள். அவரது காலம் கூடப் பதினேழாம் நூற் றாண்டா, பதினெட்டாம் நூற்றாண்டா எனத் திண்ணமாக முடிவு செய்யப்படவில்லை.

அவர் வெள்ளத்தில் அகப்பட்டுக் கொண்ட ஆற்றைப் பற்றிக்கூட இரண்டு கருத்துக்கள் உள்ளன. அது கோதாவரி நதி என்கிறார்கள் சிலர். 'அல்ல, வெண்ணாறு' என்பவர் இன் னொரு சாரார்.

நமக்கோ அவர் வாழ்ந்தார் என்பது ஒன்றே போதும். வாழ்க்கை என்பதற்கு ஒரு பொருள் இருக்க வேண்டுமாயின் அவரது வாழ்க்கை துறவு கொண்ட பின்தான் தொடங்கியிருக் கிறது. அதைப் பற்றி அறிவதே நமக்குப் போதும்.

முதலில் தாமே துறவு பூண்டுவிட்ட சங்கரர் பிறகு கோவிந்த பகவத்பாதரிடம் சாஸ்திரோக்தமாக சந்நியாஸம் வாங்கிக் கொண்டது போல, தாமாகவே துறவு கொண்ட நம் கதையின் நாயகர் அதன்பின் சிவராமானந்த தீர்த்தர் என்ற அத்வைத சம்பிரதாய சந்நியாசியை அணுகித் தமக்கு தீக்ஷை தருமாறு வேண்டினார். சிவராமர் அவ ருக்கு நாராயண தீர்த்தர் என்ற நாமம் தந்து சந்நியாசியாக்கினார்.

சிவராம தீர்த்தருடைய பெயரிலேயே சைவ வைணவ ஒற்றுமையிருப்பது போல், அவரது உள்ளத்தில் ஞானம்—பக்தி இரண்டை யும் ஒன்றாகப் பார்க்கும் பாவனை இருந்தது. இந்த நோக்கு நாராயண தீர்த்தருக்கும் ஏற்பட வேண்டும் என்பதற்காக மாணாக்க ரைப் பரிசோதித்தார் அவர்.

ஆனால் நாராயண தீர்த்தரோ அத்வைத ஞான மார்க்கத்தைச் சரியாகப் புரிந்து கொள்ளவில்லை. ஜீவான்மா தானே பரமான்மா என்பதை விசாரத்தாலும் யோகத்தாலும் அறிய வேண்டுமேயன்றி, பேரானந்த மோட்சம் எய்த பக்தி என்ற ஒன்று அவசியமேயில்லை என்று எண்ணினார்.

''நம்முடைய ஆசாரிய பகவத்பாதர் என்ன போதித்திருக்கிறார்? நாமே பரம் பொருள். உலகத் தோற்றமெல்லாம் பொய். கண்ணுக்குத் தெரியும் உலகமே பொய் என்னும் போது, உருவமற்ற பரம்பொருளை எதற்கு உருவங்களில் பாவித்துப் பக்தி செலுத்த வேண்டும்? இது அத்வைத சம்பிர தாயத்துக்கே விரோதம்'' என்றார் நாராயண தீர்த்தர்.

''அப்பனே. ஒன்று மறந்து போனாயே! ஆசாரியர் ஜீவ—பிரம்ம அபேதத்தை மட்டும் தானா கூறினார்? 'பஜகோவிந்தம் பஜகோவிந் தம் பஜகோவிந்தம்' என்று அவர் மூன்று முறை சாற்றவில்லையா?'' என வினவினார் குரு.

''பஜகோவிந்தம் மூடமதே என்று அவர் பாடினார். ஞான மார்க்கத்தில் செல்ல முடி யாத மூடமதியினரைப் பார்த்து, 'கோவிந் தனை பஜிக்கும் பக்தியிலாவது இறங்குங்கள்' என்று கூறினார்'' என்றார் நாராயணதீர்த்தர் விடாப் பிடியாக.

''அப்படிப் பொருளில்லை, ஸௌம்யா! கோவிந்தனை பஜிக்காதவர்கள் எல்லாம் மூடமதிதான் என்பது ஆசாரியர் கருத்து. உணர்வுகளை யெல்லாம் அழித்துக் கொண்டு

இதய குகையில் ஒன்றி இருப்பது மட்டுமே அத்வைதம் என்பதல்ல. உணர்வுகளையெல்லாம் அழகுமயமாக்கிக்கொண்டு இந்த உலகத் தோற்றத்தைப் புனைந்த மகாகவியுடன் சௌந்தரியத் தொடர்பு கொள்வதும் அதே அத்வைத நிலைக்குத்தான் இட்டுச் செல்லும். ஹரிகதையும், யக்ஷகானமும் நிறையக் கேட்டுள்ள நீயா இப்படிப் பேசுகிறாய்? சாரீரம் தனது அழகின் எல்லையில் சுருதியுடன் இரண்டறக் கலந்துவிட வில்லையா? சாஹித்யம் தனது அழகின் எல்லையில் நாதத்துடன் இரண்டறக் கலந்துவிட வில்லையா? யக்ஷகானம் நடிப்பவர்கள் தங்களது நடிப்பு அழகின் எல்லையை அடையும்போது பாத்திரத்துடனேயே இரண்டறக் கலந்துவிட வில்லையா? ஏன், அதைப் பார்த்துள்ள நீ கூடக் கதாபாத்திரத்துடன் இரண்டறக் கலந்திருப்பாயே! வத்ஸ! இரண்டறக் கலக்கும் அத்வைதத்துக்கு அறிவு வழியான ஞானம் மட்டுமின்றி, அழகு வழியான பக்தியும் உபாயமே என்று ஏன் நீ இன்னமும் உணர்ந்து கொள்ளவில்லை? ஞான விசாரத்தைக் கூறிய ஆசாரியர் தமது மடங்களிலெல்லாம் பூஜைக்கு முக்கியமான இடம் தந்திருப்பதைக் காண நீ ஏன் மறுக்கிறாய்? ஆசாரியரின் பிரஸ்தானத்ரய பாஷ்யத்தைப் படித்ததால் மட்டும் அவரை நீ முற்றிலும் உணர்ந்துவிட முடியாது. சௌந்தரியலஹரியைப் பார். சிவானந்த லஹரியைப் பார். அப்பன் கோவிந்தனை உருவுள்ள அழகாகவும் உருவற்ற தத்துவமாகவும் மாற்றி மாற்றிக் காணும் 'பிரபோத சுதாகர'த்தை உட்கொள்வாய். இதோ ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடத்தில் ஆசாரியராக இருந்த பகவந்நாமபோதேந்திரர்கள் கண்ணனின் அழகில் சொக்கித்தான் அத்வைதானந்தம் அநுபவித்தார். அறிவுக்காக அழகை மறந்தாயானால் அறிவே அழிவாகிவிடும் குழந்தாய்!'' என்றார் சிவராமானந்த தீர்த்தர்.

நாராயண தீர்த்தர் தமது பெயருக்கேற்பத் தீர்த்தமாகத் தெளிந்தார். அவரது உள்ளத்தில் அழகுணர்ச்சி குமுறியது; அவர் ஆடியில் கற்றறிந்த பரதக் கலை நயங்களும் லயங்களும் அவரது மேனி எங்கும் பொங்கியது; இத்தனை காலமாக அவர் அடைத்து வைத்திருந்த நாத கர்ப்பம் அவரது மூலாதாரத்தில் குமுகுமுவென விம்மியது. அதற்கு அவரால் வெளியுருவம் தர இயலவில்லை. எனவே, உள்ளே குமுறிய குமுறல் அவரது ஜடரத்தையே முறுக்கிப் பிழிந்தது. சொல்லொணாத வயிற்று நோவில் துடித்தார் நாராயண தீர்த்தர்.

அழகான உணர்வுகளை நாம் பெற்று அதனால் ஆண்டவனை ஸ்பரிசிக்கிறோமோ இல்லையோ, அவலமான உணர்வுகள் வந்தால் அவன் அருளைத்தான் நாடுகிறோம். பரமஹம்ஸ ராமகிருஷ்ணருக்குத் துறவு தந்த தோதாபுரி ஸ்வாமிகளுக்கு வயிற்றுவலியைத் தந்து அவரது வறட்டு வேதாந்தத்தில் பக்திப் பாலைப் பொழிந்தாள் தேவி. திருநாவுக்கரசு ஸ்வாமிகளுக்கு வயிற்றுவலியைத் தந்து அவரை ஜைனத்திலிருந்து சைவத்துக்கு ஆட்கொண்டான் ஈசன். தேவாரம் பிறக்க ஒரு வயிற்று நோய் தேவை எனில், இப்போது கண்ணனைக் குறித்து ஓர் இசை நாடகம் பிறக்கவும் வயிற்று நோய் தேவைப்பட்டது போலும்! துன்ப வகையில் பிறக்கும் இலக்கிய சுகம் வேறெதில் பிறக்கும்?

தேசாந்திரியாகத் திரிந்து வந்த நாராயண தீர்த்தர் நடுக் காவேரியை நடுநிசியில் வந்தடைந்தார். வயிற்றுநோவு தாங்க முடியாமல் திருகி எடுத்தது. 'உடல் வேறு ஆன்மா வேறு' என்கிற உணர்வைச் சிறிதும் கைக்கொள்ள முடியாதிருந்த தீர்த்த நாராயணர், தமது ஆன்ம சக்தியால் பொறுத்துக்கொள்ள முடியாத உபாதையைத் தெய்வ பக்தியால் தான் தாங்கிக் கொள்ள முடியும் எனப் புரிந்து கொண்டார். 'வயிற்று நோவு தீர வேண்டுமென்பதில்லை; இதைச் சகித்துக் கொள்ளும் திடத்தையாவது தருவாய் வேங்கடநாதா' என்று அகம் கரைந்து பிரார்த்தித்தார். நோயின் உக்கிரம் குறைவது போலிருந்தது. ஸ்ரீநிவாசனின் நினைவிலேயே நித்திரை கொண்டார்.

நித்திரையிலும் நீங்காமல் வந்தான் நெடுமால். பாஞ்சஜன்யத்தில் கம்பீரத்தையும், முரளியில் நளினத்தையும் எழுப்பும் தனது திருவாய் திறந்து நளின கம்பீரமாகப் பேசினான். 'நாளைக் காலையில் நீ விழித்தவுடன் காணும் ஜீவனைப் பின் தொடர்ந்து செல்க' என்று பணித்தான். பணிந்தார் தீர்த்த நாராயணர்.

விடிய விடிய அவர் எழுந்தவுடன் கண்ணில் பட்டது ஒரு பன்றி. ''திருமகள்நாயகா! உன் திருஉள்ளம் உணர்ந்தேன். நான் வேதாந்தம் கரைகண்ட சந்நியாசி என்றும், நான் வழிகாட்ட மற்றவர் என்னைப் பின் தொடர வேண்டும் என்றும் நான் இறுமாப்புறக் கூடாது என இதயம் கனிந்தாயா? பிராணிகளில் மிக இழிவானதாகக் கருதப்படும் பன்றியையும் என் வழிகாட்டியாகக் கொண்டு நான் அதைப் பின்தொடர வேண்டுமென்று விதித்து எனக்கு விநயம் புகட்டுகிறாயா?'' என்று வியந்தார்.

சற்றும் கூசாமல் வராகத்தைப் பின் தொடர்ந்தார். அது அவருக்குத் தத்துவ ரீதியிலும்கூட வழிகாட்டியாகத்தான் இருந்ததோ என்னவோ? அசுத்தங்களை உண்டு உலகைத் தூய்மைப்படுத்தும் வராகம்போல் மேன்மக்களும் உலகின் இழிதகைமைகளைத் தாமே தாங்கி மற்றோரை வாழ வைக்க வேண்டும் என்ற பாடத்தைப் பன்றி புகட்டியதோ என்னவோ ?

வராகம் பூபதிராஜபுரத்தை அடைந்தது. அங்கே பெருமாள் ஆலயத்தில் புகுந்தது. வராக அவதாரமெடுத்த ஆண்டவன் சந்நிதிக்குள் சென்று அப்படியே மறைந்து விட்டது. மறைந்த பொருள்களெல்லாம் அப்போதுதான் தீர்த்த நாராயணருக்குத் துலாம்பரமாக விளங்கின. வேங்கடேசுவரனை வழிபட்டவாறு பூபதிராஜபுரத்திலேயே தங்கிவிட்டார்.

இந்த வரலாறு வெளியே பரவிற்று. பூபதிராஜபுரம் வராகனூர் என்று பெயர் பெற்று, நாளடைவில் வரகூர் என்றாயிற்று.

வரகூருக்கு அவரை வரவழைத்த வரதன் பேசாதிருந்து விடுவானா?

'இன்ன வகைப் பூமியில்தான் இன்ன வகைப் பயிர் விளையும்' என்பது போல் வரகூருக்கென்றே விளையக்கூடிய ஒரு பயிர் இருந்தது. அதுதான் இசைப் பயிர். நாயக மன்னர்களின் நாட்களிலிருந்து அது சங்கீதத்துக்கு ஒரு க்ஷேத்திரமாயிருந்தது. கிருஷ்ணைப் பிரேமையைச் சுழித்துச் சுழித்துப் பாடிய க்ஷேத்திரக்ஞரை ஈர்த்த ஊர் அது. அந்த ஊரின் பண்பில் நாராயணரின் உள்ளத்தைப் புரட்டினான் நாரணன். அவர் ஸ்ரீமத் பாகவதத்தைப் புரட்டினார். இரண்டு ஏடுகளிலுள்ள இரண்டு வாக்கியங்கள் அவரது கண்களிலும் கருத்திலும் நிறைந்தன. 'மங்களாலய' என்பது ஒரு வாக்கியம். 'மங்களம் ருக்மிணி' என்பது மற்றொன்று. அப்போதே தீர்த்த நாராயணரின் அகத்தில் மங்களம் பொல்லென்று பரவியது.

தீர்த்த நாராயணரின் அகத்தில் கனத்து மண்டிக் கிடந்த கண்ணன் அன்பும், நாபியில் அடர்ந்து குழ குழத்த இசைச் செல்வமும், அங்கங்களி லெல்லாம் ஒளிந்திருந்த நடன சௌந்தரியமும் இப்போதுதான் அவரை விட்டு வெளிப்படத் தொடங்கின. 'கண்ணனின் லீலாநதி' என்று பொருள்படும் 'ஸ்ரீ கிருஷ்ண லீலா தரங்கிணி' என்ற சங்கீத நாடகம் தீர்த்த நாராயணரிடமிருந்து பெருகத் தொடங்கியது. தீர்த்தத்திலிருந்து தரங்கம் உண்டாவது பொருத்தம்தானே? முன்பு ஜயதேவர் வளர்த்ததும், இனி வரப்போகும் காலத்தில் தியாகையர் வளர்க்கப் போவதுமான இசை நாடகப் பிரேம பக்திக்கு மற்றோர் அணிகலனானார் தீர்த்த நாராயணர்.

கண்ணனின் ஜனனத்திலிருந்து ருக்மிணி கல்யாணம் வரையுள்ள அற்புதமான கதைப் பகுதி தீர்த்தநாராயணரின் கனிந்த உள்ளத்தில் இசை மலர்களாகப் பூத்தன. சரளமும், சரளமும் கொஞ்சும் சம்ஸ்கிருத மொழியில் கவிதையின் சுவாஸமாகக் கருதப்படும் பிராஸ அழகுகள் மிளிர, சொல்லும் பொருளும் இசையும் லயமும் எல்லாமாகக் கலந்து குலுங்கி ஆடின. பாகவத சம்பிரதாயமொன்றே ஆடிப் பாடிற்று. தீர்த்தநாராயணர் ஆடிப் பாடினார். அதற்கிசைய 'கல்' 'கல்' எனச் சதங்கையொலி எழுப்பிச் செந்தாமரைக் கண்ணனும் ஆடினான். 'சங்கீத ரஸ ரஸிக சரஸ ஸல்லாபன்' என்று அவர் அவனைப் பாட, அதற்கேற்ப அவன் ஆனந்தமுடன் சலங்கை குலுங்க ஆடி அபிநயித்தான்.

பன்னிரண்டு தரங்கங்களில் ஸ்ரீ கிருஷ்ண லீலா தரங்கிணி நிறைவுபெற்றுள்ளது. தீர்த்த நாராயணர் பிறவி எடுத்த பயனும் நிறைவு பெற்றது. அந்த நிறைவில் மெலட்டூர் பாகவத மேளம், குச்சிப்புடி நடனம் இவை போன்ற ஓர் இசை நாடக மரபு பிறந்தது.

தீர்த்த நாராயணர் திருப்பூந்துருத்தியைத் தமது வாசஸ்தானமாகக் கொண்டு பக்திப் பயிரை நன்கு அறுவடை செய்துகொண்டிருந்தார்.

தஞ்சை மன்னன் அமரசிம்மன் துறவிக்கு நிலம் சாஸனம் செய்து ஆசிரமமும் அமைத்துத் தந்தான்; ஆலயம் எழுப்பித் தந்தான்! தீர்த்தமும் வெட்டித் தந்தான்.

அத்திருப்பூந்துருத்தித் தலமே தீர்த்த நாராயணர் உடல் வாழ்வை உகுத்த இடமாயிற்று. வெளியூருக்குச் செல்லுமுன் அனைவருக்கும் கடிதம் எழுதித் தெரிவிப்பது போல், தாம் உடலை விடப் போவதையும் தீர்த்த நாராயணர் முன்கூட்டி அறிவிக்க, மாசி மாதம் சுக்கிலபக்ஷ அஷ்டமி திதியில் அமரசிம்ம மன்னனும் மற்ற அன்பர்களும் அடியார்களும் திருப்பூந்துருத்தியில் குழுமினர். அவர்களுக்கெதிரே வழக்கத்தைக் காட்டிலும் அதிகத் தேஜஸுடன் விளங்கினார் தீர்த்த நாராயணர். நாழிகை ஆக ஆக திவ்விய தேஜஸ் பெருகிக் கொண்டே வந்தது. கர்ப்பூர ஒளியைவிடச் சிறந்த சங்கீத ஒளியில், கர்ப்பூர மணத்தைவிடச் சிறந்த சங்கீத மணத்தில் அப்படியே கரைந்தார் சந்நியாசி.

தீர்த்த நாராயணர் மறைந்தார்; தீர்த்தம் மறையவில்லை. கிருஷ்ண லீலா தரங்கிணி என்ற பெயரில் அது வற்றாத நதியாக நமது இசை உள்ளவரையில் பாய்ந்துகொண்டே இருக்கும்.

— 'கன்யா'

## " சங்கீத சந்நியாசி "

சங்கீத சந்நியாசியான ஸ்ரீ தீர்த்த நாராயண சுவாமிகளின் ஆராதனை தினம் இம்மாதம் 28ந் தேதி நிகழ்கிறது. அதற்கு முன்னும் பின்னுமாக ஆறு நாட்களுக்கு 25–2–66லிருந்து 2–3–66 முடிய திருப்பூந்துருத்தியில் விமரிசையாக விழா நடத்த உத்தேசிக்கப்பட்டிருக்கிறது. குன்றக்குடி அடிகளாரைத் தலைவராகக் கொண்ட விழாக் குழுவினர் ஸ்ரீ தீர்த்த நாராயணரின் நூல்களையெல்லாம் பதிப்பிக்கவும், அவரது பாடல்களைப் பிரசுரம் செய்யவும் முயற்சிகள் மேற்கொண்டிருக்கிறார்கள். (இசைக் கச்சேரிகளிலும், ஹரிகதைகளிலும், பஜனைகளிலும் ஓரளவுக்குக் கையாளப்பட்டு வரும் 'கிருஷ்ண லீலா தரங்கிணி' தவிர 'சாண்டில்ய பக்தி சுதார்ணவம்' யக்ஷகானத்திலமைந்த 'பாரிஜாதாபகரணம்' ஆகியனவும் சுவாமிகளால் இயற்றப்பெற்றதாகக் கருதப்படுகிறது.) விழாக்குழுவினரின் திட்டங்களுக்கு ஆஸ்திகர்களும், இசையன்பர்களும் உதவிபுரியவேண்டும்.

திரவியம் அனுப்பவேண்டிய முகவரி : ஸ்ரீ எஸ். வேங்கடராமன், பொருளாளர் ஸ்ரீ தீர்த்த நாராயண குரு ஸ்வாமிகள் ஆராதனை இசை விழாக் குழு, 1/8, அக்ரஹாரம், திருப்பூந்துருத்தி, தஞ்சைமாவட்டம்.

# 3

அத்தை வருவதாகக் கடிதம் எழுதியிருந்தாள் என்றும் அவளுடன் உதவாக்கரை ஜெகுவும் வரப் போகிறானென்றும் கமலா சொன்னாள். ஆனால் இரண்டு முறை ரயில் நிலையத்துக்குச் சென்ற வண்டி அத்தை வரவில்லை என்று திரும்ப வந்தது. வருவதாகக் கடிதம் எழுதி விட்டு அவள் ஏன் வரவில்லை?

ருக்கம்மா சொன்னாள்: ''அப்படியெல்லாம் கடிதம் போட்டு விட்டு, சொன்ன நேரத்துக்கு வந்து நிற்கிறவளில்லை இந்த அத்தை.''

''ஏன்?'' என்று கேட்டான் நாணு.

''பங்களூரில் ஒரு பெரிய மில் சொந்தமாக இருக்கிறது அவளுக்கு... அவள் கிழித்த கோட்டை அவளுடைய அகமுடையான் தாண்ட மாட்டார்.''

''அதற்கும் சொன்ன நேரத்துக்கு வருவதற்கும் என்ன சம்பந்தம், ருக்கம்மா?''

நாணுவின் அறியாமையைக் கண்டு உள்ளூற வருந்திய ருக்கம்மா அவனுக்கு எவ்வாறு கல்யாணி அம்மாளின் பெருமையை விளக்குவதென்று யோசித்தாள். ''குறிப்பிட்ட நேரத்துக்கு வந்து நின்னா பெரிய மனுஷாளாடாப்பா? எப்போ வருவாள், எப்போ வருவான்னு நம்மையெல்லாம் ஏங்கித் தவிக்க வைத்து விட்டு, அப்புறம் வந்தால்தானே அழகு? கூட்டத்தில் பேச வருகிறவர்கள் ஏழு மணிக்கு வரச் சொன்னால் எட்டு மணிக்குத்தானே வருகிறார்கள்? ஏன்?''

அவளுடைய விளக்கம் நாணுவுக்கு வேடிக்கையாகத்தான் இருந்தது. ஆனால் அத்தையின் செல்வச் சிறப்பையும், அதிகார மனப்பான்மையையும், கர்வமான போக்கையும் தெரிந்து கொண்டான்.

மூன்றாம் முறையாக வந்த கடிதத்தில் அத்தை, முன் இரண்டு முறைகளும் தான் வர முடியாமற் போனதற்குக் காரணங்களை விளக்கி, இம்முறை தவறாது வருவதாக எழுதியிருந்தாள். ரயில் நிலையத்துக்கு நாணுவும் சென்றான். ''ஜெகுத் தடியனை யார் வரச்



சொன்னு? அவனைக் கண்டாலே எனக்குக் கட்டோடு பிடிக்க வில்லே'' என்ருள் கமலா, வழி நெடுக.

நல்ல பருமனும் செவப்புமாய், வைரமும் பட்டும் மின்ன அத்தை வண்டியிலிருந்து இறங்கினுள். அவளுக்குப் பின்னல் ஒல்லி யாய் ஒடிந்து விழுகிறதுபோல, ஜெகு இறங்கினுன். 'ளொள்' என்று குரைத்துக் கொண்டு நாய் ஒன்று அடுத்ததாகக் கீழே இறங்கிற்று.

''இது யார்டா இவன்?'' என்று கேட்டாள் அத்தை, நாணு வைச் சுட்டிக்காட்டி. ஆனல் அவளுக்கு எல்லா விவரமும் தெரி யும் போலிருந்தது. எனவே, பதிலே எதிர்பார்க்காமல், ''அநாதை சம்ரட்சணமோ?'' என்று தொடர்ந்தாள்.



ஏ.எஸ்.ராகவன்

நாணு கூசிப் போனுன். முகம் சுருங்கிவிட்டது அவனுக்கு.

கமலா ஒன்றும் சொல்லவில்லே. வெறுமனே அசட்டுச் சிரிப் புச் சிரித்தாள்.

இரண்டு தோல் பெட்டிகள், படுக்கை, ஒரு கூஜா, பிரம்புக் கூடை, பிளாஸ்கு, மருந்துப் பெட்டி, டிரான்ஸிஸ்டர், மயில் கண் விசிறி எல்லாவற்றையும் கந்தன் வண்டியில் கொண்டு போய் வைத்தான்.

''டேய் ஜாக்கி, அங்கே போகாதே'' என்ருன் ஜெகு. அவன் யாரைப் பார்த்து இவ்வாறு உத்தரவிடுகிருன் என்று திரும்பிப் பார்த்தான் நாணு. உடல் முழுதும் வெள்ளே வெளேர் என்று உரோமங்களால் சிறு துணி மூட்டை போல் மூடப்பட் டிருந்த நாய்க்குட்டி நாக்கை நீட்டிக் கொண்டு நின்றது. நாய்கள் ஏன் அடிக்கடி நாக்கை வெளியே நீட்டுகின்றன என்பதற்குக் காரணம் நாணுவுக்கு அப்போதுதான் புரிந்தது. அந்த நாய் மட்டும் நாக்கை நீட்டாதிருந்தால் அது நாய்க் குட்டி என்ற விவரமே எவருக்கும் தெரியாது.

ஜெகு அதைத் தூக்கி வைத்துக் கொண்டான். கால்சிராயும் புஷ்கோட் டும் அணிந்திருந்தான் அவன். குளிர்ச்சிக் கண் ணுடி தரித்திருந்தான். தலேயைவேண்டுமென்றே முன் புறம் கோழிக் கொண்டை போலத் தூக்கி வாரியிருந்தான்.

''மாட்டு வண்டிதானு? வாட் நன் ஸென்ஸ்?'' என் ருன் அவன், முகத்தைச் சுளித்தபடியே.

''போகிற இடத்துக் கெல்லாம் நம்ம 'கடிலாக்' மோட்டார் கூட வரு மாடா, ஜெகு?'' என்ருள் அத்தை.

''ஏன், இதற்கு என்ன வாம்?.... உங்கள் மோட் டாரைவிட இந்த வண்டி பிரமாதமாக ஓடும், அத்தை!'' என்ருள் கமலா.

''இதிலே போனுல் முதுகு போய்விடும்!'' என்ருன் ஜெகு கிண்ட லாக.

கமலா விடுவாளா? ''முதுகு போகாது.... உன் முதுகுக் கூனல் போய்விடும்'' என்ருள்.

ஜெகு சிரித்து விட் டான். ''மம்மி! கமலா வுக்கு வர வர வாய் அதிக மாகி விட்டது. இல் லேயா?'' என்றான்.

'மம்மி' சிரித்தவாறே, ''அவளிடம் பேசி ஜெயிக்க முடியாதுடா உன்னுலே..... தெரிந்து கொள்'' என்ருள்.

அத்தையும் கமலாவும் மட்டும் வண்டியில் ஏறிக் கொண்டார்கள். நாணு வும் ஜெகுவும் நடந்தே போவதென்று தீர்மானம் ஆயிற்று. வண்டியில் அத் தையும் அவளுடைய பெட்டி படுக்கையும் ஏறிய பிறகு கமலாவுக்கே இடமில்லே.

ஜெகு நாணுவிடம் பேசவேயில்லே. தன் நாய்க் குட்டியுடன்தான் பேசிக் கொண்டே வந்தான். அதற்கு அவனுடைய பாஷை புரியுமோ அல் லது அவனுக்கு அதனு

டைய பாஷை புரியுமோ, நாணுவுக்குத் தெரியாது. ஆனால் இந்தச் சம்பாஷணை ஜாக்கிக்கு அலுத்துப் போய் விட்டது போலும். அது ஜெகுவின் கையிலிருந்து எகிறிக் குதித்து முன்னால் ஓட்டமாக ஓடிற்று.

''யூ ப்ளடி ஃபூல்!.... எங்கே ஓடறே தலை தெறிக்க?'' என்று கத்தினான் ஜெகு.

நாணு சிரித்தான்.

''ஏன் சிரிக்கிறாய்?'' என்று வியப்புடன் கேட்டான் ஜெகு.

''நீங்கள் அடிக்கடி இங்கிலீஷ் வார்த்தையில் இடறி விழுகிறீர்களே..... அதைப் பார்த்து.....'' என்றான் நாணு.

''ஓ! அதுவா ? நான் படிக்கிற பள்ளிக் கூடத்திலே ஆங்கிலோ இந்தியர்கள் மிகுதி... அவர்களோடு பேசிப் பேசிப் பழக்கமாகி விட்டது...... அது சரி, வாட் ஈஸ் யுவர் நேம்... ?''

''நாராயணன்.''

''நார்யாணன்.... குட்.... குட்....''

''நார்யாணன் இல்லே; நாராயணன்.''

''நெவர் மைண்ட்.... நார்யாணன், நாராயணன் எல்லாம் ஒன்றுதான்.'' ஜெகு சிரித்தான்.

கமலா கேலி செய்தது போல் ஜெகுவுக்குக் கூனல் முதுகுதான். வயது ஏறக் குறைய நாணுவின் வயதுதான். ஆனால் முகத்தில் முதுமை கூடியிருந்தாற் போலிருந்தது. அவனுக்கு வேலூருக்கு வரவே விருப்பமில்லையாம். 'இந்தப் பட்டிக்காட்டில் என்ன இருக்கிறது?' என்று கேட்டான். ஊட்டி, கொடைக்கானல், குற்றாலம் போல் ஆகுமா! மம்மியின் பிடிவாதத்தால் தான் புறப்பட்டு வந்தானாம். வழி நெடுக அம்மாவை அவன் திட்டினான். 'இருக்கட்டும்..... நான் சும்மா விடப் போவதில்லை.... இந்த ஜெகு யார் என்பதை அவளுக்குக் காட்டுகிறேன்' என்று உறுமினான். அத்தையைக் கண்டால் ஜெகுவுக்கும் பிடிக்கவில்லை என்பதே நாணுவுக்குப் போதுமானதாக இருந்தது. ரயிலிலிருந்து இறங்கியதும் இறங்காததுமாக நாணுவை அநாதை என்றானல்லவா ?

மாடியில் நாணுவின் அறைக்கு எதிரே ஜெகுவுக்கு இடம் தரப்பட்டது. அத்தைக்கு வாசல் அறை முன்பே தீர்மானமாகி விட்டிருந்ததால் அவள் மாடிக்கு வரவில்லை. அந்த அறை அவளுக்குப் பிதுரார்ஜிதம். எப்போது வேலூர் வந்தாலும் அங்கேதான் தங்குவாள். மஞ்சள் காணி என்பார்களே, அது போல் சீதனமாக வந்தது.

''மம்மி, வீவிலே பொழுது போகாதேன்னு பார்த்தேன். நல்ல வேளை, நாணு இருக்கிறான்!'' என்றான் ஜெகு.

அத்தை முகத்தைச் சுளித்தாள். ''அவனோடு சேராதே..... அது அசுர வர்க்கம் '' என்றாள்.

''கீப் கொயட், மம்மி.....'' என்று சொல்லி விட்டுப் போய் விட்டான் ஜெகு.

''காலம் கெட்டுப் போய் விட்டதடியம்மா !...... இந்தத் தடியன் கீப் கொயட்டுங்கறான்!'' என்றாள் அத்தை. தன் பிள்ளையாக இருக்கக் கொண்டு தன்னை இவ்வாறு அதிகாரம் செய்து விட்டுப் போயிருக்கிறான் என்கிற பெருமை தொனித்தது குரலில். ''நான் ஒன்றும் கீப் கொயட்டில்லே.... டே கந்தப்பா, போய்ச் சிங்காரத்தை வரச் சொல்லு. எனக்குப் பூட்டுக்குப் பூட்டு நழுவிப் போகிறாற்போல இருக்கு'' என்றாள்.

கட்டுக் குடுமி முதலியார் வந்தார்.

''வா, சிங்காரம். எந்த வேளையில் புறப்பட்டேனோ தெரியவில்லே, உடம்பு உடம்பாகவே இல்லே. கை காலெல்லாம் வலி உயிர் போகிறது. நெஞ்சுக்குள்ளே இரும்புச் சல்லடையை விட்டுக் கரகரவென்று சலிக்கிற மாதிரி இருக்கு'' என்றாள் அத்தை.

முதலியார் சிரித்தார். அவரும் அத்தையும் சிறு வயது முதலே ஒன்றாய்ப் படித்தவர்கள். அவளுடைய போக்கை நன்றாக அறிந்தவர் அவர். ''கல்யாணிம்மா, கோளாறு என்னவென்று நாடியைப் பிடித்துப் பார்த்தால் தெரிந்து போகிறது....அதற்குள்ளே என்னை எதற்காகப் பயப்படுத்தறீங்க?'' என்றார்.

''நீயா பயப்படுவே?...... வியாதிதான் உன்னைக் கண்டால் பயப்படறதே'' என்றாள் அத்தை.

நாடி பார்த்தார் முதலியார். பட்டுத் துணி ஒன்றை அத்தையின் கையில் வைத்து அதன் மூலம் நாடி பட்டுத் தெறிப்பதைக் கண் மூடி உணர்ந்து கொண்டதும், ''த்சொ..... த்சொ'' என்றார் அவர்.

''என்னடாப்பா?'' என்று கேட்டாள் கல்யாணி அம்மாள்.

''உடம்பு உடம்பாகவே இருக்கிறதும்மா. அந்த இரும்புச் சல்லடையைக் காணவே காணுமே!''

''நீ ரொம்பக் கண்டாயோ!..... நீ வருவதற்கு முன்னாலே நெஞ்சே புரண்டு போச்சு எனக்கு.''

''நெஞ்சு புரள்றது நல்லதுதான், கல்யாணியம்மா. அது புரளாமல் இருந்தால்தான் ஆபத்து........ சில பேருக்கு நெஞ்சு கல்லா இருக்கிறதைப் பார்த்திருக்கீங்களா? அவர்களெல்லாம் பூமிக்குப் பாரம்.''

''என்னவோப்பா, நீயாவது என்னைப் புரிந்து கொண்டிருக்கிறாயே, அது போதும். ஆமா, சிங்காரம், கொஞ்ச நாளா கண் பார்வைகூடச் சரியாக இல்லே... கோலம் போட்டாற் போல, நெளி நெளியா, கண் முன்னாலே ஓடற மாதிரி இருக்கு...அது ஏன்?''

''மூக்குக் கண்ணாடி போட்டுக் கொள்ளுங்கள்......சரியாகி விடும்.''

''போட்டுக் கொண்டும் பார்த்தாயிற்று. அதற்கு ஐந்நூறு ரூபாய் பில் ஆனதுதான் கண்ட பலன்.''

வியாதிக்குத்தான் மருந்து கொடுக்கலாம். அந்தஸ்துக்கு மருந்து தர முடியுமா ? முதலியார் என்ன செய்வார்? சில மருத்துவர்கள் நோயாளியின் கைத் தாதுவுக்குப் பதிலாகப் பைத்தாதுவைப் பார்ப்பார்களாம். அது அவருக்குத் தெரியாது.

''உங்களுக்கு மருந்தே தேவையில்லே.... என்னைக் கேட்டால், மருந்தே சில சமயம் விஷமாகவும் ஆகிவிடும் என்றுதான் சொல்வேன்'' என்றார்.

''விஷமாகவா?''

''ஆமாம்..... விஷம்கூடச் சமயத்திலே மருந்தாக உபயோகமாவதுண்டு.''

அத்தையின் கண் முன் இப்போது உண்மையாகவே தெளி தெளியாக, கோலம் போட்டாற் போல ஓடிற்றே என்னவோ, அவள் விழித்தாள்.

''நோயற்ற வாழ்வுதான் குறைவற்ற செல்வம். மருந்தைக் கூடியவரை விலக்க வேண்டும், கல்யாணியம்மா..... நோயிலிருந்து உடம்பைக் காப்பாற்ற வேண்டும் என்பார்களே, அதற்குப் பதிலாக மருந்துகளிலிருந்து உடம்பைக் காப்பாற்றிக் கொள்ள வேண்டுமென்று சொல்வதே சரியாக இருக்கும்.''

அத்தை சிரித்தாள். ''சிங்காரம்! நீ வைத்தியம் செய்வதை விட்டு விட்டு எப்போது சாமியாராகப் போனாய்?'' என்று கேட்டாள்.

''நான் எங்கேம்மா சாமியாராகி யிருக்கிறேன்?..... உங்கள் அண்ணனைச் சொல்லுங்கள், பொருத்தமாக இருக்கும்!''

அத்தை நிமிர்ந்து உட்கார்ந்தாள். குடும்ப சம்பந்தமாக யாரிடமாவது ஒரு மூச்சு பேசியாக வேண்டுமே, யார் அகப்படுவார்கள் என்று தவித்துக் கொண்டிருந்தவளுக்கு முதலியார் வசமாகச் சிக்கிக் கொண்டார். ''அதை ஏன் கேக்கிறே, போ..... அண்ணா சாமியாராகவே ஆகிவிட்டார்..... அரை நாழி வீட்டில் தங்குவதில்லை. பொறுப்பாகக் கவனிக்க நாதியே இல்லாமல் போய்விட்டது பண்ணை...... போதாத குறைக்கு......'' அத்தை குரலைத் தணித்துக் கொண்டு முதலியார் காதில் மட்டும் விழுகிறாற்போல், ''போதாத குறைக்கு, அநாதை சம்ரட்சணம் வேறே நடக்கிறது இங்கே. தொலைச்சுத் தலை முழுகியாகி விட்டதுன்னு நினைத்த சனியன் மறுபடியும் வந்து புகுந்து கொண்டிருக்கிறது'' என்றாள்.

முதலியார் இதை எதிர்பார்க்கவில்லை. வாஸ்தவத்தில் நாணுவைப் பற்றிய நினைவே அவருக்கு இல்லை. ஊருக்குத் திரும்பிய அன்று அவனைச் சந்தித்ததோடு சரி. அதன் பிறகு இங்கு வரவே அவருக்கு ஒய்வு கிட்டவில்லை. இப்போது கல்யாணி அம்மாளின் வாயிலிருந்து நெருப்பைப் போன்ற சொற்கள் வெளிப்படவும் அவர் துணுக்குற்றார். ''கல்யாணியம்மா, உங்களுக்கு ஆண்டவன் ஒரு குறைவும் வைக்கவில்லை...... அநாவசிய விசாரம் எதற்கு?..... அண்ணாவுக்கு மனசு ரொம்பப் பெரிசு...... தவிரவும் உலகத்திலே யார் அநாதை, யார் அதிகாரி? ஒருவருமில்லை. விட்டுத் தள்ளுங்கள்'' என்றார்.

''ஒரு பேச்சுக்குச் சொன்னேன், சிங்காரம். எனக்கு என்ன வந்தது? சொத்து பூராவையும்தான் அந்தச் சுந்தரியின் பிள்ளைக்குத் தரட்டுமே, நான் ஏன் என்று கேட்பேனா?..... நீ சொன்னாற்போல எனக்கு ஆண்டவன் நிறையக் கொடுத்திருக்கிறார்!''

பேச்சில் வயிற்றெரிச்சலும் ஆற்றாமையுமே சம விகிதத்தில் வெளிப்பட்டதைக் கண்ட சிங்கார முதலியார் அவளுடன் இது பற்றி விவாதிப்பது அர்த்தமற்றதென்று முடிவு செய்து விட்டார்.

''புறப்பட்டு விட்டாயா?..... எதற்கும் ஒரு டானிக்காவது கொடேன்.... உடம்பு கல்லாட்டம்தான் இருக்கு...... இருந்தாலும்....'' என்றாள் அத்தை. சல்லடையும், தெளி தெளியும் போன மூலை தெரியவில்லை.

''சரி. தருகிறேன்.... ஆனால் ஒரு நிபந்தனை.....''

''என்ன?''

''மருந்து சாப்பிடுவதற்கு முன்னாலே படபடப்பு கூடாது.... கோபம் கூடாது..... களைப்பாக இருக்கிற போதும் மருந்து சாப்பிடக் கூடாது.''

''கோபதாபமெல்லாம் போயிடுத்து, சிங்காரம். பழைய கல்யாணி இல்லை நான். தெரிஞ்சுக்கோ.''

முதலியார் புறப்பட்டுப் போனார். தான் விதித்த நிபந்தனை பற்றி அவருக்கே சிரிப்பு வந்தது. உண்மையில் மருந்து சாப்பிட அது நிபந்தனை அல்ல. கல்யாணி அம்மாளுக்கு அவர் கொடுத்த மருந்தே அதுதான். கோபமும் படபடப்பும் நீங்கி விட்டால் கல்யாணி அம்மாளுக்கும் நல்லது, அந்த வீட்டுக்கும் நல்லது.



''பழைய கல்யாணியாக இருந்தால் இப்படியா ஓய்ந்து உட்கார்ந்திருப்பேன்? எல்லா ஆசாபாசத்தையும் விட்டு விட்டுத்தான் நமக்கென்ன என்று விலகி யிருக்கிறேனே!'' என்று தனக்குத் தானே விமரிசித்துக் கொண்டாள். ''நான் எதையும் காதில் போட்டுக் கொள்ளப் போவதில்லை. எது எக்கேடு கெட்டால் எனக்கென்ன? இன்னும் நான்கு அநாதைகளை வளர்க்கட்டுமே, நான் மூச்சு விடுவேனா? ஊஹூம். ஆனால் ஒன்று. நம் வயிற்றில் பிறந்ததே நமக்கு உதவுவதில்லை. இவனெல்லாமா உதவப் போகிறான்? பழி வராமல் இருந்தால், போதாதா? அந்த மகராஜி சுந்தரி அடித்த கூட்டி கொஞ்சமா நஞ்சமா?.... போதுமடியம்மா போதும்.....'' எதிரே யாருமில்லாத போதே அத்தை பொரிந்து தள்ளினாள்.

ஆனால் மாடியிலிருந்து இறங்கி வந்த நாணுவின் செவிகளில் இது தெளிவாக விழுந்தது.

''ஊரே சிரித்தது அப்போது. அதை எல்லாம் நான் மறந்து விட்டேனா, என்ன? வெளியே தலை காட்ட முடியாமல் போச்சு.

இந்த அண்ணுவுக்கு மூளை ரொம்பக் கெட்டிருந்தது. கடைசியில் அந்தப் புண்ணியவதி ஊரைவிட்டே ஓடிப் போனுள். ஆனல் இதையெல்லாம் நான் சொல்வானேன்?.... எனக்கோ படபடப்பே ஆகிறதில்லை..... அக்ஞானத்தை மூட்டை கட்டி வைக்க வேண்டும்.... மருந்து சாப்பிடற வேளையில் இதெல்லாம் கூடாது...... நான் எதையுமே காதில் போட்டுக் கொள்ளப்போவதில்லை.''

கல்யாணி அம்மாள் பிறர் காதில் போடுவதற்காகவே இவ்வளவும் பேசினுள் என்று தோன்றிற்று. மாடிப்படியின் கீழ் ஆணியால் அறையப்பட்டவன் போல நாணு நின்று விட்டான். இரண்டரைக் கட்டையில் ஒலித்த அத்தையின் குரல் அவன் நெஞ்சில் தீயையும் கண்ணில் நீரையும் வரவழைத்து விட்டது.

''நாணுக் கண்ணு, சாப்பிட வரவில்லையா?'' என்று கேட்டவாறே வந்த ருக்கம்மா அவனுடைய கண்ணீரைப் பார்த்து விட்டாள்.

அவன் திரும்பி மாடிக்கு ஓடினுன்.

ருக்கம்மாவுக்குப் புரிந்து விட்டது. இன்னமும் கல்யாணி அம்மாளுக்குப் பழைய வன்மம் தீரவில்லையே என்கிற ஆதுரம் எழுந்தது. அவளுள். அந்த நாட்களை இப்போது நினைத்துப் பார்த்தாலும் உடம்பு ஆடத்தான் ஆடுகிறது. அவளுக்கே அப்படியிருக்குமாஞல் சிறுவன் நாணு என்ன செய்வான்! அவனுக்குக் கல்யாணி அம்மாளின் தாக்குதலைச் சமாளிப்பது கடினம்தான்.

மாடிக்கு அவளும் சென்றுள். படுக்கையில் தலைபுதைத்து விம்மிக் கொண்டிருந்த நாணுவின் அருகில் போய் அமர்ந்தாள். அவனுடைய தலையை வருடியவாறே, ''நாணுக் கண்ணு!'' என்று அழைத்தாள்.

அவன் விம்மினுன்.

''அழாதேடா, ராஜா..... அவள் போக்கு அப்படி......என்ன வேண்டுமாலுைம் சொல்லிக் கொண்டு போகட்டும். அது உன்னை என்ன செய்துவிடும்?'' என்றுள் ஆறுதலாக.

அவன் தலை நிமிர்ந்தான். ''என்ன வேண்டுமானுலும் சொல்ல நான் விடமாட்டேன்'' என்றுன்.

''அப்படி ஒரு காலம் வரட்டும்னுதான் நானும் ஆசைப்படறேன்....''

''வராமல் போகாது. நீ வேண்டுமானுல் பார்.''

ருக்கம்மா பெருமூச்சு விட்டாள். ''என்னடா செய்கிறது, நாணு? நீயும் நானும் ஏழையாய்ப் பிறந்து விட்டோம். நமக்கென்று உலகில் ஒரு நாதியும் இல்லை. ஆனல் காலம் இப்படியே போகாது..... சுந்தரி செய்த தவமெல்லாம் வீணுகி விடுமா என்ன.....நீயே இந்த வீட்டின் எஜமானுக ஒரு நாள் ஆனுலும் ஆவாய்'' என்றுள்.

எந்த நோக்கத்தில் அவள் இவ்வாறு சொன்னுளோ, நாணு அதைத் தொடர்ந்து பேசலானுன். ''நிச்சயமாக ஆகத்தான் போகிறேன்..... அப்போது இந்த அத்தையை என்ன செய்கிறேன் என்று பார்'' என்றுன்.

ருக்கம்மா வயதிலும் அநுபவத்திலும் முதிர்ந்தவள் அல்லவா! சிறுவஞகிய நாணுவின் சீற்றம் எதிர்காலத்தில் எப்படி உருக்கொள்வதாக இருந்தாலும் இப்போது அது இம்மியும் பயன்படாது என்பதை அவள் அறிவாள். எனவே கற்பனையை விட்டு நிகழ்காலத்துக்கு அவனை இழுத்தாள். ''இதோ பார், அத்தையின் வழிக்கே போகாதே.... நான் சொல்வதைக் கேள். உன்னை என் பொறுப்பில்தான் அத்தான் விட்டிருக்கிறுர். நினைவிருக்கட்டும்'' என்றுள்.

அவன் ஆத்திரத்தில் ஏதோ பேசத்தொடங்கினுன். ருக்கம்மா அடக்கி விட்டாள். ''சாப்பிட வா..... ஒன்றுமில்லாத விஷயத்தைப் பெரிதுபடுத்தாதே'' என்று அதட்டி விட்டு எழுந்தாள்.

நாணு எழுந்திருக்கவில்லை. அவனுக்குச் சாப்பிட வேண்டாமென்றிருந்தது. அந்தக் கணமே அத்தையின் கழுத்தை நெரித்து அவளைக் கொலை செய்துவிட வேண்டும் போலிருந்தது. அவனுடைய அம்மாவைப் பற்றி — அவனுடைய தெய்வத்தைப் பற்றி— அவதூறு பேசிய அத்தையின் தொண்டையில் மீண்டும் பேசும் சக்தியே எழாமல் செய்து விட வேண்டும் என்று துடிப்பு எழுந்தது.

''நார்யாணன்!''

அறை வாயிலில் ஜெகு அன்பொழுக அழைத்த குரல் கேட்டு நாணு திரும்பினுன்.

''மைகாட்.... ஏன் அழுகிருய்?''

''நான் அழவில்லை.''

ஜெகு அவனருகில் வந்து தோளில் கையை வைத்து. ''நார்யாணு, நீ அழுதால்கூடப் பாதகமில்லை..... ஆனல் அழுது கொண்டே அழவில்லை என்று மட்டும் சொல்லாதே'' என்று சொல்லிச் சிரித்தான். ''நீ தைரியமா அழறே... என்னுலே முடியவில்லை. கிழே அம்மா வேறே அழுகிருள். சே! சே! இங்கே ஏன் வந்தோம் என்றிருக்கிறது'' என்று அலுத்துக் கொண்டான்.

''அத்தை அழுகிருளா? எதற்காக?'' என்று கேட்டான் நாணு.

''காரணம் வேண்டுமா மம்மி அழுவதற்கு? எப்போது பார்த்தாலும் மூக்கால் அழுவாள் அவள். பெட்டி நிறையப் பணம் வைத்துக் கொண்டு நான் கேட்கிறபோதெல்லாம் இல்லை என்று சொல்லி விடுகிருள்.''

அவன் கவலை அவனுக்கு. அந்தக் கவலையை அழுது தீர்த்துக் கொள்வதில்லை ஜெகு.

''வா, சாப்பிடப் போகலாம்'' என்றுன் அவன்.

எனக்குப் பசியில்லை'' என்றுன் நாணு.

''வாட்? பசியில்லையாவது?... ஸிம்புு... முகத்தைப் பார்த்தால் பத்து நாள் பட்டினி கிடந்தாற் போலிருக்கு.''

ருக்கம்மா சற்று முன்னர் மாடிக்கு வந்ததையும் நாணுவைச் சமாதானப்படுத்தியதையும் ஜெகு பார்த்துக் கொண்டுதானிருந்தான். எனவே நாணுவின் மறுப்பை ஏற்க அவன் தயாராக இல்லை. ''நார்யாணு, லுக் ஹியர்! அம்மாவின் கோபத்தைக் கொண்டு போய் உடைப்பில் போடு. அவளுக்காக நீ சாப்பிடாமல் இருக்கக்கூடாது தெரிகிறதா?'' என்றுன்.

தன் மனநிலையை ஜெகு புரிந்து கொண்டிருந்தான் என்பதே நாணுவுக்குப் போதுமானதாக இருந்தது. ஒரு வகையில் இருவருக்குமே கல்யாணி அம்மாளைக் கண்டால்

# காஷ்மீர் பொக்கே டால்க் உபயோகித்து மணிக்கணக்காக சுகந்தத்துடனும், புதுமையுடனும் இருங்கள்




அன்றலர்ந்த மலர்களின் புதுமையுடனும், சுகந்தத்துடனும்கூடிய காஷ்மீர் பொக்கே டால்க் உங்களைச் சூழ்ந்து பரவி இருக்கட்டும்... உங்களைச் சுற்றி அதன் குளுமையான, பூவிதழ்போன்ற மென்மையான ஸ்பரிசத்தையும், வசீகரிக்கும் நறுமணத்தையும் உணர்ந்து அனுபவியுங்கள். பலமணிகளுக்குப் பிறகும், காஷ்மீர் பொக்கே டால்க்கின் குன்றாத நறுமணமும், புதுமையும், மலர்க்கொத்துகள் போன்று உங்களைச் சூழ்ந்து நிற்பதை உணர்வீர்கள்.



காஷ்மீர் பொக்கே ஒரு உன்னதமான அழகுசாதன டால்க் மட்டுமல்ல. குழந்தைக்கும் ஏற்ற அற்புத டால்க். அது இருவருமே உபயோகிக்கக்கூடிய சௌகரியமான ஒரு பவுடர்!






## காஷ்மீர் பொக்கே

ஆடவர் விரும்பும் சுகந்தமுள்ள டால்கம் பவுடர்

கால்கேட்டின் தரமான தயாரிப்பு

CB.6.21 TAM.

பிடிக்கவில்லை. ஆனால் இருவரிலும் ஜெகு வின் ஸ்தானம் உயர்ந்தது. அவன் அவளை 'கீப் கொய்ட்' என்று அதட்ட முடியும். நாணுவால் முடியாது.

''எழுந்திரு, சொல்கிறேன்'' என்று நாணு வின் கையைப் பற்றி இழுத்தான் ஜெகு. குச்சி போன்ற அவனுடைய கை பட்டதும் நாணுவுக்குச் சிரிப்பு வந்து விட்டது.

''ஏன் சிரிக்கிறாய்?'' என்று கேட்டான் ஜெகு.

''நீ ரொம்ப ஒல்லியாய் இருக்கிறாய்'' என்றான் நாணு.

''நோ, நோ... இது ஒல்லி இல்லை....அத் தனையும் பலம். உனக்குச் சந்தேகமாக இருந் தால் ஒரு குத்து விட்டுக் காட்டட்டுமா?''

''வேண்டாம், வேண்டாம்!''

இருவரும் கீழே இறங்கினர். கல்யாணி அம்மாள் கூடத்தில் ஏதோ பேசிக்கொண்டு தானிருந்தாள். பங்களூர் சங்கதி போலிருந் தது. லாப நஷ்டப் புள்ளி விவரங்கள் புரண்டன!

சாப்பாடு பரிமாறப்படுவதற்கு முன் ஜெகு சீட்டியடித்தவாறு பலகையில் தாளம் போட ஆரம்பித்தான். பாட்டுக்கும் அவ னுக்கும், பாட்டுக்கும் அவன் போட்ட தாளத்துக்கும் சம்பந்தமே இருக்கவில்லை. ஆனாலும் ஜெகுவினிடம் நாணுவுக்கு உள் ளூறப் பிரியமும் நம்பிக்கையும் சுரந்தன.

''தாளம் போடக் கூடாது... இது என்ன வீடா, சினிமாக் கொட்டகையா?'' என்று அதட்டினாள் ருக்கம்மா.

''கீப் கொய்ட். சாதம் போடு'' என்றான் ஜெகு.

''உன் அதட்டலைக் கூடத்தோடு வைத்துக் கொள்.''

ஜெகு சிரித்தான். தாளம் நின்றுவிட்டது. ''ருக்கம்மா, நீ மொஹபத் படம் பார்த் திருக்கிறாயோ?'' என்று கேட்டான்.

''நான் எந்தக் கண்ணறாவிப் படமும் பார்த்ததில்லை'' என்றாள் அவள்.

''மொஹபத்னு என்னவென்றாவது தெரி யுமோ...?''

''நீ பேசாமல் சாப்பிட மாட்டாய்?''

ஜெகு பணிந்து விட்டான். ஆனால் ருக் கம்மா சீற்றம் அடைவதற்கு அடிப்படையில் பரம ரகசியமான காரணம் ஒன்று உண்டு என்று உணர்த்துபவன் போல நாணுவின் விலாப்புறத்தில் சீண்டினான் அவன்.

மாடிக்கு வந்ததும் முதல் வேலையாக நாணு கேட்டான்: ''சாப்பிடும்போது ருக்கம்மாவைக் கேட்டாயே, மொஹபத் என்றால் என்ன, ஜெகு?''

''அடப் பாவி! உனக்குத் தெரியாதா?'' என்று கூறினான் ஜெகு.

''தெரியாததால்தானே கேட்கிறேன்.''

''மொஹபத் என்றால் காதல்.''

''காதல் என்றால்...?''

''இது தெரியாதா? கத்தரிக்காய்!'' ஜெகு ஹோ, ஹோவென்று சிரித்தான். நாணுவின் அறியாமையைக் கண்டு அவனுக்குக் குதூகல மாக இருந்தது. வேலூரில் இப்படி ஒரு சீடப்பிள்ளை தனக்கு வாய்ப்பான் என்று அவன் எதிர்பார்க்கவில்லை. நாணுவினிடம்



''நீ சின்ன வயசிலே மகா மக்கு! எல்லாப் பாடத்திலும் கோழி முட்டை வாங்குவாய்! ஆமா இப்போ என்ன செய்து கொண்டிருக்கிறாய்?''

''கோழி முட்டை அப்போ வாங்கினேன்! இப்போ விற்கிறேன்!''

அபரிமிதமான அன்பு சுரந்துவிட்டது அவ னுக்கு. முதுகில் ஓங்கி ஒரு குத்து விட்டு அந்த அன்பைப் பறைசாற்றினான்.

நாணு அசட்டுச் சிரிப்புச் சிரித்தான்.

''காதலிலே முதுகுக்கும் ஆபத்து உண்டு'' என்று ஓர் உண்மையை எடுத்துச் சொன்னான் ஜெகு. ''முதல் ஆபத்து மனசுக்கு. ஆனால் ரொம்ப சிம்பிளான விஷயம். உனக்குச் சாவகாசமாகச் சொல்கிறேன்.''

சாய்வு நாற்காலியில் சாய்ந்து ஒரு பாடலை இசைக்க ஆரம்பித்து விட்டான் அவன்.

நாணு வியப்புடன் அவனைப் பார்த்தான். காதலைப் பற்றி எடுத்துச் சொல்ல இதோ ஒரு குருநாதர். உடலை வளர்க்கச் சீனு வாய்த்தது போல மனசை, அந்த மனசுக்குள் குறு குறுக்கிற ஆசையை வளர்க்க ஒரு ஜெகு வந்திருக்கிறான்! அவனுடைய உறவு தனக்கு மிகவும் அவசியமானதென்பது ரயிலடியி லிருந்து வந்தபோதே நாணுவுக்குத் தோன்றி விட்டது. இப்போது அது வலுப்பட்டது. அத்தனையைச் சமாளிக்க ஜெகு துணை நிற்பா னல்லவா?

ஆனால் இந்த நட்பு பிற்காலத்தில் அவனை எவ்வளவு தூரம் பாதிக்கும் என்பதை நாணு உணரவில்லை. எது இன்றியமையாதது என்று அவனுக்குத் தோன்றிற்றோ, அதுவே அவ னுக்குப் பேராபத்தாக முடிந்தது.

அவனுடைய வாழ்க்கைப் பாதையில் ஜெகு இன்றியமையாதவனாகி விட்டான்.

அதனால் அந்த யாத்திரையின் போக்கே மாறிப் போயிற்று.

வயதின் முதிர்ச்சியோ, அறிவின் பக்கு வமோ இல்லாத சிறுவன் பாரம்பரிய இழுக்கு கள் சிலவற்றை வெளிப்படுத்திக்கொண்டு விட்டான். இப்படிச் சொல்வதைவிட பாரம் பரியக் குறைபாடுகள், தகாத நட்பைப் பற்றிக் கொண்டு தம்மை வெளிப்படுத்திக் கொண்டன என்றே கூறலாம். (தொடரும்)

[''வந்தேமாதரம்'' என்ற பாடல் பாரதமக்களைச் சுதந்திர எழுச்சி கொள்ளச் செய்தது போல், அமெரிக்காவில், நீக்ரோக்களை அடிமை வாழ்வினின்று விடுவிக்கும் பெரும் உணர்ச்சியைத் தூண்டிவிட்டது ''டாம் மாமாவின் குடில்'' என்ற நவீனம். இப்படி அரசியல் நாவல்கள் நாட்டு மக்களின் வாழ்வில் புத்துணர்ச்சியையூட்டிப் புனர்வாழ்வளிப்பதை இக்கட்டுரை ஆசிரியர் இன்றைய எழுத்தாளர்களுக்கு நினைவூட்டுகிறார்.
—ஆசிரியர்]

அறிவு வளர்ச்சி, விஞ்ஞான சாத்திர அபிவிருத்தி, சமூக பொருளாதாரப் புரட்சி, ஏகாதிபத்திய வல்லரசுகள் குடியேற்ற நாடுகளின் மீது செலுத்தும் கொடுங்கோன்மை ஆகியவை காரணமாக உலக மக்களிடையே கடினமான பிரச்னைகள் பல தோன்றி, வாழ்க்கையை மேன்மேலும் சிக்கலாக்கி வருகின்றன. இவை போதாவென, உலக கம்யூனிஸம் தன்னலங் கருதி, மக்களைப் பலாத்கார முறையில் இறங்கிக் குழப்பம் விளைவிக்கத் தூண்டி வருகிறது. எங்கும் அவநம்பிக்கையும், அமைதியின்மையும் துன்பமும் துயரும் கோர தாண்டவம் புரிகின்றன. அரசியலின் மூலமாகவே தம் பிரச்னைகளுக்குத் தீர்வு காண முடியும் என்ற எண்ணத்தினால் மக்களில் பெருந் தொகையினர் முன்னிலும் அதிகமாக அரசியலில் பங்கெடுத்துக் கொண்டு வருகின்றனர். இன்று அரசியலுடன் தொடர்பில்லாத வாழ்க்கைத் துறை எதுவுமே இல்லை. அரசியலும் மேன்மேலும் சிக்கலடைந்து வருகிறது. அதை நடத்துவோர் இன்று மக்களிடம் நிறைவேற்ற வேண்டிய பொறுப்புக்கள் ஏராளம். ஆனால் அவர்களிடம் போதிய வசதிகள்தாம் இல்லை.

மானிட வாழ்க்கையையும் அதன் பிரச்னைகளையும் கலையழகுடன் சித்திரிப்பதே தன் பணியெனக் கொள்ளும் இலக்கிய வகைகளுள் ஒன்றான நாவல் மேன்மேலும் சிக்கலடைந்து வரும் இப் பிரச்னைகளிலிருந்து ஒதுங்கியிருக்க முடியுமா? 'நாவல் ஒரு கலை. மக்களின் இன்பப் பொழுதுபோக்குக்காகவே அது படைக்கப் படுகிறது. சமூக, அரசியல் வாழ்க்கைப் பிரச்னைகளைப் பற்றி அறிந்து கொள்வதும், சமூக மாறுதல்களுக்கு மக்களை ஆயத்தப்படுத்தி அவர்களுக்கு வழிகாட்டுவதும், கலையழகையும் கருத்தையும் ஒருங்கமைத்துப் பிரசாரம் செய்வதும் அதன் வேலையாகாது.'' — இவ்வாறெல்லாம் எண்ணி வந்த காலம் மலையேறி விட்டது. இரண்டு உலகப் போர்களுக்குப் பின் நாவல் கலையின் தொழில் பற்றிய கருத்து அடியோடு மாறிவிட்டது. இன்று மானிட வாழ்க்கையின் சமூகப் பொருளாதாரப் பிரச்னைகள் யாவும் அரசியலுடன் நெருங்கிய தொடர்புடையனவாகவே உள்ளன. மக்களின் வாழ்க்கைப் போராட்டங்களைக் காப்பிய ரீதியில் சித்திரிக்கும் இன்றைய நாவலுக்கு அரசியல் வாழ்க்கைக்குரிய செய்திகள் யாவும் பொருளாகின்றன. வளம் பொருந்திய மேலை நாட்டு நாவல் இலக்கியத்தில் அரசியல் நாவல் என்னும் வகை சற்றேறக் குறைய நூற்றாண்டுகளாகவே உரிய இடம் பெற்று வருகிறது. ஐரோப்பிய நாவலும் சமீப காலமாக அமெரிக்க நாவலும் உலக அரசியல் நிலைமைகளையும் நிகழ்ச்சிகளையும் புரிந்து கொள்வதற்குரிய முக்கியமானதொரு சாதனமாகி வருகின்றன.

இந்த அரசியல் நாவல்தான் என்ன? இது நாட்டையாளும் மந்திரி சபை, சட்டமியற்றும் பாராளு மன்றம், நீதிமன்றம் ஆகியவற்றின் அலுவல்களையும் அரசியல்வாதிகள், அரசியல் கட்சியினர் ஆகியோரின் பணிகளையும் குறித்ததொரு நோக்கத்துடன் வேலை செய்யும் அரசியல் குழுவினரின் ஒழுகலாறுகளையும் அரசாங்கத்தில் செல்வாக்குப் பெற்ற தொழிலதிபர்கள், நிலக் கிழார்கள், சங்கம் அமைத்துக் கொண்ட பாட்டாளிகள் ஆகியோரின் அரசியல் செயல்களையும் மற்றும், அரசியல் சார்புடைய எத்தகைய மெய்ச் செய்திகளையும் வெளிப்படுத்தியும் விவரித்தும், பகுத்தாராய்ந்தும், அவற்றின் உட்பொருளை விளக்கியும் கூறுகிறது. அரசியல் வாழ்க்கையின் உண்மைச் செய்திகளையும் அனுபவங்களையும் தேர்ந்தெடுத்து அவற்றுக்கு ஓர் ஒழுங்கும், உருவும் தந்து, அவை பொருளுடையனவாகுமாறு செய்கிறது



பங்கிம்சந்திரர்

நாட்டின் வரலாற்றின் சீவனற்ற செய்திகளுக்கு இது சதையும் இரத்தமும் சீவகளையும் அளிக்கின்றது. உரிய இடங்களில் சமுதாயத்தின் பண்பாட்டையும் சிறப்பியல்புகளையும் அழகுறக் கூறுகிறது. நாட்டின் நெருக்கடியான நிலையில் ஓர் அரசியல் சாதனமாகப் பயன்பட்டுப் புரட்சி செய்கிறது. இவை யாவற்றையும் சுவையுள்ளதொரு காதற் கதையுடன் இணைத்துப் பின்னிவிடுகிறது. இதனால் அரசியல் கருத்துக்கள் அடங்கிய இந்நாவல் மக்களின் இன்பப் பொழுது போக்குக்குரிய தன் கலாம்சங்களை ஒரு போதும் இழந்து விடுவதில்லை. இத்தகைய அரசியல் நாவல் இன்று ஒரு தனி இலக்கிய உருவாகத் திகழ்கிறது. இதன் நோக்கமும் அதில் கையாளப்படும் உத்திகளும் தனிச் சிறப்புடையன.

# அரசியல் நாவல்

ஏ. கோதண்டராமன்



சிங்கிளேர்



கல்கி

அரசியல் நாவலின் தனித் தன்மையை விளக்க ஓர் உதாரணம் கூறலாம். பாட்டாளிகள் முதலாளிகளுடன் சரிநிகர் சமானமாகப் பேரம் செய்யும் ஆற்றலைப் பெற்றுச் சங்கம் அமைத்துக் கொள்வதையும், அம் முதலாளிகள் தம் வேண்டுகோள்களுக்கு இணங்கி வராவிடின் வேலை நிறுத்தம் செய்வதையும் நாம் அறிவோம். இவ்வேலை நிறுத்தம் பொருளாதார சம்பந்தமானதொரு செயலேயாம். இச் செயலைக் கலையழகுடன் விவரிக்கும் ஒரு நாவல் பொருளாதார நாவலாகுமேயன்றி அரசியல் நாவலாகாது. ஆனால் அவ்வேலைநிறுத்தத்தை முறியடித்துப் பாட்டாளிகளைப் பணியச் செய்ய முதலாளிகள் கருங்காலிகளைப் போலீஸ் பந்தோபஸ்துடன் அனுப்பியும், அரசாங்கத்திடம் தமக்குள்ள செல்வாக்கைப் பிரயோகித்து ராணுவ உதவி பெற்று அமைதியுடன் மறியல் செய்யும் பாட்டாளிகள் மீது துப்பாக்கிப் பிரயோகம் செய்து கொடுமை செய்வரேல் இந்நிகழ்ச்சிகளை விளக்கும் நாவல் அரசியல் நாவலாகிவிடும். ஓர் அரசியல் கட்சி பலாத்காரத்தில் நம்பிக்கை கொண்டு தன் அரசியல் நோக்கங்களுக்காகத் தொழிற் சங்கம் அமைத்து வேலை நிறுத்தத்தைப் போர் முறையில் நடத்தும் கதையைக் கூறும் நாவலும் ஓர் அரசியல் நாவலேயாம்.

புகழ் பெற்ற சில அரசியல் நாவல்களைப் பற்றி ஒரு சிறிது அறிந்து கொள்வோம். கன்னி ஹாரியட் பீச்சர் ஸ்டௌ எழுதிய ''டாம் மாமாவின் குடில்'' அரசியல் புரட்சி செய்ததொரு நாவல். அப்டன் சிங்கிளேர் எழுதிய ''எண்ணெய்'', ''ஜங்கில்'' ''போஸ்டன்'' என்ற நாவல்கள் அமெரிக்க முதலாளி ஆதிக்கக் கொடுமைகளையும் பாட்டாளிகளின் அவல வாழ்க்கையையும் உணர்ச்சியுடன் சித்திரித்து மக்களின் மனச்சாட்சியைக் கிளறி அரசாங்கம் நிலைமையைச் சீர்திருத்துமாறு செய்தன. ஆலன் பேட்டன் எழுதிய ''அன்னையின் குரல்'' தென்னாப்பிரிக்காவில் வெள்ளையரின் ஆட்சி இன வேறுபாடுகளை வலியுறுத்திச் சுதேச மக்களைக் கொடுமை செய்வதைச் சித்திரிக்கிறது. பாரஸ்டர் என்னும் ஆங்கில நாவலாசிரியர் ''இந்தியா பயணம்'' என்ற தம் நாவலில் இந்திய மக்களின் எதிர்ப்புக்கும் அவல நிலைக்கும் பிரிட்டிஷ் ஆளும் வர்க்கத்தினரின் இறுமாப்பும் உயர்வு மனப்பான்மையுமே காரணம் என்பதை எடுத்துக் காட்டுகிறார். கான்ராத் தம் ''நோஸ்ட்ரோமோ'' என்னும் நாவலில் தென்னமெரிக்காவில் குடியரசு ஒன்றில் ஆங்கிலேய சுரங்க முதலாளி தன்னலத்துக்காகக் கலகப் புரட்சிக்காரர்களுக்குப் பண உதவி செய்யும் அநியாயத்தை அம்பலப்படுத்துகிறார். நம் நாட்டில் அரசியல் நாவல்கள் மிகச் சொற்பம். அரசியல் நாவல்கள் தோன்றுவதற்குரிய பொருள் ஏராளமாக உள்ளது. எழுத்தாளர்கள் வாழ்க்கைத் துறையின் பல அம்சங்களையும் பகுத்தாராய்ந்தும், கூர்ந்து நோக்கியும் சுவையுள்ள அரசியல் நாவல்கள் பல எழுதலாம். ஆகஸ்ட் புரட்சி, பாகிஸ்தான் போர், சீனப் படையெடுப்பு முதலிய சமீப கால நிகழ்ச்சிகள் அரசியல் நாவல்களுக்குரிய புதையல்கள்.

பங்கிம் சந்திரரின் ''ஆனந்த மடம்'', சரத் சந்திரரின் ''பதேர்தாப்'' (பாரதி), அனந்தகோபால செவ்டேயின் ''ஜ்வாலா முகி'' கல்கியின் ''அலையோசை'' இவற்றை நல்ல அரசியல் நாவல்கள் எனச் சொல்லலாம். சரித்திர நாவல்கள் எழுதி நமது தொன்மையான சிறப்புக்களை எண்ணிப் பெருமிதமுறும் அதே நேரத்தில் நம் கண் முன்னே நடக்கும் அரசியல் நிகழ்ச்சிகளைச் சித்திரிக்கும் அரசியல் நாவல்களையும் எழுத இன்றைய எழுத்தாளர்கள் முன்வர வேண்டும்.

# ஜீவகீதம்

## அத்தியாயம் அறுபத்தொன்று

## மாடிப் புரு

அந்தப் பர்மியக் கிழவியை நோக்கி, ''என்ன விஷயம்?'' என்று கேட்டான் சபேசன் தமிழில்.

அவளிடம் உள்ள காகித ஜல்லியில் கலர்க் காகிதச் சுருள்கள் இருந்தால் அவற்றைத் தான் விலைக்கு வாங்கிக் கொள்வதாகத் தெரிவித்தாள் கிழவி. அதனை வாங்குவதன் காரணத்தையும் விளக்கினாள்: வர்ணக் காகிதங்களைக் கொண்டு அழகழகான பூக்கள், வளைவுகளுடன் கூடிய கொடிகள், மாலைகள், தோரணங்கள், லஸ்தர் போன்ற எழில் மிக்க கூண்டுகள், விசிறிகள் முதலானவை செய்து சூர்மார்க்கெட்டிலும், சில பெரிய ஹோட்டல்களிலும், ஐரோப்பியர், ஆங்கிலோ-இந்தியர் வீடுகளிலும் கொண்டு போய் விற்பது அந்த எளிய பர்மியக் குடும்பத்தின் தொழிலாம். அதிலே அக்குடும்பத்தினர் அவ்வளவு பேரும் ஈடுபட்டிருக்கின்றனராம். கலர்க் காகிதங்கள் இப்போது அதிக விலை விற்பதால் இப்படி ஜல்லி விற்பவர்களிடம் தங்கள் வேலைக்குத் தோதான அளவில் கொஞ்சம் ஜல்லிகளை வாங்கிக் கொள்கிறார்களாம். அவள் இவ்வாறு சொன்னது உண்மையே என்பது வீட்டினுள் நடந்துகொண்டிருந்த அவ்வேலைகளிலிருந்து புலனாகியது.

ஒரு கிலோ காகித ஜல்லிக்குக் கிழவி சொன்ன விலை சபேசனுக்கு இரு மடங்கு லாபகரமாக இருந்ததால் அவன் உடனே ஒப்புக் கொண்டு கோணி மூட்டையை இறக்கி வைத்தான். வீட்டிலிருந்த அவ்வளவு பேரும் ஓடி வந்து சூழ்ந்துகொண்டு வெள்ளைக் காகித ஜல்லி வேறு, வர்ணக் காகித ஜல்லி வேறாகப் பிரித்தெடுக்க ஆரம்பித்துவிட்டனர். சபேசனும் அவர்களுடன் சேர்ந்து பிரித்துக் கொடுத்தான். அன்றைய ஜல்லிக் கொள் முதலில் எட்டணா இலாபமே எதிர்பார்த்திருந்த அவனுக்குப் பாதியளவு கலர் ஜல்லியில் மட்டும் ஒன்றரை ரூபாய் இலாபம் கிடைத்து விட்டது!

இனி தினமும் இவ்வாறு தனக்குக் கலர்க் காகித ஜல்லி கொண்டு வந்து கொடுக்குமாறு அந்தப் பர்மியக் கிழவி அவனிடம் கேட்டுக் கொண்டதிலிருந்து அவனுக்கும் இதில் இலாபம் இருக்கிறதென்பதைப் புரிந்து கொண்டவனாய் அங்கிருந்து உற்சாகத்துடன் புறப்பட்டான்.

தினமும் கலர் காகித ஜல்லி கிடைக்காதாகையால் ஒரு வாரத்தில் கிடைப்பதை எல்லாம் தானே பிரித்தெடுத்துச் சேர்த்து வைத்திருந்து கொஞ்சம் கணிசமானதும் சனிக்கிழமை வாக்கில் கொண்டு போய்ப் பர்மாக் கிழவிக்கு விற்றுவிட்டு வருவதை ஒரு வழக்கமாகவே வைத்துக்கொண்டான் சபேசன். கிழவிக்கும் இது சல்லிசாக இருந்தது.

நாளாவட்டத்தில் அந்தப் பர்மியக் கிழவிக்குச் சபேசனிடம் ஒரு வாஞ்சையே ஏற்பட்டு விட்டது. அவன் வரும்போதெல்லாம் தேநீர் கொடுத்து உபசரிப்பாள். அவனும் இப்போது அவளுக்கு வர்ணக் காகித ஜல்லி விலையில் கொஞ்சம் குறைத்துக் கொடுத்து வந்தான். அவள் தன் குடும்ப வரலாறு, இன்றைய அவளின் வாழ்க்கை நிலவரம் பற்றியெல்லாம் அவனிடம் ஒளிவு மறைவின்றிப் பேசுவாள். சபேசன் தனது அநாதரவான நிலையையும், அதன் காரணங்களையும் மேலோட்டமாகத் தெரிவிப்பான்.

இரண்டாம் உலக மகா யுத்தத்தின்போது ஜப்பானியர் பர்மாவின் மீது படையெடுத்துத் தாக்கிய சமயம் உயிருக்கு அஞ்சி இந்தியாவுக்குக் கால்நடையாகவே ஓடி வந்த பல நூறு பர்மியக் குடும்பங்களில் அவளுடையதும் ஒன்றாம். யுத்தம் முடிந்த பின் அவளோடு வந்தவர்களில் பெரும்பாலோர் தம் தாயகம் திரும்பியபோது அவளது குடும்பம் மட்டும் சென்னையிலேயே தங்கி விட்டதாம். அதனால் அவளுக்கு நன்றாகத் தமிழ் பேசத் தெரிந்திருந்தது. ஆயினும் சபேசனிடம் அவள் தன் பர்மிய மொழியில் பேசவே பெரிதும் விரும்பினாள். சபேசனும் அவள் பேச்சை நன்கு புரிந்து கொள்வான். ஆனால் அதற்குப் பதிலையோ, அவளிடம் தான் சொல்ல நினைப்பதையோ தமிழிலேயே சொல்வான். இதைப் பக்கத்திலிருந்து கேட்கிறவர்களுக்கு ரொம்ப வேடிக்கையாக இருக்கும்.

சபேசனின் நிலை சிறுகச் சிறுக முன்னேற்றம் கண்டு வந்தது. ஒரே சட்டை, கால் சராயையே தினமும் குளித்த பின் துவைத்து உடுத்தி வந்தது மாறி, மூன்று சிலாக் சட்டைகள், நான்கு பாண்டுகள், இரண்டு பனியன், ஒரு துவாலை, காலணி, இடுப்பு பெல்ட் முதலானவை புதிதாக வாங்கியிருந்தான். இவற்றைக் காட்டிலும் இன்னுமொரு முன்னேற்றம் என்னவென்றால், இப்போது அவன் ஹோட்டலில் சாப்பிடுவதில்லை; தனக்கு வேண்டிய உணவைத் தானே சமைக்கத் தொடங்கியிருந்தான். தனிமை வாழ்க்கையில் சமையல் வேலை ஒரு நல்ல பொழுதுபோக்காகவும் அவனுக்கு இருந்தது. இதனாலெல்லாம் அவனுடைய உடல் வளர்ச்சியில்கூட ஒரு புதிய அழகும் மிடுக்கும் ஏற்பட்டிருந்தன. உள்ளத்தின் ஆழத்தில் நிரந்தரமாகத் தங்கி வேர் விட்டுப்போன சில இரத்த பந்த இழப்புக் கவலைகளைத் தவிர அன்றாடத் தேவைகளையொட்டி எழும் சில்லறைக் கவலைகள் பெரும்பாலும் அவனிடமிருந்து விடைபெற்று விட்டன என்றே சொல்ல வேண்டும்.

என்றைக்காவது மாலை நேரங்களில் அவனுக்குப் பொழுது போகவில்லை, யென்றால்,

பக்கத்துத் தெருவிலிருக்கும் பர்மியக் கிழவியிடம் போய்க் கொஞ்ச நேரம் பேசிக்கொண்டிருந்துவிட்டு வருவான். இந்தப் போக்குவரத்தில், அவனுக்குத் தேவையில்லாத— ஆனால், வருந்தத் தக்க — ஒரு விஷயம் தெரிய வந்தது. அதாவது, பர்மியக் கிழவியின் வீட்டுக்குப் பக்கத்து வீட்டில் ஒரு சீனக் குடும்பம் குடியிருந்தது. அந்தக் குடும்பத் தலைவன் ஒரு பல் டாக்டர். அவனுக்குச் சொந்தமாகப் பல் கட்டும் கிளினிக் ஒன்று இருந்தது. அது அவன் வீட்டின் ஒரு பகுதியிலேயே அமைந்திருந்தது. சுவினிங் பஜார் வாடையில் கிளினிக் பகுதி; நைனியப்ப நாயக்கன் தெருப் பக்கம் குடியிருப்புப் பகுதி. அந்தச் சீனக் குடும்பம் அங்கு வெகு காலமாகவே இருந்து வருகிறது. அதுபோன்று பல் கட்டும் கிளினிக்கு வைத்து நடத்தி வரும் இன்னும் சில சீனக் குடும்பங்களும் அங்கு குடியிருந்து வந்தன. சில மாதங்களுக்கு முன்வரை அந்தச் சீனக் குடும்பம் இந்தப் பர்மியக் குடும்பத்துடன் நேச பாவமாகத்தான் பழகி வந்ததாம். ஆனால் இப்போது அவர்கள் இவர்களுடன் சரியாகப் பேசுவது இல்லையாம். காரணம் என்னவென்று கேட்டதற்கு, 'அவர்கள் கையில் காசு சேர்ந்து விட்டது; நாங்கள் எப்போதும் போலவே ஏழைகளாயிருக்கிறோம். அதனால் எங்களை அவர்களுக்குப் பிடிக்கவில்லை', என்றாள் பர்மாக் கிழவி.









ஊட்டப்பொருள்கள் அனைத்தும் ஒருங்கே தேவையா? ஒரு கப் போர்ன்விடா அருந்துங்கள். தசைகள் வளர புரதங்களும், சக்திக்கும் வலிமைக்கும் புஷ்டியான மாவுச்சத்தும், எலும்புகளை வலுவாக்க தாது உப்புக்களும், பூரண ஆரோக்கியத்திற்கு மிக்க அவசியமான வைட்டமின்களும் இதிலே உள்ளன. மிகச்சுலபமாக தயாரிக்கலாம். காலையில் உற்சாகத்துடன் எழுந்திருக்க வேண்டுமா? இரவில் அமைதியாக உறங்க வேண்டுமா? போர்ன்விடா அருந்துங்கள்.

காட்பரீஸ் **போர்ன்-விடா**

'அது எப்படித் திடீரென்று அவர்களுக்கு வரும்படி அதிகமாயிற்று? இந்த ஊர் ஜனங்களுக்குப் பற்கள் உதிரும்படியான புதிய நோய் எதுவும் வந்திருப்பதாகத் தெரியவில்லையே!' என்று கேட்கத் தோன்றியது சபேசனுக்கு. ஆனால் அப்படிக் கேட்கவில்லை. காரணம், இப்போது இந்தச் சென்னைப் பட்டணத்து ஜனங்கள் நாளுக்கு நாள் எவ்வளவோ மாறிக்கொண்டு போவதை அவன் கண்கூடாகப் பார்த்து வருபவன். ஏழைகள்கூட இப்போதெல்லாம் சர்க்கார் அல்லது நகராட்சி மன்ற ஆஸ்பத்திரிகளுக்கு அதிகம் செல்வதில்லை என்பதையும், தனிப் பட்ட டாக்டர்களிடம் பணம் கொடுத்து வைத்தியம் செய்து கொள்ளவே அவர்கள் விரும்புகிறார்கள் என்பதையும் அவன் அறிவான். இது பொதுத்துறை ஆஸ்பத்திரிகளின்மேல் அவர்களுக்கு நம்பிக்கையற்றுப் போன காரணமோ, அல்லது பணம் கொடுத்து வைத்தியம் செய்து கொள்வதை ஒரு பெருமைக்குரிய விஷயமாகக் கருதுவது காரணமோ தெரியவில்லை. ஒருகால் இவ்விரண்டு காரணங்களுமே சரியாக இருக்கலாம். எனவே, பல்கட்டும் தொழிலில் அந்தச் சீனக் குடும்பத்துக்கு இப்போது வருவாய் ஏன் மிகுதியாகியிருக்க முடியாது? ஆனாலும் பர்மியக் கிழவி இவ்விஷயத்தை வருத்தத்துடன் சொன்னதைக் கேட்டபோது சபேசனுக்கும் கொஞ்சம் மனக்கஷ்டமாகத்தான் இருந்தது. அக்கம் பக்கத்து வீட்டாரின் நட்பும் நேசமும் ஒரு நல்ல குடும்பத்தின் அமைதியான இயக்கத்துக்கு அவசியம் அல்லவா? அதிலும் அவ்விரு குடும்பத்தாருமே அயல் தேசத்துப் பிரஜைகள்.



"புகையிலே போட்டுக் கொண்டால் நாளடைவில் அப்படியே ஞாபக சக்திளை அழுக்கிப்பிடுமாமே!"

"யார் சொன்னது? இருபது வருடத்துக்கு முந்தி நீங்க என்னிடம் நூறு ரூபாய் கடன் வாங்கினது இன்னும் எனக்கு அப்படியே ஞாபகம் மிருக்கே!"

"......உம்......சரியான புகையிலே எங்கே அகப்படுறது இந்தக் காலப் பட புகுத்திலே....!"

அதனால் அவர்களுக்குள் பிணக்கு ஏற்படுவது இன்னும் கொஞ்சம் சிரமமானதாகவே தோன்றும். அந்தச் சீனக் குடும்பம் தங்களோடு பேசாமலிருப்பதற்குப் பொருளாதார ஏற்றத் தாழ்வு என்ற ஒரு காரணத்தை மட்டும்தான் சொன்னாள் பர்மியக் கிழவி; ஆனால் அவள் சொல்ல விரும்பாத இன்னும் ஏதோ சில உட்பூசல்களும் இருக்கலாம் என்றே அவனுக்குத் தோன்றியது. எது எப்படி இருந்தால் என்ன? அந்த விஷயம் அவனுக்கு அப்பாற்பட்டது; தேவையும் இல்லாதது. ஆகவே, அது பற்றிய வருத்தத்தை அவன் அதிகம் வளர்த்துக் கொள்ளவில்லை.

ஒரு நாள் காலை, வழக்கம்போல் ஜல்லி வியாபாரத்துக்குப் புறப்பட்ட சபேசனுக்குத் திடீரென வேதாவின் நினைவு வந்தது. ஆமாம்; அவளைப் பற்றிய எண்ணம் அவனுக்குத் திடீரென்றுதான் தோன்றியது. ஏனென்றால், கடந்த இரண்டு மாத காலமாக அவன் தன் நிலையை ஒழுங்குபடுத்திச் சீராக்கிக் கொள்வதிலேயே முழுக் கவனத்தையும் செலுத்தி விட்டிருந்தான். அதைத் தவறு என்று சொல்ல முடியுமா? அவனுக்கும் அது இந்நாள் வரையில் தவறாகப் படவில்லை. ஆனால் இப்போது அவளை நினைத்த மாத்திரத்தில், 'என்ன இப்படி இருந்துவிட்டேனே! இத்தனை நாட்களாக நான் அவளைப் போய்ப் பார்க்காமலிருப்பது பற்றி என்ன நினைப்பாள்? அவள் நினைப்பது ஒருபுறமிருக்கட்டும்; அவளுடைய அண்ணன் நச்சியும், தாய் கன்னியம்மாளும்தான் என்ன கருதுவார்கள்? கவலை உள்ளவரையில் காலைச் சுற்றி வந்தான், அது தீர்ந்ததும் கழன்று கொண்டு போய் விட்டான் என்றல்லவா நினைப்பார்கள்?' — இவ்வாறு எண்ணித் தன்னால் தவிர்த்துக் கொள்ள முடியாத ஓர் அவமான உணர்ச்சிக்கு அவன் ஆட்பட்டுக் குன்றிய அடுத்த கணமே, 'சரி; இன்றைக்கு எப்படியும், எந்நேரமானாலும் வேதாவைப் போய்ப் பார்த்துவிட்டு வர வேண்டும்' என்று தீர்மானித்தவனும் வெளியே புறப்பட்டான்.

இதற்காகவே அன்று மாலை நான்கு மணிக்கெல்லாம் தன் ஜல்லி வியாபாரத்தை முடித்துக் கொண்டு அறைக்குத் திரும்பி வந்து கொண்டிருந்தான். ஆனால் சோதனையாக அந்த வாரம் முழுவதும் கலர்க் காகித ஜல்லியே கிடைக்காமலிருந்து அன்றைக்குக் கொஞ்சம் அதிகமாகவே கிடைத்து விட்டது. அதை வீணே ஒரு நாள் தன் அறையில் போட்டு வைக்க அவன் விரும்பவில்லை. அந்தப் பர்மியக் கிழவியிடம் கொண்டு போய்க் கொடுத்தால் அது அவளின் பிழைப்புத் தொழிலுக்கு எவ்வளவோ உதவியாயிருக்கும். அத்துடன் இன்றைய வியாபாரக் கணக்கில் தனக்குக் கொஞ்சம் கூடுதலாகவும் பணம் கிடைக்கும். எனவே, விரைந்து சென்று அவளிடம் அந்தக் கலர்க் காகித ஜல்லியை விற்றுவிட்டு உடனே திரும்பி விடலாம் என்று எண்ணியவனும் நேரே நைனியப்ப நாயக்கன் தெருவை நோக்கி நடந்தான்.

சபேசனைக் கண்டதும் பர்மியக் கிழவிக்கு மிகவும் சந்தோஷமாகி விட்டது. அவள் உடனே ஜல்லியை வாங்கிக்கொண்டு பணத்தையும் கொடுத்தாள்.

காலியான கோணிப் பையை மடித்துக் கையில் வைத்துக்கொண்டு அங்கிருந்து உற்சாகமாகப் புறப்படத் திரும்பிய சபேசன், அதே தெருவின் எதிர்வரிசை வீடு ஒன்றின் மாடியிலிருந்து தன்னை யாரோ கைதட்டிக்

கூப்பிட்ட குரல் கேட்டு அண்ணாந்து பார்த்தான். அடுத்த கணம் அவன் உடலில் ஏதோ பனிநீர் ஓடைப் பெருக்கெடுத்தாற்போல் அப்படியே சில்லிட்டு நின்று விட்டான்.

காரணம், அந்த வீட்டின் மாடி வராந்தாவில் சாட்சாத் சந்தியாவே ஓர் அப்சரஸ் மங்கைபோல் நின்றுகொண்டிருந்தாள்!

கண்களை நிமிண்டி விட்டுக்கொண்டு சற்றே பின்னால் நகர்ந்து அவசரமாக மீண்டும் மேலே நோக்கினான் சபேசன். அது பழைமையானதொரு சிறிய வீடுதான். இருபுறமும் அதே மாதிரி இருந்த வீடுகளின் பக்கச் சுவர்களோடு இணைந்திருந்ததால் அது தெருவில் நின்று பார்ப்பதற்குக் கொஞ்சம் பெரிதுபோல் தோற்றமளித்தது. அதைத் தெரிந்து கொண்டுதானோ என்னவோ அந்த மூன்று வீட்டுச் சொந்தக்காரர்களும் முன்னெச்சரிக்கையுடன் தத்தமது வீட்டுக்குத் தனித் தனி வர்ணம் அடித்துப் பிரித்துக் காட்டி விட்டிருந்தனர். இருபக்கத்து வீடுகளும் முழுக்க முழுக்கக் குடியிருப்புகளாகவே விளங்க, நடுவிலிருந்த அவ்வீட்டின் கீழ்ப் பகுதியை மூன்று அறைகளாகத் தடுத்துக் கடைகளுக்கெனவும், மாடிப் பகுதியைக் குடியிருப்புக்கெனவும் விடப்பட்டிருந்தது. கீழே இருந்த கடைகளில் ஒன்று தகரச் சாமான் கடை; மற்றொன்று சைக்கிள் கடை; பிறிதொன்று ரேடியோ விற்பனையும் ரிப்பேரும் செய்யும் கம்பெனி. தகரச் சாமான் கடையை ஒட்டினாற்போல் மாடிக்குச் செல்லக் குறுகலான படிக்கட்டு இருந்தது.

தயங்கி நின்ற சபேசன் ஏதோ ஒரு துணிவு பெற்றவனாய்த் தன் கையிலிருந்த கோணிப் பையை அந்தப் படிக்கட்டின் ஓரமாக வைத்து விட்டு விடுவிடுவென மாடிக்கு ஏறிச்சென்றான்.

"ஆஷோன், பாபு! நொமாஷ்கார்!"— மகிழ்ச்சித் துள்ளலுடன் ஓடி வந்த சந்தியா, அவனுடைய மார்பில் அப்படியே முகம் புதைத்துச் சாய்ந்து விடுகிறவள் போல் மிக மிக அருகில் நெருங்கி ஒரு தடுமாற்றத்தோடு நின்றாள்.

பின்னால் கைகளைக் கோத்துக்கொண்டு அவளையே கண்ணிமைக்காமல் பார்த்தவாறு அழகாகப் புன்முறுவல் பூத்தான் சபேசன். அவளும் அவ்வாறே அவனைச் சிறிது நேரம் பார்த்துக் கொண்டிருந்து விட்டுச் சட்டென்று நகர்ந்து சுவர்ப் பக்கமாகத் திரும்பித் தலை குனிந்தாள். அவளின் முதுகும், மூங்கில் போன்ற வழுவழுப்பான தோள்பட்டையும் இலேசாகக் குலுங்கி அசைந்தன. அவள் அழுகிறாளா என்ன?

வியப்பாலும், திகைப்பாலும், அளவு கடந்த மகிழ்ச்சியாலும் வாயடைத்துப் போய் நின்றிருந்த சபேசன் மெல்ல ஓரடி முன்னால் சென்று, "சந்தியா!..... சௌக்கியமாக இருக்கிறாயா? உன் தந்தையாரும் நலம்தானே?" என்று உணர்ச்சிக் கலவை யிட்ட குரலில் கேட்டான். "எங்கே உன் அப்பா? உள்ளே இருக்கிறாரா?"

சற்று நேரம் மௌனமாயிருந்த சந்தியா தன் முகத்தை மட்டும் திருப்பி அவனைப் பார்த்தாள். அவளது அழகிய கவிதைக் கண்கள் நீர்ப் போர்வையிட்டுப் பளபளத்தன. உடனே ஒரு குதூகலக் குமிண் சிரிப்புடன் தலையை வேகமாக ஆட்டிக் கண்களைத் துடைத்துக்கொண்டு உள்ளே ஓடி, மடக்கு ஸ்டூல் நாற்காலியொன்றை எடுத்து வந்து வராந்தாவில் போட்டு, "உட்காருங்கள். அப்பா வெளியே போயிருக்கிறார். இப்போது வருகிற நேரம்தான்" என்று நாணக் குழைவோடு சொல்லிவிட்டு மறுபடியும் உள்ளே விரைந்தாள்.

தயக்கத்துடன் நாற்காலியில் அமர்ந்த சபேசன் அந்த மாடிப் பகுதியில் தன் பார்வையைச் செலுத்தினான். அகலக் குறைவான நீண்ட வராந்தாவுக்கு அடுத்துக் கொஞ்சம் பெரியதான கூடம். அதன் இருபுறமும் இரண்டு அறைகள்; அவை சாத்தியிருந்தன. கூடத்து அறைக்கு அப்பால் வலதுபுறம் சமையல் அறையும், இடதுபுறம் குளியலறையும் இருந்தன. பிரம்பாலான வட்டமேசையும் சாய்வு நாற்காலிகளும் கூடத்து அறையில் போடப்பட்டிருந்தன. மேசை மேல் சில உருது, ஆங்கிலத் தினப் பத்திரிகைகள் கிடந்தன. சுவரோரம் இரண்டு டிரங்க்பெட்டிகளும், ஒரு மர அலமாரியும்கூட இருந்தன. இவை யாவும் புதிதாக வாங்கப்பெற்றவை என்பது அவற்றின் புது மெருகிலிருந்து தெளிவாயிற்று. சந்தியாவின் தந்தை சுரேஷ்சௌத்ரி சென்னைக்கு வந்து கொஞ்சம் சௌகரியமான நிலையில் ஆகியிருக்கிறார் போலும்!

தேநீர்க் கோப்பையுடன் எழில் நடை பயின்று வந்த சந்தியா, "உங்களை உட்கார வைத்துவிட்டுப் போய்விட்டேன் இல்லையா? மன்னியுங்கள்" என்றவாறு தேநீரை அவனிடம் நீட்டினாள்.

அவள் முகத்தைப் பார்த்துக்கொண்டே கோப்பையை வாங்கிய சபேசன், "உன்னை நான் இங்கு சந்திப்பேன் என்று கனவில் கூட நினைக்கவில்லை" என்றான் மகிழ்ச்சிப் போதையுடன்.

"நானும்தான்; ஆனால் வேறு விதமாக!" என்றபடி வராந்தா கைப்பிடிச் சுவர்மீது போய் ஒயிலாகச் சாய்ந்து நின்றாள் சந்தியா.

"அது என்ன விதமாக?"

"சில மாதங்களுக்குமுன் ஒரேயடியாக இருண்டு போன என் எதிர்காலம் மீண்டும் இப்படி ஒளி மயமாகும் என்று நான் கனவும் காணவில்லையே!"

இதைக் கேட்டுப் பிரமித்துப் போனான் சபேசன். இப்போது சந்தியாவின் உருவம் அவன் கண்களுக்கு ஓர் ஒளிப் பிழம்பாகவே காட்சி தந்தது. தேநீரைச் சுவைத்துப் பருகிக் கோப்பையைக் கீழே வைத்துவிட்டு, "நீயும் உன் தந்தையும் இங்கே எப்படி வந்து சேர்ந்தீர்கள்?" என்று கேட்டான்.

"அது ஒரு பெரிய கதை. அதெல்லாம் இப்போது ஏன்? வேண்டுமானால் பிறகு சொல்கிறேன்."

அந்தக் 'கதை'யில் சபேசனுக்கும் கொஞ்சம் தெரியுமாகையால் சற்றுநேரம் பேசாதிருந்துவிட்டு, "நான் ஊரிலிருந்து புறப்பட்டு வரும்போது உன்னை உங்கள் அகதிக் குழுவுடன் சேலம் ஸ்டேஷனில் பார்த்தேன், வண்டி புறப்பட்ட பிறகு!" என்றான் தணிந்த குரலில்.

(தொடரும்)

# வெற்றித் திருநகர்

## அகிலன்

விசுவநாதன் கண்ணீர் உகுத்து அன்று வரை பார்த்ததில்லை லக்ஷ்மி. விஜயநகர சாம்ராஜ்யத்தின் அரியணையில் பயங்கரமான பின் விளைவுகளை ஏற்படுத்தக் கூடிய ஓலைகளைத் தந்தையார் கூற எழுதியபோது கூட அவள் இந்த அளவுக்குக் கலக்க மடையவில்லை. விசுவநாதன் கன்னங்களில் உருண்ட கண்ணீர் முத்துக்கள் அவளை நடுங்க வைத்தன.

''இரண்டு கால்களில் ஒன்று ஒடிந்து விட்டாலும் அவன் நொண்டிதான். என்னுடைய கால்களில் ஒன்று ஒடிந்து விட்டது. என் அப்பா இந்த சாம்ராஜ்யத்துக்கும் சக்கரவர்த்திகளுக்கும் துரோகம் செய்துவிட்டார். இந்த உயிர் உள்ள வரையிலும் நீங்காத பழியைத் தேடிக் கொண்டு விட்டார்'' என்றான் விசுவநாதன்.

செய்திகளை ஓரளவு தெரிந்து கொண்டிருந்த லட்சுமி, ''காரணம் இல்லாமல் செய்திருக்க மாட்டார்; காரணம் தெரிந்ததும் சக்கரவர்த்திகளே அவர் முடிவை ஆதரிக்கக் கூடும்'' என்றாள்.

விசுவநாதனுக்கு இது ஓரளவு ஆறுதலைத் தந்ததென்றாலும் அவன் தன் தந்தையின் முடிவைச் சிறிதும் ஏற்றுக் கொள்ளவில்லை.

''இது பல மொழிகள் பேசும் பல்வேறு மக்களைக் கொண்ட சாம்ராஜ்யம். அதனால்தான் சக்கரவர்த்திகளின் சபையில் கூடத் தெலுங்கு தமிழ், சம்ஸ்கிருதம், கன்னடம், இப்படிப் பல மொழிப் புலவர்களும் ஆதரவு பெற்று வருகிறார்கள். கல்வெட்டுக்களைக் கூடப் பல மொழிகளிலும் செதுக்கச் செய்கிறார் சக்கரவர்த்தி. இப்படியெல்லாம் இந்த நாட்டின் வரலாறே இதுவரையில் காணாத புதிய வரலாற்றைச் சக்கரவர்த்திகள் உருவாக்கி வரும்போது அப்பா அதற்கு நேர் எதிராகத் திரும்பிவிட்டார். ஒற்றுமையை வளர்ப்பதற்காகச் சக்கரவர்த்திகள் அரும்பாடு பட்டு வரும்போது வேற்றுமையின் வெறுப்பைத் தெற்கில் ஊன்றி விட்டார் அப்பா.''

''நீங்கள் ஏதேதோ நினைத்து வீணாகக் கவலைப்படுகிறீர்கள்'' என்றாள் லட்சுமி.

''இல்லை, லட்சுமி! உன்னுடைய தந்தையே தமிழ் நாட்டில் பிறந்த தமிழர். அவர் இப்போது இங்கு அமைச்சராக இருக்கிறார். இவ்வளவு பரந்த மனமுள்ள சக்கரவர்த்திகளிடம் ஊழியம் செய்யும் ஒருவர் பாண்டியரிடமிருந்து நாட்டைக் கைப்பற்றிக் கொண்டு ஆள நினைப்பது நியாயமாகுமா? வடக்கேயிருந்து ஊழிப் பெருக்காக வந்து சேர்ந்த மாலிக்காபூர் போலத்தானே நம்மை ஆள தமிழ்நாட்டார் நினைப்பார்கள்? விஜயநகர சாம்ராஜ்யத்தின் புனித லட்சியத்தை என் அப்பா எப்படி மறந்தார்களென்றே தெரியவில்லை. சக்கரவர்த்திகள் உயிரோடிருக்கும்போதே இப்படி நடந்தால், அவர்களுக்குப் பிறகு இந்த நாடு சின்னா பின்னமாகிச் சிதறிச் சீரழிந்து போகும், லட்சுமி!''

லட்சுமி இதுபற்றி அவனிடம் ஏதும் பேச விரும்பவில்லை. அவள் தந்தையாருக்காக நாகமநாயகருக்கு அவள் கடிதம் எழுதியவள். தன்னையும் மீறிக் கடிதத்தின் செய்திகள் வெளிப்பட்டுவிடக் கூடும் என்ற அச்சமும் அவளை வாட்டத் தொடங்கியது.

''இருதலைக் கொள்ளி எறும்பாக அகப்பட்டுக் கொண்டு தவிக்கிறேன் நான்'' என்றான் விசுவநாதன்.

லட்சுமிக்கும் அதையே அவனிடம் கூறத் தோன்றியது. 'அப்பாவுக்கும் உங்களுக்கும் இடையில் நானும்தான் அகப்பட்டுத் தவிக்கிறேன்' என்று அவள் தனக்குள் சொல்லிக் கொண்டாள்.

''சாம்ராஜ்யத்தின் லட்சியத்துக்கு ஆபத்து வந்துவிட்டது என்ற நினைவையும் என்னால் தாங்க முடியவில்லை. அப்பாவின் பெருமைக்கு இழுக்கு வந்துவிட்டது என்பதையும் என்னால் தாங்கமுடியவில்லை. சக்கரவர்த்திகள் அவர்களை எவ்வாறு நடத்தப் போகிறார்களோ என்று ஒவ்வொரு நாளும் எண்ணி எண்ணிக் கலங்குகிறேன்.''

லட்சுமி அவனருகில் நெருங்கி மெல்ல அவனுடைய முகத்தை உற்று நோக்கினாள். ''தயவுசெய்து அதற்கு மட்டும் நீங்கள் கவலைப்பட வேண்டாம். மற்ற அமரநாயக்கர்களும் உங்கள் அப்பாவும் ஒன்றுபட்டு விடமாட்டார்கள். என் அப்பாவும் அப்படி ஏதும் நடப்பதற்கு இடம் கொடுத்துவிட மாட்டார். ஆகவே, தண்டனை கிடைக்குமே என்று அஞ்சாதீர்கள்.''

''பாண்டிய நாட்டுப் போரில் என் அப்பா உயிர் துறந்திருந்தால்கூட நான் பெருமைப் பட்டிருப்பேன். உடலுக்கும் உயிருக்கும் வரும் துன்பங்களை விடக் கொடியது மானத்துக்கு வரும் இழுக்கு. மானத்தை இழந்து சிறுமைப்பட்டு வாழ என் அப்பாவும் உடன்படமாட்டார்கள்.''

லட்சுமிக்கு இப்போதுதான் அந்த விஷயமும் புலப்பட்டது. அரசியல் வாழ்வு எவ்வளவு பயங்கரமான வாழ்வு என்பதை நினைத்து அவள் நடுங்கினாள். அவர்கள் இருந்த குன்றுகளுக்கு அடுத்தாற்போலத்தான் அதன் மறு சரிவில் அப்பாஜி சிறை வைக்கப்பட்டிருந்தார். அப்படி ஒரு நிலை நாகம நாயக்கருக்கு வந்துவிட்டால்? பிறகு விசுவநாதனின் கதி? அதன் பிறகு அவளால்

விசுவநாதனைக் கனவிலாவது நினைக்க முடியுமா?

''ஒரு காரியம் செய்கிறீர்களா?'' என்று கேட்டாள் லட்சுமி.

''என்ன?''

''உடனடியாக உங்கள் தந்தையாருக்குச் செய்தி அனுப்பி நாட்டைப் பாண்டியரிடம் கொடுத்துவிட்டு இங்கு வந்துவிடச் சொல்லுங்கள். பிறகு நாம் சக்கரவர்த்திகளிடம் முறையிட்டுக் கொள்ளலாம்'' என்றாள்.

''என் குறுக்கீட்டை அப்பா விரும்ப மாட்டார்கள். ஆனால் சக்கரவர்த்திகளின் ஓலை சென்றிருப்பதால் உடனே வந்து விடுவார்கள்.''

''ஒருவேளை அப்படியும் வராவிட்டால்? எனக்கென்னவோ அவர்கள் அப்படியும் வர மாட்டார்கள் என்றுதான் தோன்றுகிறது!''

கோபத்தோடு லட்சுமியை உருட்டி விழித்தான் விசுவநாதன். ''என்னிடமே இப்படிப் பேச என்ன துணிச்சல் உனக்கு? சக்கரவர்த்திகளின் ஆணையை இனியும் ஒருவர் மீற முடியுமென்று நீ நினைக்கிறாயா? ஆணையை மீறிவிட்டால் அவர் உயிர் நிலைக்காது லட்சுமி, நிலைக்காது!'' என்று அவளைப் பற்றி ஆத்திரத்தோடு உறுக்கினான்.

லட்சுமி அவனுடைய நிலைக்காகத் தனக்குள் தேம்பினாள்.

அத்தியாயம் முப்பத்தைந்து

## அமைச்சரின் ஆலோசனை

விசுவநாதனும் லட்சுமியும் நெருங்கிப் பழகுவதையும் அவர்கள் அவ்வப்போது துங்கபத்திராவுக்கு அப்பால் தனிமையை நாடிச் சென்று வருவதையும் சாளுவ நரசிம்மர் கவனித்துக் கொண்டுதான் இருந்தார். ஆனாலும் அதை அவர் வெளியில் காட்டிக் கொள்ளவில்லை. பராமுகமாக இருப்பவர் போலவும் அவர்களது போக்கு தமக்குத் தெரியாதது போலவுமே அவர் நடந்துகொண்டார். லட்சுமியின் அறிவாற்றலிலும், துணிவிலும், அவருக்கு நம்பிக்கை இருந்தது போலவே விசுவநாதனின் வீரத்திலும் பண்பிலும் அவருக்கு நம்பிக்கை இருந்தது.

அமர நாயக்கர்களிலே சிலர் விசுவநாதனுக்குத் தங்களது பெண்களைக் கொடுப்பதற்காகப் போட்டி போட்டுக் கொண்டிருந்தனர். அவர்களது வீட்டுப் பெண்டிர் விசுவநாதனின் தாயார் கமலா தேவியை அடிக்கடி வந்து பார்த்துச் சென்றனர். இவற்றையெல்லாம் சாளுவ நரசிம்மர் கவனிக்கத் தவறவில்லை.

சிறு வயதிலேயே பெண்களுக்கு மணம் செய்து வைப்பதும், ஒருவனுக்கே ஒன்றுக்கும் மேற்பட்ட பெண்டிரை மணம் செய்து கொடுப்பதும் கூட விஜயநகரத்தில் வழக்கமாக இருந்தது. தவிரவும் சிருங்காரக் கலைகள் பயின்று அவற்றையே தங்களது வாழ்க்கையின் நோக்கமாகக் கொண்டிருந்த கணிகையரும் அங்கு நிறைந்திருந்தனர். விசுவநாதனின் இளமை, பதவி, அவனுக்குச் சக்கரவர்த்தியிடமிருந்த செல்வாக்கு இவ்வளவும் சேர்ந்து பலரை அவனிடம் ஈடுபாடு கொள்ளச் செய்தன. விசுவநாதனோ விழிப்போடு யாரிடமும் அகப்பட்டுக் கொள்ளாமல், லட்சுமியின் நினைவில் மாத்திரம் தன்னைப் பறி கொடுத்திருந்தான். அவனுடைய இந்தப் போக்குத்தான் சாளுவ நரசிம்மருக்கு அவனிடம் எல்லையற்ற பரிவு காட்ட வைத்தது.

ஆனாலும் ஒரே ஒரு விஷயத்தில் மட்டும் அவனை அவரால் நம்ப முடியவில்லை. சக்கரவர்த்தி கிருஷ்ண தேவராயர் எப்படியெல்லாம் நினைப்பாரோ, பேசுவாரோ, செய்வாரோ அப்படியே அவனும் நடந்துகொண்டான். அப்துலை அவன் சக்கரவர்த்திகளிடம் அழைத்துச் சென்ற பிறகு அவனுடைய தந்தையின் போக்கை அவன் தெரிந்து கொண்டிருப்பான் என்பதை அவர் அறிந்திருந்தார். ஆனால் அவரிடம் அதைப் பற்றி அவன் பேசவே இல்லை. சக்கரவர்த்தியைப்



போலவே அவன் நாகமர் மீது கோபம் கொண்டிருந்தான் என்பதை மட்டும் தெரிந்து கொண்டார்.

அவனாக அவரிடம் அந்தப் பேச்சை எடுப்பான் என்று எதிர்பார்த்த சாளுவநரசிம்மர் கடையில் தாமாகவே அவனிடம் பேச விரும்பினார். அதற்கொரு வாய்ப்பாக அவருடைய பிறந்த நாள் விழாவும் வந்தது. வேறு யாரையும் அழைக்காமல் விசுவநாதனையும், அவன்தாயார் கமலா தேவியையும் தம் மாளிகைக்கு அவர் அழைத்திருந்தார். விருந்து முடிந்த அனைவருமே தோட்டத்து மர நிழலில் அமர்ந்து உல்லாசமாகப் பேசிக்கொண்டிருந்தார்கள்.

பேச்சுக்கிடையில் திடீரென்று நாகம நாயக்கரைப் பற்றிக் குறிப்பிட்ட சாளுவ நரசிம்மர், ''அவருக்கு ஆபத்து ஏதும் ஏற்படாமல் தடுக்க முடியுமானால் அது ஒரே ஒருவனால்தான் முடியும்!'' என்று கூறி விசுவநாதனைப் பார்த்தார்.





தேவர் பிலிம்ஸ்

# முகராசி

சென்னை
கெயிட்டி
பிரபாத்
சரஸ்வதி
மற்றும்
தென்னாடெங்கும்

டைரக்ஷன்
M.A. திருமுகம்

தயாரிப்பு
சாண்டோ M.M.A. சின்னப்பாதேவர்

ELEGANT

''ஆபத்து ஏற்படுமென்கிறீர்களா?'' என்று கலவரத்தோடு கேட்டார் கமலாதேவி. லட்சுமி அப்படி வாய் விட்டுக் கேட்கவில்லையே தவிர, அவளுடைய நெஞ்சம் துணுக்குற்றது.

''அப்பாவுக்கு ஆபத்து ஏற்படாமல் தடுத்துக் கொள்ள அவர்களால் மட்டுமே முடியும். அவர்கள் மனம் வைத்தார்களானால் சக்கரவர்த்திகளிடம் தக்க காரணம் கூறி விளக்கலாம். நாட்டைப் பாண்டியரிடம் விட்டு விட்டு விரைவில் திரும்பி வருவார்கள் என்று நம்புகிறேன். உடனடியாகக் கொடுக்காமல் இருந்ததற்கு நியாயமான காரணங்கள் இருக்கக்கூடும் என்றுதான் நானும் நினைக்கிறேன். அவற்றைத் தெரிந்து கொண்டால் சக்கரவர்த்திகளின் மன்னிப்பை அவர்கள் பெற முடியும். அப்பா வந்தவுடன் அவர்கள் கூறும் காரணங்கள் ஏற்றவையாக இருந்தால், நானும் அப்பாவுக்காகச் சக்கரவர்த்திகளிடம் வாதாட விரும்புகிறேன்'' என்று கூறினான் விசுவநாதன்.

''இன்றைக்குப் பாண்டிய நாடு இருக்கும் நிலைமை சக்கரவர்த்திகளைவிட உன் அப்பாவுக்குத்தான் நன்கு தெரியும். அவர் நேரில் படை நடத்திச் சென்றவர். போரில் எத்தனையோ வீரர்களையும் கைப்பொருளையும் இழந்திருப்பவர். அவர் என்ன முடிவு செய்தாலும் அது சரியாகத்தான் இருக்கும். இதை நீ சக்கரவர்த்திகளிடம் எடுத்துக் கூற வேண்டும். சக்கரவர்த்திகள் உன்னிடம் தனிப்பட்ட அன்பு கொண்டிருக்கிறார். அந்த அன்பைப் பயன்படுத்திக் கொள்ள நீ தவறக் கூடாது'' என்றார் அமைச்சர்.

''எனக்கென்னவோ அப்பா செய்தது தவறென்றே தோன்றுகிறது'' என்றான் விசுவநாதன்.

சாளுவ நரசிம்மரின் உள்ளத்தில் இது வேல் பாய்ச்சுவது போலிருந்தது. என்றாலும் தம் அதிர்ச்சியை வெளிக் காட்டிக்கொள்ளாமல் அவர் புன்னகை பூத்தார்.

''விசுவநாதா! அவர் செய்திருப்பதே எனக்குச் சரியென்று தோன்றுகிறது'' என்று அழுத்தமாகக் கூறினார் சாளுவ நரசிம்மர். ''துரதிர்ஷ்டவசமாக நம் சக்கரவர்த்திகளுக்கு இந்த விபத்து நேர்ந்து அவர்களுடைய ஆற்றலைத் தகர்த்து விட்டது. அவர்களுக்குப் பின்னால் என்ன நேரிடும் என்ற தீர்க்கதரிசனத்தோடு உன் அப்பா இப்போதே பார்த்திருக்கிறார். அதற்கு ஏற்றாற்போல்தான் அவருடைய நடவடிக்கைகளும் இருக்கின்றன. உன்னிடம் ஒரு வேதனை நிறைந்த உண்மையை நான் சொல்லித்தான் தீரவேண்டும்: சக்கரவர்த்திகள் இப்போது அணைவதற்கு முன்னால் சுடர் விட்டுப் பிரகாசிக்கும் தீபத்தைப் போல் இருக்கிறார்கள். தம் உயிருள்ள வரையிலும் என்றும் போலவே தம் ஆணைகள் நிறைவேற்றப்பட வேண்டும் என்று அவர்கள் விரும்புகிறார்கள்.''

அந்த வேதனை நிறைந்த உண்மை விசுவநாதனை என்னவோ செய்தது. சக்கரவர்த்தியை வேறு யாரும் இப்படி 'அணைவதற்கு முன்பாகச் சுடர் விடும் தீபம்' என்று குறிப்பிட்டிருந்தால் அவன் வெகுண்டு எழுந்திருப்பான். ஆனால் கூறியவர் சாளுவ நரசிம்மர் என்பதால் அவன் பொறுத்துக் கொள்ள வேண்டிய அவசியம் ஏற்பட்டது.

''சக்கரவர்த்திகளுக்குப் பின்னால் என்ன நடக்கும் என்று நினைக்கிறீர்கள்?'' என்று சாளுவ நரசிம்மரிடம் கேட்டான் விசுவநாதன்.

''அவருடைய தம்பி அச்சுத ராயரோ மருமகன் ராமராயரோ சக்கரவர்த்திகளாக வரக்கூடும். அச்சுதராயருக்குத்தான் முதல் உரிமை இருக்கிறது. அவர் வந்தால் நான் இங்கு அமைச்சராகவோ உன் அப்பா தளகர்த்தராகவோ இருக்க முடியாது. சோழ நாட்டில் என் மேற்பார்வையில் உள்ள நாட்டைப் பிடுங்கி அவருடைய நெருங்கிய உறவினருக்குக் கொடுக்கக் கூடும். உன் அப்பாவுக்குப் பின்னால் நீ அவர் ஆட்சியிலுள்ள நாட்டை ஆள முடியாதபடி செய்துவிடுவார். கிருஷ்ண தேவராயருக்குப் பிறகு இந்த சாம்ராஜ்யம் இப்படியே நிலைக்கும் என்று சொல்ல முடியாது.''

திடுக்கிட்டான் விசுவநாதன்.

''அதனால்தான் இப்போதே நீ உன்னுடைய எதிர்காலத்துக்கு ஒரு வழி தேடிக் கொள்ள வேண்டும் என்று நானும் உன் அப்பாவும் விரும்புகிறோம். லட்சுமியின் எதிர்காலத்தில் எனக்குப் பற்றுதல் இருப்பதால்தான் நான் உன்னைப் பற்றியும் கவலை கொண்டிருக்கிறேன்.''

லட்சுமி அப்போது விசுவநாதனைக் கூர்ந்து நோக்கினாள். நாணத்தால் அவள் முகம் வெந்திருந்தாலும் அவளால் விசுவநாதனைக் கவனிக்காமல் இருக்க முடியவில்லை. 'என்னுடைய அப்பா சொல்வது போலவே நடந்து கொள்ளுங்கள்!' என்று அவளுடைய விழிகள் அவனிடம் கெஞ்சின.

முதன் முறையாக லட்சுமியைத் தன்னோடு இணைத்துப் பேசியதால் விசுவநாதன் அந்த விநாடியில் மற்ற எல்லாவற்றையும் மறந்து விட்டான். கமலாதேவியும் மனம் பூரித்துப் போனார். சாளுவ நரசிம்மர் விசுவநாதனின் முகத் தோற்றத்தைக் கூர்ந்து கவனித்து அவனுக்கு லட்சுமியிடம் இருந்த அன்பை அளவெடுத்துக் கொண்டார்.

''சாமிகளா! இங்கே ஒரு சங்கீதப் பைத்தியம் தன்னைத் தியாகராஜர் என்று கூறி அட்டகாசம் செய்து கொண்டிருக்கிறது. என்ன செய்ய?''

''தஞ்சாவூரில் இறக்கி விட்டு விடுங்கள், திருவையாறு போகட்டும்.''



"ஒரே ஒரு உதவியைச் செய்ய வேண்டிய அவசியம் உனக்கு ஏற்படலாம்" என்று தொடர்கின்றார் அமைச்சர். "அந்த உதவியை உனக்காகவும் லட்சுமிக்காகவும் உன் அப்பாவுக்காகவும் நீ செய்ய வேண்டும்."

"என்ன உதவி?"

"ஒருவேளை, நாகம நாயக்கருக்கும் சக்கரவர்த்திகளுக்கும் மோதுதல் ஏற்பட்டால் நீ சக்கரவர்த்திகளிடம் உன் அப்பாவின் சார்பில் வாதாட வேண்டும். நீ கூறினால் சக்கரவர்த்திகள் ஆலோசனை செய்வார். நமக்கெல்லாம் அதனால் நன்மை ஏற்படும். இல்லாவிட்டால் ஏதும் விபரீதங்கள் நிகழக் கூடும். உன் அப்பாவும் ஒருவகையில் முரட்டுத்தனமான பிடிவாதம் கொண்டவர் என்பது உனக்குத் தெரியும்."

"எதற்காக நான் வாதாட வேண்டும் என்றே புரியவில்லை. திரும்பி வந்தவுடன் அப்பா தம் செய்கைக்காக வருந்தி மன்னிப்புக் கேட்டாலே போதும். அவசியமானால் அப்போது நானும் கூறுகிறேன். வேங்கட நாயக்கருக்குக் கொடுக்கப்பட்ட தண்டனை போல் அப்பாவுக்குக் கொடுக்கப்படமாட்டாதென்றே நினைக்கிறேன்."

சாளுவ நரசிம்மருக்கு அவனிடம் ஏதோ ஒரு ரகசியத்தை வெளியிட வேண்டும் என்ற துடிப்பு ஏற்பட்டது. அதை அவனிடமே வெளிப்படையாகக் கூறி, அவனைத் தன் சார்பில் வைத்துக் கொள்ள வேண்டுமென்று திட்டமிட்டார். ஆனால் பெண்கள் அருகில் இருந்ததால் அவர் அதை அப்போது கூற வில்லை.

அப்போது பின்புற வாயில் வழியாகப் பரபரப்போடு அவருடைய பணியாளர்களில் ஒருவன் ஓடி வந்தான். அவசரமாக அவனிடம் எழுந்து சென்ற சாளுவ நரசிம்மர் அவன் கூறிய செய்தியைக் கேட்டுத் திகைப்படைந்தார். ராமபத்திர நாயக்கர் அவரைத் தேடி வந்திருக்கிறார் என்ற செய்தியை அவரிடம் தனித்துக் கூறினான் பணியாள். "மேல் மாடத்துக்கு அவரை அழைத்துச் செல்; இதோ வந்து விடுகிறேன்" என்று கூறி அவனை அனுப்பி வைத்தார்.

அடுத்தாற்போல், அவர் தமக்கு அவசரக் கடமை ஒன்று வந்துவிட்டதாகக் கூறவே, அந்தக் கூட்டம் அதோடு கலைந்தது. விசுவநாதன் தன் அன்னையாரோடு மாளிகைக்குப் புறப்பட்டான். அவன் அங்கு போய்ச் சேருவதற்கு முன்பே அவனுக்கு அரண்மனையிலிருந்து ஒரு கட்டளை அனுப்பியிருந்தார் சக்கரவர்த்தி.

"மதுரையிலிருந்து சந்திரசேகர பாண்டியர் வந்திருக்கிறார். நாகம நாயக்கரின் சார்பில் ஓலை வந்திருக்கிறது. இது பற்றி விசாரித்து முடிவு செய்ய வேண்டியிருப்பதால் நாளைக்கு அமர நாயக்கர்கள் எல்லோரும் சபைக்கு வந்துவிட வேண்டும்."

'நாகம நாயக்கரின் சார்பில் ஓலை வந்திருக்கிறது' என்ற செய்தியைப் படித்தவுடனேயே விசுவநாதனின் தலை சுழன்றது. சக்கரவர்த்திகளின் ஆணைப்படி அவர் வந்து சேராமல் ஓலை அனுப்பியதன் மூலம் இரண்டாவது முறையாக ஆணையை மீறத் துணிந்து விட்டாரா அவர்? (தொடரும்)




உறையின் மேல் "தமிழ்த் திரை-1965" என்று குறிப்பிடவும். இது விஷயமாகக் கடிதப் போக்குவரத்து வைத்துக் கொள்வதற்கில்லை. பிரசுரமாகாத கட்டுரைகளைத் திரும்பப் பெற விரும்புவோர் தங்கள் விலாசமிட்ட, தபால் தலையுடன் கூடிய ஓர் உறையை உடன் அனுப்ப வேண்டும்.

ஆண்டுதோறும் தமிழில் எத்தனையோ திரைப்படங்கள் வெளிவருகின்றன. ரசிகர்களின் எண்ணிக்கை வளர வளர, திரைப் படங்களின் எண்ணிக்கையும் வளர்ந்து வருகின்றன. மானிட வாழ்க்கையில் காப்பி அருந்துதல் எப்படி தினசரிப் பழக்கமாகி விட்டதோ, அப்படியே சினிமாப் பார்க்கும் பழக்கமும் வளர்ந்து விட்டது. ஒரு படத்தை ஒரு தரமாகிலும் பார்த்து மகிழ்ந்திராத நேயர்களைக் காண்பது அபூர்வம்.

1965ல் எத்தனையோ புதுத் தமிழ்ப் படங்கள் வெளிவந்துள்ளன அல்லவா? அவற்றில் எந்தப் படம் உங்கள் மனத்தில் இடம் பற்றிக் கொண்டது? அந்தப் படத்தில் எந்தக் கதாபாத்திரம் உங்கள் நினைவில் அழியாமல் நிற்கிறது? அதில் எந்த அம்சத்தை நீங்கள் பாராட்டுகிறீர்கள்? இது பற்றிக் 'கல்கி'யில் அரைப் பக்கத்துக்கு மேல் போகாமல் சுவையாக எழுதியனுப்புங்கள். சிறப்பான கட்டுரைக்குப் பரிசு உண்டு: முடிவு தேதி 5-2-1966

# பெட்போர்டால்

## எதிர்காலம் உருவாக்கப்படுகிறது!

இந்தியாவெங்கும் கட்டட வேலைகள் நடக்கும் ஆயிரக்கணக்கான இடங்களில் — முரடான உழைப்பு, நீடித்திருப்பதில் நம்பிக்கை சிக்கனத்துடன் சிறப்பான சேவை இவற்றிற்குப் பெயர்பெற்ற பெட்போர்டு டம்ப்பர்களை நீங்கள் பார்க்கலாம்.

பெட்போர்டு டம்ப்பர், அணைக்கட்டுகள், பெரிய ரோடுகள் அமைத்தல், சுரங்க அபிவிருத்தி, நிலச் சீர்திருத்தம் ஆகியவை பற்றிய கடினமான வேலைகளுக்கு ஏற்றவாறு தயாரிக்கப்பட்டிருக்கிறது. இந்த வகையில் வேறு எந்த வண்டியைக் காட்டிலும் இது மிகவும் உறுதியுடன் அதிக வேலை செய்யும் சக்தி வாய்ந்தது. உறுதி மிகுந்த-கண்கவரும் அம்சங்கள் கொண்ட பெட்போர்டு டம்ப்பர் உங்கள் வேலைகளை விரைவிலும் சிக்கனமாகவும் செய்து முடிப்பதுடன் உங்களுக்கு அதிக லாபத்தையும் தேடித் தருகிறது!



லாபம் பெற வேண்டுமானால் விவேகத்துடன் பெட்போர்டு வாங்கவும்



ஹிந்துஸ்தான்
பெட்போர்டு
வாங்குங்கள்




ஹிந்துஸ்தான் மோட்டார்ஸ் லிட்., கல்கத்தா

அதிகாரம் பெற்ற ஹிந்துஸ்தான் மோட்டார் வியாபாரிகள்: ஆக்ரா கண்ட்., அலிகார், அஹமதாபாத், அஹமத்நகர், ஆஜ்மீர், அலஹாபாத், அம்பாலா கண்ட்., அமிர்தசரஸ், அவுரங்காபாத், பெங்களூர், பரேலி, பரோடா, பிலாய், போபால், புவனேஸ்வர், பம்பாய், கல்கத்தா, சண்டிகார், கோயம்புத்தூர், கட்டாக், டேரா-டூன், தன்பாத், தன்னார், திப்ருகார், தும்கா, கௌஹாத்தி, கோவா, குவாலியர், இம்பால், இந்தூர், ஜபல்பூர், ஜெய்ப்பூர், ஜல்கான், ஜம்மு, ஜோத்பூர், ஜோர்ஹட், ஜலந்தர் சிட்டி, கான்பூர், காட்மண்டு, கோலாப்பூர், கும்பகோணம், லக்னோ, மதராஸ், மதுரை, மங்களூர், மீரட், நாக்பூர், புது தில்லி, பாளையங்கோட்டை, பாட்டியாலா, பாட்னா, பாண்டிச்சேரி, பூனா, ராஜ்கோட், ராஞ்சி, சம்பல்பூர், செகந்திராபாத், ஷில்லாங், ஸில்சார், ஸிலிகுரி ஸ்ரீநகர், டாடாநகர், தேஜ்பூர், தானா, திருவனந்தபுரம், வாரணாசி கண்ட்., விஜயவாடா, விருதுநகர் இவை.

# நினைவுக்குப் பின்



ஆண்டாளுவை நாளைக்கு யாரோ பெண் பார்க்க வரப் போகிறார்களாம்.

தெருப்படியில் நின்றபடி இதுவரை எதிர் வீட்டு மாமியிடம் பேசி விட்டு உள்ளே வந்த அம்மா இந்தச் சேதியைச்சொன்னாள். நான் அப்பொழுதுதான் கொஞ்சம்கூட மிச்சமில்லாமல் பிரயாணக் களைப்பை யெல்லாம் துடைத்துக் குளித்து விட்டுச் சீப்பும் கையுமாக ஊஞ்சலில் வந்து உட்கார்ந்திருந்தேன்.

மூன்று வருஷங்களுக்குப் பிறகு ஊருக்கு வந்ததும் கேள்விப்படும் முதல் செய்தி இதுதான். நிச்சயமாக எனக்கு இது ஒரு 'செய்தி'யாகவே இருந்தது.

இன்னமும் ஆண்டாளுக்குக் கல்யாணம் ஆகவில்லையா? எட்டியவரை நினைப்புக்களைத் தொடர்ந்து சென்று கொண்டிருந்தவனின் நெஞ்சில் சுழித்து வட்டமிட்டது இந்தக் கேள்வி. ஆனால் வாய் திறந்து அம்மாவிடம் இதைக் கேட்கவில்லை. அவளுக்கு இது அதிசயமான செய்தியில்லை. போகிற போக்கில் ஏதோ பேச்சுக்கு நடுவில் கேட்டதை மனத்தில் வைத்துக் கொள்ளாமல் என்னிடம் சொல்லி விட்டுப் போகிறாள்.

நான் திரும்பி நிமிர்ந்தபோது என்னிடமிருந்து என் நினைப்பின் அர்த்தத்தைப் புரிந்து கொண்ட மாதிரி நின்று அம்மா சொன்னாள்.

''எப்படி ஆகும்? தேசிகன் வருஷக் கணக்காய் அலைகிறான். ஒண்ணு பெண் சமர்த்தாய் இருக்கணும். இல்லே, கழுத்திலே, கையிலே நாலு நகை நட்டு இருக்கணும்.''

இதற்குமேல் ஊர்க் கதை பேச அம்மாவுக்கு நேரம் ஒழிந்திருக்கவில்லை. அவள் சமையலறைக்குள் நுழைந்ததும் துண்டை எடுத்துப் போட்டுக் கொண்டு புறப்பட்டேன்.

பெருமாள் கோவில் சந்நிதித் தெருவில் முதல் வீடு தேசிகாச்சாரிக்கு. படியில் ஏறி நிமிர்ந்ததும் முதலில் பார்வையில் விழுந்தது நுழைவாயிலின் மேலே வரைந்திருந்த சங்கும், சக்கரமும் சூழ நின்ற திருநாமம்தான். காரை பெயர்ந்து, வண்ணம் மங்கிப்போய், என்றோ பார்த்துப் பளிச்சென்று மனத்துக்குள் பதிந்திருந்த காட்சியை அழித்து மறைக்க முயலும் காட்சியாகவே இருந்தது அது.

கதவு திறந்துதான் இருந்தது. நான் தயங்கி நின்று மெள்ள 'மாமா!' என்று அழைத்தேன். உண்மையில் தேசிகாச்சாரிக்கும் எனக்கும் நடுவில் உரிமை கொண்டாடி அழைக்கும் உறவு எதுவுமில்லை. ஊரில் எல்லாரும் அவரைத் 'தேசிகன்' என்றுதான் அழைக்கிறது வழக்கம். பெரியவர் முதல் சின்னவர்வரை எல்லோருக்கும் அவர் வெறும் தேசிகன். ஆனால் அப்படி எல்லாரையும் போலக் கூப்பிட எனக்குத் துணிச்சல் கிடையாது. மேலும் அது அந்நியமான உணர்வையே என்னுள் எழுப்பும்.

'மாமா!' என்றேன் மறுபடியும்.

உள்ளே நிழலாடியது.

''யாரு?'' — ஆண்டாளுதான் கேட்டுக் கொண்டே வந்தாள்.

''நான்தான் ஆண்டாளு!''

''அடடா! வரதனா, வாங்கோ!''

''இது என்ன ஆண்டாளு?''

''எது?''

''வாங்கோ, போங்கோன்னு பெரிய வார்த்தை யெல்லாம் போட்டுப் பேச ஆரம்பிச்சுட்டியே?''

''இனிமேல் அப்படித்தானே பேசணும்?''

''எதுக்காக?''

''நிறையப் பெரிய படிப்பெல்லாம் படிச்சுட்டு வந்திருக்கேளே! நல்ல வேலைக்கும் போயிடுவேள்!''

''வேலைக்குப் போகிறது கிடக்கட்டும், ஆண்டாளு! நீ இந்த மாதிரி அநாவசியமான மரியாதையெல்லாம் போட்டுப் பேசினால் நான் போயிடுவேன்.''

''கோவிச்சுக்காதே, வரதா! உள்ளே வாயேன்.''

''அப்பா இல்லையா?''

''வருவார். கடைக்குப் போயிருக்கார். நீ உள்ளே வாயேன்.''

நான் நன்றாகப் பார்வை நிறைய ஒரு முறை அவளைப் பார்த்துவிட்டு உள்ளே நுழைந்தேன். போன தடவை இவளைப் பார்த்தபோது இவளுக்கு வயது பதினெட்டு. இப்பொழுது இருபத்தொன்று. உருவத்திலே புதிய மாறுதல் எதுவுமில்லாமல், அந்தப் பதினெட்டு வயதுத் தோற்றத்திலும் வளர்ச்சியிலும் அப்படியே நின்று விட்டாள்.

''நீ ரொம்ப மாறிப்போயிட்டே வரதா! ஏ அப்பா! பார்த்தால் என் கண்ணே பட்டு விடும் போலே இருக்கே!''

''உன் கண்ணு? உன் பார்வை என்மேலே படுகிறதுக்கு நான் கொடுத்து வைச்சிருக்கணுமே?''

''என்னென்னமோ சொல்றயே வரதா?''

''இன்னும் என்னவெல்லாமோ சொல்லணும் என்று ஆசைதான் ஆண்டாளு. எப்படிச் சொல்றது என்றுதான் தெரியல்லே!''

''ஓ!'' என்று பெரிதாகச் சிரித்தாள் அவள்.

நிஜமாகவே இவள் ஒரு மாதிரிதானோ? அவளை உற்று ஊடுருவிப் பார்த்த என் பார்வைக்கு, காலம் அவளை வளர்க்கவில்லை; தேய வைத்துக் கொண்டுதான் போகிறது என்றுதான் தோன்றியது. அவள் மாறவே இல்லை என்று சற்று முன்னால் முதல் பார்வையில் தீர்மானித்துக் கொண்டவன், அந்த வெளித் தோற்றத்தையும், அதை மட்டுமே



# கு.வேங்கடரமணி

பார்த்துவிட்டு அவசரமாக முடிவு கட்டியதையும் எண்ணி, ஏமாந்து போனதைப் புரிந்து கொண்டேன்.

நின்றுபோன எங்கள் பேச்சை மீண்டும் தொடங்க நான் முயலும் நேரத்தில் தேசிகன் வந்துவிட்டார். மளிகைக் கடையிலிருந்து வாங்கி வந்த சாமான்களைத் தாழ்வாரத்தில் இறக்கி வைத்துவிட்டு, ''ஆண்டாளு, உள்ளே எடுத்து வை அம்மா!'' என்று சொல்லிக் களைப்புத் தீர மேல் துண்டினால் விசிறிக்கொள்ள ஆரம்பித்தார். அவர் உடலில் தள்ளாமையின் ஆதிக்கம் மேலெழுந்து நின்றது.

தேசிகன் இன்னமும் நான் வந்திருப்பதைக் கவனிக்கவில்லை. ஆண்டாளுவும் அவரிடம் சொல்லத் தோன்றாமல் குமுறிக் கொண்டிருந்தாள்.

நான் சட்டென்று எழுந்து அவர் எதிரில் போய்த் தரையில் விழுந்து வணங்கினேன்.

''யார், யார்?'' என்று கூச்சமும் படபடப்புமாகப் பின்வாங்கிக் கொண்டே கேட்டார் அவர்.

''நம்ம வரதன்!'' — துல்லியமான குரலில் சரளமான உரிமையோடு இப்போது ஒலித்தது ஆண்டாளுவின் அறிமுகம்.

''வரதனா? எப்போ வந்தே?'' என்று கேட்டுக்கொண்டே அவசரமாக என்னைத் தூக்கி நிறுத்திவிட்டு, ''இதென்ன அசட்டுக் காரியம்?'' என்றார் தேசிகன்.

''எது மாமா அசட்டுக் காரியம்?''

''நான் சர்வ சாதாரணம். கோவில் மடப்பள்ளியிலே கரண்டியைப் பிடிக்கிறவன். என் காலிலே வந்து விழுந்து சேவிக்கிறதாவது?''

''நிச்சயமாய்ச் செய்யலாம் மாமா! அத்தனையும் உங்க ஆசீர்வாதம். உங்க கையாலே பிரசாதம் வாங்கிச் சாப்பிட்ட உடம்பு இது!''

''அது கிடக்கட்டும். நீ எப்போ வந்தே? படிப்பெல்லாம் முடிஞ்சு போச்சா?''

''நேத்திக்குத்தான் வந்தேன் மாமா. மூணு வருஷம் வெளிநாட்டிலே தனியாய்ப் பயிற்சி முடிச்சுட்டேன். இனிமேல் வேலைக்

ருப் போக வேண்டியதுதான். அநேகமாய் அடுத்த மாசம் உத்தரவு வந்து விடும்.''

''பெருமாள் புண்ணியத்திலே சௌக்கியமாய் இருக்க வேண்டியது. எத்தனை சம்பளம் கொடுப்பா?''

''ஆரம்பத்திலே ஐந்நூறு ரூபாய் கிடைக்கும். ஆயிரம் வரைக்கும் உயரும்.''

இத்தனை நேரம் தூணருகில் நின்று கொண்டிருந்த ஆண்டாளு சமையலறையை நோக்கி விரைந்தாள். அறைக்குள் சென்று அங்கே நின்றுகொண்டே ''தளிகையைச் சீக்கிரமா முடிச்சுடறேன் அப்பா. இங்கேயே சாப்பிடலாம்னு சொல்லுங்கோ அப்பா!'' என்று அழைப்பு விடுத்தாள்.

''இன்னிக்கு வேண்டாம். இன்னொரு நாளைக்குக் கட்டாயம் நானே வந்துவிடுகிறேன்....''

''வரதனுக்கு உபசாரமே வேண்டாம். அவன் எப்போதும் நம்ம பழைய வரதன் தான். கொஞ்சம்கூட மாறாமல் அப்படியே இருக்கானே, அது போதாதோ? இந்தக் காலத்திலே இது பெரிய அதிசயமாச்சே!''

எங்கள் பேச்சு ஆண்டாளுவுக்கு நன்றாகக் கேட்டிருக்கும்.. அவளிடமிருந்து அப்புறம் பேச்சே இல்லே.

மறு நாள் பெண் பார்க்க வரப் போகிறவர்களைப் பற்றிப் பேச ஆரம்பித்தார் தேசிகன்.

''சுமாரான இடம். பையனுக்கும் ரொம்ப வயசாயிடல்லே. இரண்டாந்தார வரன். இதைவிடக் குறைஞ்ச வயசிலே கிடைக்குமா? இந்தத் தடவையாவது தட்டாமல் நடக்கணும். எல்லாம் தாயாரும் பெருமாளும் பார்த்து நடத்தி வைக்கணும். என் கையிலே என்ன இருக்கு?''

''நடக்கும், நடந்து விடும்'' என்று எனக்குள் முனகிக் கொண்டேன்.

'ம்..... எனக்குப் பெரிய பாரம் இவள். வருஷக் கணக்காய் நானும் முயற்சிக்கு மேலே முயற்சியாய்ப் பண்ணிக் கொண்டே இருக்கேன்.''

ஏதோ காரியமாய்க் கூடத்துப் பக்கம் வந்தாள் ஆண்டாளு. அவளுடைய முகத்தைப் பார்த்தேன். அலட்சியச் சிரிப்புப் படர்ந்திருந்தது அதிலே.

வீடு திரும்பும் போது அந்த முகமும் சிரிப்புந்தான் முன்னால், வந்து நின்றன. நிஜமாகவே அவள் ஒரு மாதிரிதானோ?

அவள் ஆண்டாள் என்று பெயர் எழுதிக் கொண்டு உள்ளூர்ப் பள்ளிக்கூடத்துக்கு வந்த நாள் முதல் பார்த்த முகந்தான். ஆண்டாள் ஆண்டாளுவானாள். இது ஊரார் வைத்த பெயர். அப்புறம் வயதாக ஆக அவள் வளர்ந்தாள். அந்த வளர்ச்சியில் அழகும் இருக்கத்தான் இருந்தது. ஆனால் அந்த அழகுக்கு மதிப்பில்லே. 'அசட்டு ஆண்டாளு' என்று எல்லோரும் புதுப் பெயர் வைத்தார்கள். அவள் அதற்காகக் கவலைப் படவும் இல்லே; கண்ணீர் விடவும் இல்லே. மாறாக ஆண்டாளு அப்படி அழைத்தவர்களைப் பார்த்துச் சிரித்தாள். தாயில்லாப் பெண். அவளைத் திருத்தவோ விவரம் தெரிந்தவளாக அவளை மாற்றவோ யாருமில்லே.

''ஆண்டாளுவா? அது ஒரு மாதிரியாச்சே!'' என்று தீர்மானமாகி விட்டது. ஏழைப் பெண்ணுக்குப் பெயர் வைக்கிறதும் சுலபம். அது நிலைத்துப் போகிறதும் அதைவிடச் சுலபம். ஆனால் ஆண்டாளு இதை ஏன் அலட்சியமாய் ஏற்றுக் கொண்டாள்?

## 2

மாலை.

அதே ஊஞ்சலில் உட்கார்ந்திருந்தேன்.

தாழ்வாரத்தில் காலடி ஓசை கேட்டது.

ஆண்டாளுதான் வந்தாள். கையிலே ஒரு பாத்திரம். வாழை இலையைப் போட்டு மூடி ஜாக்கிரதையாகப் பிடித்துக் கொண்டு வந்தாள்.

''என்னது ஆண்டாளு!'' என்று ஆவலோடு கேட்டேன்.

''பிரசாதம் உனக்குப் பிடிக்குமே என்று கொண்டுவந்தேன்'' என்றாள் அவள்.

''உன் கையாலே நிறைய வாங்கிச் சாப்பிட்டிருக்கேனே, அந்த அற்புதமான ருசி எனக்கு நிறைய பிடிக்கும் ஆண்டாளு!''

அவள் பிரசாதத்தைச் சமையலறையில் கொண்டு போய் வைத்து விட்டு வந்தாள்.

''மாமி இல்லையா?''

''ஊஹூம். என்னைக் காவல் வச்சுட்டு எங்கேயோ ஊர்க் கதை பேசப் போயிட்டாள்...''

''அப்போ நான் போயிட்டு வரேன்.''

''என்ன அவசரம் ஆண்டாளு? போகலாமே. நாளைக்கு உன்னை யாரோ பெண் பார்க்க வராளாமே? கல்யாணம் ஆயிட்டா நீ ஊரை விட்டே போயிடுவே!''

''கல்யாணம் ஆயிட்டாத்தானே?''

''ஏன், ஆகாது?''

''நான் நினைக்கல்லே. இது வரைக்கும் எத்தனையோ பேர் வந்து பார்த்தாச்சு. பார்த்துட்டுப் போய்ப் பிடிக்கல்லேன்னு சொல்லியாச்சு.''

அவள் சிரித்தாள்.

''ஏன் சிரிக்கிறே, ஆண்டாளு? இது சிரிக்கிற விஷயமா?'

'பின்னே என்ன? ஐம்பது வயசுக்காரன் வந்து பார்க்கிறான். தன்னோட வயசு மறந்து போயிடறது. 'பெண் ஏதோ சுமாரா இருக்கா' அப்படீன்னு இழுத்துப் பிட்டுப் போயிடறான். இது வரைக்கும் நூறு பேராவது இருக்கும். 'நொண்டி முடமாய் இருந்தாலும் தேவலே; கொஞ்சம் வசதியான இடமாப் பாரு அப்பா'ன்னு சொன்னேன். ஒண்ணும் நடக்கல்லே.''

'வருத்தப்படாதே, ஆண்டாளு!' என்று சொல்ல நினைத்தேன். வாய் திறந்து சொல்லவில்லே. அவள் கொஞ்சமாவது வருத்தப்பட்டதாகத் தெரிந்தால்தானே?

''நாளைக்கு வரப் போகிற இடம் திருப்தியாய் இருக்குன்னு மாமா சொன்னாரே. இந்த வரன் நிச்சயமாய் முடிவாகிவிடும்



## எடுப்பான அவ் வரிகளை மிடுக்கோடு அணியுங்கள்!

மபத்லால் க்ரூப் ஷர்ட்டிங்குகளின் இழைவான மென்மையை உணருங்கள்... ஒரு முறை அவற்றை அணிந்தீர்களானுல் மறுமுறை உங்களுக்கு வேறு எதிலுமே திருப்தி ஏற்படாது!

**மபத்லால் க்ருப்**

பாப்ளின்கள்
மற்றும் ஷர்ட்டிங்குகள்

டெரீன், 2×2 டெரீன்/காட்டன் டெபிலெட், மஃபினேட் மற்றும் ஸ்ட்ரெச் வகையிலும்.




LPE Ayan. M. 59 TM







இந்தியாவில் முதன் முதலாக டெலிவிஷன் மூலம் இந்தியன் ஓவர்ஸீஸ் பாங்க் கதீட்ரல் காரியாலயத்தில் சில விநாடிக்குள் உங்கள் காரில் இருந்தபடியே உங்கள் செக்கிற்கு பணம் பெறலாம். இதே மாதிரி பணமும் கட்டலாம்.



# இந்தியன் ஓவர்ஸீஸ் பாங்க் லிமிடெட்

தலைமைக் காரியாலயம்: 151, மவுண்ட் ரோடு, சென்னை-2.

எம். ஸிடி. முத்தையா
சேர்மன்

கே. எம். நஞ்சப்பா
ஜெனரல் மானேஜர்

ஆண்டாளு. எனக்கு அப்படித்தான் ஒரு நம்பிக்கை ஏற்பட்டுது.''

''ஆனால் நான் நம்பவே இல்லே.''

''ஏனாம்?''

''எனக்குள்ளே ஒரு ஆசை.''

''என்னது ஆண்டாளு?'' நான் படபடத்தேன்.

''இது வரைக்கும் இத்தனை பேர்கள் வந்து என்னைப் பார்த்துப்பிட்டுப் பிடிக்கல்லேன்னு சொல்லல்லியா? நானும் ஒரு தடவை அப்படிச் சொல்லப் போறேன். 'உன்னை எனக்குப் பிடிக்கலே'ன்னு நாளைக்குச் சொல்லி அனுப்பிடப் போறேன்.''

''ஆண்டாளு! ஆண்டாளு!' என்று கூவினேன்.



''தங்கம்! உன் எடை எவ்வளவு தெரியுமா?........ 1,36,000 கிராம்!''

அவள் சிரித்துக் கொண்டிருந்தாள்.

''ஏன் அப்படிச் சொல்லக் கூடாதோ?''

''சொல்லலாம்.''

அதற்கு மேல் என்னால் எதுவும் பேச முடியவில்லை.

அவள் போய் விட்டாள்.

## 3

மறு நாள் மாலை.

ஆண்டாளுவின் வீட்டை நோக்கிப் புறப்பட்டேன். சந்நதித் தெருவில் நுழையும் போது கோவில் மணி ஒலித்தது.

திண்ணையில் உட்கார்ந்து தெருவைப் பார்த்துக் கொண்டிருந்த ஆண்டாளு என்னைப் பார்த்ததும் எழுந்து தெருப் படி வரை வந்து, ''வா, வரதா'' என்று சொல்லி விட்டுக் கோபுர வாயிலை நோக்கிப் பார்வையைத் தாவ விட்டாள்.

''அதோ பார், அதோ பார்!'' என்று அவசரமாகச் சுட்டிக்காட்டினாள் ஆண்டாளு.

திரும்பிப் பார்த்தேன். ஒரு பெண் கோவிலை நோக்கிச் சென்று கொண்டிருப்பதைக் கண்டேன்.

''அந்தப் பெண்ணைப் பார்த்தாயா?'' என்று கேட்டாள்.

''அவளுக்கு என்ன?''

''அவளைத்தான் மாமி உனக்காகப் பார்த்து வைத்திருக்கிறாள்.''

''எனக்கா?''

''உம். உனக்குத்தான். ரொம்ப அழகு அவள். நிறையப் படித்தவள். அவள் அப்பா பெரிய இஞ்சினியர்.''

''போதுமே, ஆண்டாளு. நான் அவளைப் பார்க்கவும் மாட்டேன். எனக்கு அவளைப் பார்க்கவும் பிடிக்காது.''

''ஏனாம்?''

'உண்மையைச் சொல்லட்டுமா ஆண்டாளு? நான் உன்னைத்தான் கல்யாணம் செய்து கொள்ளப் போகிறேன்.''

ஆண்டாளு சிரித்தாள்.

''சிரிக்காதே!'' என்றேன் அவசரமாக.

அவள் என்னைப் பார்த்து மௌனமாக நின்றாள்.

''நீ அசட்டு ஆண்டாளுதான்.''

''ஏன் அப்படிச் சொல்றே?''

திடீரென்று அவளுடைய முகம் வாடிப் போயிற்று. கண்கள் கலங்கின.

ஆண்டாளு அழுகிறாளா?

ஏன்?

''வரதா!''

அவள் பெருமூச்சு விட்டாள்.

''ஆண்டாளு!''

''உம்..... உனக்கு என் மேலே அனுதாபம். நான் கஷ்டப்படறதை, கல்யாணம் ஆகாமல் நிற்கிறதைப் பார்த்து நீ இரக்கப்படறே. அதுக்காகத்தானே இப்படிச் சொல்கிறே?''

நான் தலையை அசைத்தேன்.

''அதுக்காகக் கல்யாணமே பண்ணிக்க முடியுமா? நேத்திக்கு எனக்கும் கொஞ்சம் ஆசையும் கலக்கமுமாத்தான் இருந்தது.''

''நான் யாருக்கும் பயப்படவும் மாட்டேன்; கவலைப்படவும் மாட்டேன். இதைத் தெரிஞ்சுக்கோ ஆண்டாளு.''

''அதெல்லாம் சரிதான். நானும் உனக்குச் சமமா யிருக்க வேண்டாமா? அப்போத்தானே என் மனசும் நிம்மதியா யிருக்கும்? இல்லாட்டா 'ஏதோ போனாப் போறதுன்னு தானே நீ கல்யாணம் பண்ணிக் கொண்டே என்று என்னுடைய மனசு உறுத்திண்டே யிருக்காதா?''

எனக்குப் பதில் சொல்லத் தெரியவில்லை.

''இன்னிக்கு உன்னைப் பெண் பார்க்க வந்தது என்ன ஆச்சு?'' என்று கேட்டுப் பேச்சை மாற்ற முயன்றேன்.

''வந்தவாளுக்கு என்னைப் பிடிச்சுப் போச்சு.''

''உனக்கு?''

''எனக்குந்தான்.''

ஆண்டாளு கண்களைத் துடைத்துக் கொண்டாள்.

''என்ன, நான் சொன்னது உனக்குப் புரிஞ்சுதா?'' என்று கேட்டாள் அவள்.

''புரிந்தது!'' என்றேன்.

ஆனால் என்றைக்கும் அழாத ஆண்டாளு இன்று மட்டும் ஏன் கண் கலங்கினாள் என்று புரியாமல் குழம்பிற்று என் மனம். இவளை ஏன் எல்லாரும் அசட்டு ஆண்டாளு என்று சொல்லுகிறார்கள் என்றும் புரியவில்லை எனக்கு.



## போட்டி முடிவு

நாள்தோறும் மலைபோல் வந்து குவிந்த கடிதங்களைப் பார்த்த பொழுது பிரமிப்புத் தட்டினாலும் நேயர்களின் நகைச்சுவை உற்சாகத்தைக் கண்டு பெருமகிழ்ச்சியே ஏற்பட்டது. உற்சாகமிகுதியில் பல நேயர்கள் நகைச்சுவை வாக்கியங்களையே தேட மறந்தார்கள் என்பதற்குக் கீழே தரப்பட்டிருக்கும் இரு கடிதங்களே சான்று பகரும்.

'சிந்தியுங்கள், சிரியுங்கள்' பகுதியில் வந்துள்ள சித்திரத்துக்கான வாசகம் 6-2-66 கல்கி இதழிலேயே இல்லை என்பதே என் அபிப்பிராயம். கல்கி இதழின் எல்லாப் பக்கங்களையும் நேயர்கள் வெற்றிப் படிக்க வேண்டுமென்ற எண்ணத்துடன் செய்த தந்திரம் இது.

திருச்சி எஸ். வெங்கடராமன்

கல்கி 6-2-66 இதழை முதலிலிருந்து கடைசிவரை துருவித்துருவிப் படித்துப் பார்த்தேன். எந்தக் கதையிலும், கட்டுரையிலும், அல்லது அரசியல் முதலிய எதிலுமே சரியான வார்த்தைகள் உங்கள்படத்துக்கு ஏற்றவாறு இல்லை. இவ்வளவு பெரிய சிரமத்தைத் தாங்கள் கல்கி நேயர்களுக்குக் கொடுத்திருக்க வேண்டாம்.

சிக்கந்தராபாத் எஸ். எம். சௌந்தரராஜன்

## சிந்தியுங்கள், சிரியுங்கள்!



இப்படி எத்தனையோ கடிதங்கள் என்றும் அறுசுவை உண்டியில் எது அதிகச் சுவை வாய்ந்தது என்பதை எப்படிப் பகிர்ந்து கூற முடியாதோ, அப்படி அமைந்திருந்தன பல்லாயிரம் நேயர்களின் நகைச்சுவை வாக்கியங்கள். எனினும், பரிசுக்குரிய வாக்கியங்களாக இரண்டே வாக்கியங்களைத் தேர்ந்தெடுத்தோம். இந்த வாக்கியங்களை முன் சேர்க்கையும் பின்சேர்க்கையும் இல்லாமல், எழுதி அனுப்பியவர்களுக்கு மட்டுமே பரிசு தருவது என்றும் முடிவு செய்தோம். பரிசு பெற வேண்டும் என்ற உற்சாகத்தில் ஒருவரே பல நகைச்சுவை வாக்கியங்களை எழுதி அனுப்பியிருக்கிறார். அவர்களுடைய உற்சாகத்தைப் பாராட்டும்முகமாக அவர்கள் வரிசைப்படுத்திய முறையில், இவ்வாக்கியங்கள் முதலிடம் பெற்றிருந்தால், அவர்களுக்கும் பரிசு வழங்குவதென்று முடிவு செய்தோம்.

### முதற் பரிசு வாக்கியம்:

"அறியாக் குழந்தைகூட, 'தொடாதே, ஷாக் அடிக்கும்' என்று சொல்லக் கற்றிருக்கிற காலம் இது."

— வடஊரர் வளருகிறது. பக்கம் 38.

இவ்வாக்கியத்தை எழுதிப் பத்துப் பத்து ரூபாய் பரிசு பெறுபவர்கள்:

(1) ஸ்ரீ சந்திரவாணன், 30, கிழக்கு நஞ்சய்ய முதலித் தெரு, கரூர்.

(2) ஸ்ரீ ஜி. கிருஷ்ணமணி, பி. காம் W. S. இன்சுலேட்டர்ஸ் ஆப் இந்தியா, துன் பில்டிங்ஸ், மவுண்ட் ரோடு, சென்னை-2

### இரண்டாவது பரிசு வாக்கியம்:

"ஆரம்ப காலத்தில் அடால்ஃப் ஹிட்லரின் ஆட்சி எவ்வளவு வேகத்தில் சென்றதோ, அதே வேகத்தில் இந்தப் போக்கு முன்னேறி வருகிறது."

— எதிர்க் கட்சியின் கடமை. பக்கம் 4.

இவ்வாக்கியத்தை எழுதி ஐந்து ஐந்து ரூபாய் பரிசு பெறுபவர்கள்:

(1) ஸ்ரீமதி பி. எஸ். திருநாவுக்கரசி அம்மாள், 16, புதுப்பேட்டை வடக்குத் தெரு, பாளையங்கோட்டை, திருநெல்வேலி 2.

(2) திரு பி. சுப்பையா, ஆசிரியர், ஊ. ஒ. து. பள்ளி, செவலூர் அஞ்சல், குழித்தலை வழி, திருச்சி மாவட்டம்.

(3) கே. மணி, வரஞ்சரம், கள்ளக்குறிச்சி, தெ. ஆ. மாவட்டம்.

(4) அ. செல்வநாதம், 31, முல்லா சாஹிபு தெரு, சென்னை-1.

(5) குமாரி செ. கற்பகவல்லி, இறுதி நிலை முதலாண்டு, செந்தமிழ்க் கல்லூரி, மதுரை - 1.

(6) பி. மாடசாமி, குமாஸ்தா, டிவிஷனல் சூப்பரின்டெண்ட்ஸ் ஆபீஸ், ஜெனரல் பிராஞ்சு, சதர்ன் ரயில்வே, திருச்சிராப்பள்ளி.



# காலச்சக்கரம்

அத்தியாயம் 27

## பற்றுதல்

ரோஜா மலர் மாலை யொன்றை ஒரிதழ் கூடக் கீழே உதிராமல் வைக்க விரும்புகிறவன் போல் அத்தனை மெதுவாகத்தான் மிருணாளினியை மெல்லத் தரையில் படுக்க வைத்தான் தங்கப்பன். எனினும் அவள் உயிர் உதிர்ந்து தான் விட்டது. ஏன், எதற்காக அவள் இம்மாதிரி செய்து விட்டாள் என்று யோசிக்க அவனுக்கு நேரமில்லை. அவளை இழக்க நேர்ந்ததற்காகத் துக்கப்பட்டுக் கண்ணீர் உகுக்கக் கூடத் தனக்கு அவகாசமில்லை என்பதைக் கண்ட தங்கப்பன், தன்னைவிட அபாக்கியசாலி வேறு யார் இருக்க முடியும் என்று மனம் நொந்தான்.

வினாடிப் போதுதான். பிறகு பாய்ந்தோடினான் டெலிபோன் இருந்த பக்கம். 'ரிஸீவ'ரை எடுத்துக் காதில் வைத்துக் கொண்டவனுக்கு அதில் 'கொர்ர்ர்' என்ற 'டயல்' டோனைக் கேட்க முடியாதது அதிர்ச்சி அளித்தது. டெலிபோனை 'டொக் டொக்'கென்று தட்டிப் பார்த்தான்; எண்களைச் சுழற்றினான்; பலனில்லை.

டெலிபோன் பழுதாகி விட்டதா? அது மிருணாளினிக்கே தெரியாமல் இருந்திருக்குமா? அல்லது..... ஒரு வேளை யாரோ வேணுமென்றே டெலிபோன் கம்பியை வெளிப்புறத்தில் அறுத்து விட்டிருப்பார்களோ? தன்னைச் சர்வ ஜாக்கிரதையாகப் பாதுகாவலில் வைக்கும்படி மிருணாளினியிடம் சொல்லி அனுப்பிய தலைவன் அவளை முழுமையாக நம்பாமல்

கி. ராஜேந்திரன்

அவள் வீட்டைக் கண்காணிக்கும்படி வேறு ஒருவனையும் அனுப்பியிருக்கலாம் அல்லவா? 'அவசியம் நேர்ந்தால் தங்கப்பன் மீது குண்டைப் பாய்ச்சவும் தயங்கக் கூடாது' என்று கூறித் துப்பாக்கியை அவனிடம் கொடுத்து அனுப்பியவன் இவ்விஷயத்தில் — அவளை — ஒரு பெண்ணை முழுமையாக நம்புவதற்கில்லை என்று முடிவு செய்து மூன்றாவது ஆசாமி ஒருவனையும் அவர்கள் அறியாதவாறு ஏவிவிட்டிருந்தால் ஆச்சரியப்படுவதற்கில்லைதான். அதிகாரம் கையில் சிக்கவிருக்கும் இந்தத் தருணத்தில் அவன் முன்னெச்சரிக்கையுடன்தான் நடந்து கொண்டிருப்பான்.

சாலையை ஒட்டியிருந்தபோல் டெலிபோன் கம்பி இவ்வீட்டுக்குக் கிளை பிரியும் இடத்தில் அந்த மூன்றாவது நபர் தன் கைத் திறமையைக் காட்டியிருக்கலாம்.

ஜன்னல் வழியே ஓர் ஓரமாக நின்று பார்த்தான் தங்கப்பன். வெளியே ஆள் நடமாட்டம் எதுவும் தெரியவில்லை. மரங்கள், செடிகள், புதர்கள் எல்லாம் காடாக மண்டிக் கிடந்த விசாலமான தோட்டத்துக்கு அப்பால் தன் பார்வையைச் செலுத்தவும் அவனால் முடியவில்லை.

அப்படி ஒருவன் தங்கப்பனைப் பின்தொடர்ந்து வந்திருந்தாலும் அவன் காம்பவுண்டுச் சுவருக்கு வெளியே சாலையில்தான் காத்துக் கொண்டிருக்க வேண்டும். அப்படியின்றி அவன் அருகில் இருந்திருந்தால் துப்பாக்கி வெடித்த ஓசை கேட்டு எட்டிப் பாராமல் இருந்திருப்பானா?

அவன் கண்களில் படாமல் தோட்டத்தைக் கடந்து பின்புறமாக ஓடிப் போய்ச் சுவர் ஏறிக் குதித்து விட்டால்? பிறகு நகரை அடைய டாக்ஸி அல்லது பஸ்ஸுக்காகக் காத்திருக்க வேண்டும்! காலம் தாழ்த்தக் கூடிய சமயமா இது? அதோடு 'கேட்'டருகே ஒருவன் காவல் இருக்கிறான் என்பதுதான் என்ன நிச்சயம்? தன்னுடைய ஊகம்தானே அது?

மேஜை மீது இருந்த பைல் கட்டை எடுத்துக் கொண்டு வாசலில் நிறுத்தப்பட்டிருந்த மிருணாளினியின் காரை நோக்கி விரைந்தான் தங்கப்பன். காரின் கதவைத் திறந்த மறுகணம் ஏதோ நினைத்துக் கொண்டவனாகத் திரும்பி வந்தான். மிருணாளினியின் கரத்தில் சிக்கியிருந்த துப்பாக்கியை விடுவித்து அதைத் தன் கோட்டுப் பையில் பைல்கட்டுகளுடன் செருகிக் கொண்டபோதும். அப்போது தன் நெஞ்சில் மிருணாளினியின் ரத்தம் படிந்திருப்பது அவன் கவனத்துக்கு மீண்டும் வந்தது. ரத்தக் கறையுடன் கூடிய கோட்டை அணிந்து கொண்டு வெளியே எப்படிப் போக முடியும்? கோட்டைக் கழற்றினான் தங்கப்பன். கனமான கம்பளிக் கோட்டானதால் அதனை ஊடுருவிச் சட்டையை அதிகமாக நனைத்து விட்டிருக்கவில்லை குருதி. ஒன்றிரண்டு பொட்டுக்கள் மட்டும் வெண்மையான சட்டையில் 'பளிச்'சென்று தெரிந்தன.

தங்கப்பன் கோட்டை விரித்து அன்பும் கனிவும் பொங்க அதனால் மிருணாளினியின் மேனியை அரவணைப்பதுபோல் மெல்லப் போர்த்தினான். அவள் கேசத்தை ஒரு முறை தடவிக் கொடுத்தான். ''தூங்கு மிருணாளினி, தூங்கு!'' என்று தழுதழுத்த குரலில் அவன் வாய் முணுமுணுத்தது.

சகலத்தையும் மறந்து அவன் அவள் முகத்தையே பார்த்துக் கொண்டிருந்தான்.

''இந்த நிலையில் என்னை ஓர் அநாதைப் பிணம் போல் போட்டு விட்டுப் போகிறேன் என்கிறீர்களே?'' என்று மிருணாளினியின் முகம் அவனை வினவியது.

''இல்லை, மிருணாளினி! நான் போகமாட்டேன்'' என்று நெஞ்சு வெடிக்க விம்மினான் தங்கப்பன். துக்கத்தை அவனால் இனியும் அடக்க முடியவில்லை. நிலைகுலைந்து, 'மிருணாளினி! மிருணாளினி!' என்று கூவி அழைத்து அவள் நெற்றியை வருடியபடி புலம்பி அழுதான்.

'என்னை விட்டுப் போகாதீர்கள்! என் லட்சியங்களைச் சிதற அடித்து விடாதீர்கள்!'

தங்கப்பன் தீயைத் தீண்டியவன் போல் திமிர்ந்து எழுந்தான். இறந்த பிறகும் அவள் தன் லட்சியங்களுக்காகவே போராடுகிறாளா? அவளை அப்பால் போக விடாமல் இப்படி இழுக்கடிப்பதற்கு வேறு என்ன அர்த்தம்? ஆபத்தை நெருங்க விட்டுவிட்டுப் பொன்னான நிமிஷங்கள் பலவற்றைத் தான் வீணடித்து விட்டதை உணர்ந்தான் தங்கப்பன். ''நான் போக வேண்டும், மிருணாளினி! என்னை மன்னித்துவிடு!''

நாலே எட்டில் மிருணாளினியின் காரை அடைந்து, உள்ளே அமருகையிலேயே ஸ்டார்ட்டைத் திருப்பி இன்ஜினைக் கிளப்பினான். அவனுக்குப் பக்கத்தில் பைல்கட்டும் துப்பாக்கியும் கிடந்தன.

சாலையை அடைந்ததும் கார் என்பது கிலோ மீட்டர் வேகத்தில் பறந்தது. சற்றுத் தூரத்துக்குத் தன் பின்னாலேயே ஒரு கார் வருவதையும் அதில் காரோட்டி வந்தவனைத் தவிர வேறு யாருமில்லை என்பதையும் எதிரே இருந்த நிலைக் கண்ணாடியில் பார்த்தான் தங்கப்பன். 'நான் சந்தேகித்தது போல் இவன் புரட்சி முன்னணியைச் சேர்ந்த ஒருவனாகவே இருக்கலாம்.......'

இரண்டு நிமிஷங்களுக்குப் பிறகு அந்தக் கார் தங்கப்பனைப் பின்தொடரவில்லை. சாலை ஓரமாக நின்று விட்டது. இதனால் ஆபத்து குறைந்து போனதாகக் கூற முடியாதுதான். தங்கப்பனைப் பின்பற்றிச் செல்வதை விடத் தங்கப்பன் மிருணாளினியிடமிருந்து தப்பிச் செல்கிறான் என்பதை உடனுக்குடன் தம் தலைவனுக்குத் தெரியப்படுத்துவதைத்தான் முக்கியமெனக் கருதுவான் அவன். இந்நேரம் டெலிபோனில் தன் தலைவனுடன் பேசிக் கொண்டுதான் இருப்பான். காரில் போய்ச் சேருவதற்குள் எட்டு முறை டெலிபோனில் பேசி விடலாமே! தங்கப்பன் நேராக எங்கே, யாரைப் பார்க்கப் போவான் என்பது அவர்கள் அறியாததா? புரட்சி முன்னணியின் தலைவன் தகவல் அறிந்து தங்கப்பனைத் தடுத்து நிறுத்துவதற்கான மாற்று நடவடிக்கைகள் எடுத்துக் கொள்வதற்கு முன்னால் நீலதாயனுவைச் சென்றடைந்து

தான் இப்போது காண்பிப்பதுதான் அவர் கையெழுத்துப் போட்டிருக்க வேண்டிய அசல் பட்டியல் என்பதைத் தெரிவித்து விட்டால் போதும்.

'என்னதான் விளக்கிச் சொன்னாலும் தீனதயாளு தாம் ஏமாந்து விட்டதை இலேசில் ஒப்புக் கொள்ள மாட்டார். அத்தனை அகம்பாவம் அவருக்கு உண்டு. அவரை நம்ப வைக்க நீண்ட நேரமாகும். அதற்குள் காரியம் கைமீறிப் போய்விடலாம். ஆனால் இந்த ஃபைல் கட்டைக் கண்டதும் அவர் திடுக்கிடுவார். அவர் தவறு இழைத்து விட்டதை இது கண்ணுக்கு மெய்யாக நிரூபித்துக் காட்டும். மாற்று உத்தரவுகளைப் பிறப்பிக்கச் சற்றேனும் தாமதிக்க மாட்டார்.

'இந்த ஃபைலையும் அதில் உள்ள காகிதங்களையும் மிருணாளினியோ அவன் தலைவரோ அழிக்காமல் வைத்திருந்தது எவ்வளவு நல்லதாயிற்று? எவ்வளவோ ஜாக்கிரதையாகத் திட்டமிட்டு அதை அணுவளவும் பிசகின்றி நிறைவேற்றியும் வந்தவர்கள் இந்தச் சிறு விஷயத்தில் தவறு செய்து விட்டார்கள். தன் திறமைக்கு ஒரு சான்றாக, பயங்கரமான ஒரு சதித் திட்டத்தில் தான் ஈடுபட்டு வெற்றி கண்டதற்கு ஒரு ஞாபகச் சின்னமாக இதைப் பத்திரப்படுத்தி வைக்க மிருணாளினி நினைத்திருக்கலாம். என்றோ விளையாட்டில் வெற்றி பெற்றவர் வெள்ளிக் கோப்பையை இன்று பார்த்து மகிழ்வதைப் போல இவளும் எதிர்காலத்தில் இந்த ஃபைல் கட்டைக் கண்டு மனம் பூரிக்க நினைத்தாளோ, என்னமோ?' நோக்கம் எதுவானாலும் அது இப்போது தங்கப்பனுக்குப் பயன்பட்டது. ஆக்ஸிலேட்டரை மேலும் கொஞ்சம் அழுத்தினான் அவன். நகரின் எல்லைப்புறத்தில்தான் இத்தனை வேகமாகச் செல்ல முடியும். ஜன நடமாட்டமிருந்த சாலைகளை அடைந்து விட்டால் பிறகு நிதானமாகத்தான் காரைச் செலுத்த வேண்டும். நல்ல வேளையாகக் காரின் பெட்ரோல் டாங்கு பாதிக்குமேல் நிறைந்திருந்தது.........

'தீனதயாளு எங்கே இருப்பார்? தம் வீட்டிலா? அல்லது காரியாலயத்திலா? மணி பத்து நாற்பத்தைந்து. அவர் அப்படி ஒன்றும் குறித்த நேரத்தில் காரியாலயத்துக்குச் சென்று விடுகிறவர் அல்லதான். ஆனால் இன்று மிக முக்கியமான நடவடிக்கைகளை மேற்கொண்டிருக்கிறார் அல்லவா? குறித்த நேரத்தில் அலுவலகத்தில் இருந்தபடி டெலிபோனில் பலருடன் தொடர்பு கொண்டு எல்லாக் காரியங்களும் சரிவர நடந்தேறுகின்றனவா என்று கவனித்து வருவார்.' — இப்படி உறுதியாக நம்ப இடமிருந்ததால் நேராக அவர் காரியாலயத்துக்கே சென்றான் தங்கப்பன்.

அவர் அறையின் உள்ளே செல்ல அனுமதி வாங்குவது அவ்வளவு சுலபமாக இருக்காது என்று தங்கப்பன் முன்கூட்டியே அனுமானித்து விட்டான். அதற்கேற்ப, 'அவரை யாரும் தொந்தரவு செய்யக் கூடாது. மிக முக்கியமான காரியத்தில் அவர் ஈடுபட்டிருக்கிறார்' என்று வருகிறவர்களிடம் சொல்லி அனுப்புவதற்கென்றே கதவருகில் இரண்டு பேர்கள் நின்றார்கள். தான் எவ்வளவு சொன்னாலும் அவர்கள் கேட்கப் போவதில்லை. அவர்களிடம் வாதாடுவதில் பயனில்லை என்பது தங்கப்பன் அறிந்ததுதான். ஆகவே அவன் வேறு எங்கோ நேராகப் போவது போல் வேகமாக நடந்து வந்தான். தீனதயாளுவின் அறை வாசலை அடைந்ததும் வந்த வேகத்திலேயே திரும்பிக் காவலிருந்த சப்ராஸிகளைக் கொஞ்சமும் லட்சியம் செய்யாமல் கதவைத் திறந்து கொண்டு மளமள வென்று உள்ளே நுழைந்தான். சற்றுச் சாவதானமாக விழித்துக் கொண்ட பணியாளர்கள் பரபரப்புடன் ஓடி வந்து அவனைக் கட்டிப் பிடித்தார்கள்.

அதற்கு முன்னால் அவன் தீனதயாளுவின் மேஜை அருகே போய்த் தன் கரத்திலிருந்த ஃபைல் கட்டை அவரெதிரே வைத்து, "ரொம்ப அவசரம், உடனே இதைப் பிரித்துப் பாருங்கள்" என்று கூறியும் விட்டான்.

தீனதயாளு ஒன்றும் புரியாமல் திகைத்தார். பரம ரகசியம் என்று எழுதப்பட்டிருந்த சர்க்கார் ஃபைல் கட்டையும் அதனைத் திடுதிப்பென்று கொண்டு வந்து வைத்த அவனையும் மாறி மாறிப் பார்த்தார். சப்ராஸிகளுக்குக் கைஜாடை காட்டி



## கவனத்துக்கு...

கல்கிக்குக் கதை கட்டுரைகள், துணுக்குகள் எழுதி அனுப்புங்கள். வரவேற்கிறோம்.

ஆனால் தயவு செய்து வேறு ஒரு பத்திரிகைக்கு அனுப்பி வைத்திருக்கும் கதை கட்டுரை அல்லது துணுக்கையே கல்கிக்கும் அனுப்பி வைக்காதீர்கள்.

துணுக்குகள் ஒவ்வொன்றும் தனித் தனித் தாளில் காகிதத்தின் ஒரே பக்கத்தில் விலாசத்தோடு எழுதப் பட்டிருக்க வேண்டும்.

பிரசுரமாகாதவற்றைத் திரும்பப் பெற விரும்பினால் தங்கள் விலாசமிட்ட, தபால் தலையுடன் கூடிய ஓர் உறையை உடன் வைத்து அனுப்புதல் வேண்டும். இவை! சம்பந்தமாகக் கடிதப் போக்குவரத்து வைத்துக் கொள்வதற்கில்லை.

—ஆசிரியர்


TVS

அவர்களை அனுப்பி வைத்தார். மெல்ல ஃபைல் கட்டைப் பிரித்தார்; படித்தார். பக்கங்களை அவசரம் அவசரமாகப் புரட்டினார். அவர் விழிகள் பிதுங்கின; கரங்கள் நடுங்கின.

''இது..... இது..... நடந்தது... நீ.... உனக்கு.....'' பலப்பல கேள்விகள் ஒருமிக்க அவர் உள்ளத்தில் எழுந்தன. எதையும் கேட்க முடியாமல் நாக் குழறியது.

தங்கப்பன் நடந்தவற்றைச் சுருக்கமாகக் கூறினான்.

கேட்டுக் கொண்டே வந்த அவர் முகம் வெளுத்துப் போயிற்று. ''போலீஸ் பார்ட்டிகள் ரெய்டுக்குக் கிளம்பியிருக்குமே! தனித் தனிக் கூட்டங்களாகப் பிரிந்து அவர்கள் நகரின் பல பகுதிகளுக்கும் போய்ப் பல வீடுகளிலும் ஆபீஸ்களிலும் அரெஸ்ட் வாரண்டுகளுடன் நுழைவார்களே! அவர்களை யெல்லாம் எப்படி எங்கே தடுத்து நிறுத்துவது? அதுவும் ஒரே சமயத்தில்?''

இந்த இக்கட்டான நிலையில் அவர் சிந்திக்கும் திறனையே இழந்து விட்டவர்போல் காணப்பட்டார்.

''அவர்கள் எல்லோரும் ஒரே இடத்திலிருந்துதானே கிளம்புவார்கள்? புறப்படும் இடத்திலேயே அவர்களைப் பிடியுங்கள். ஸார்! டெலிபோனை எடுங்கள்!'' என்று துரிதப்படுத்தினான் தங்கப்பன். ''அதிருஷ்டம் நம் பக்கம் இருந்தால் குறித்த நேரத்துக்குச் சில நிமிஷங்கள் தாமதமாகத்தான் அவர்கள் புறப்படுவார்கள்!''

ரிஸீவரை எடுத்து அவர் கையில் திணித்தான் தங்கப்பன். டயல் செய்யப் போன தினதயாளு, பட்டென்று ரிஸீவரைத் திரும்பவும் வைத்து விட்டுத் தங்கப்பன் பக்கமாகத் திரும்பினார். ''முதலில் நான் கையெழுத்துப் போட்டது போலி என்றும் இதுதான் அசல் என்பதற்கும் என்ன அத்தாட்சி ?''

நெற்றியில் உள்ளங் கையால் ஓங்கி அடித்துக் கொண்டான் தங்கப்பன். பொறுமை இழந்தவனாக. ''ஐயோ! சந்தேகப் பிராணியாக இருக்காதீங்க. எப்படிப்பட்ட பேராபத்து உங்களையும், இந்த நாட்டையும் சூழவிருக்கிறது! இப்படித் தயங்கித் தயங்கிக் காரியத்தைக் கெடுத்து விடாதீங்க. உங்களைக் கெஞ்சிக் கேட்கிறேன்! சீக்கிரம் ஸார்! சீக்கிரம்!''

அறை வாசலில் ஆரவம் கேட்டது. யாரோ ஹிந்தியில் உரத்த குரலில் அதிகாரத் தொனியில் பேசினார்கள். உள்ளே அனுமதிக்கப்படவேண்டும் என்று ஆர்ப்பாட்டம் செய்கிறவராய்த்தான் இருக்க வேண்டும்.

''பட்டாச்சாரியின் குரல் போலிருக்கிறதே!'' என்றார் தினதயாளு. பித்தானை அழுத்தி வெளியே மணியோசை கேட்க வைத்தார்.

''பட்டாச்சாரியா அது? உள்ளே வரச் சொல்லு'' என்று சப்ராஸியிடம் அவர் அனுமதி வழங்குமுன்னர், அந்த மனிதனே வந்துவிட்டான். தினதயாளுவின் மேஜை எதிரே யிருந்த நாற்காலிகளுள் ஒன்றில் அமர்ந்து கொண்டான். சப்ராஸி திரும்பிப் போய் விட்டான்.

''இன்று ரெய்டுக்குக் கிளம்ப வேண்டிய பல போலீஸ் பார்ட்டிகளுள் ஒன்றுக்கு நீங்கள் தலைமை தாங்க வேண்டியவரல்லவா! ஸி. பி. ஐ. ஹெட்குவார்ட்டர்ஸில் இன்று காலை நீங்கள் 'ரிப்போர்ட்' செய்யவில்லையா ?'' என்று வியப்பும் சந்தேகமும் கோபமும் மிகக் கேட்டார் தினதயாளு. தமது உத்தரவுகள் மீறப்பட்டு அவர் கண்டதேயில்லை. குழப்பத்தில் ஆழ்ந்தார்.

''புறப்படத்தான் தயாராகிக் கொண்டிருந்தேன். அதற்குள் இந்தப் பயல் இந்தப் பக்கமாக வருவதைப் பார்த்தேன். இவன் பெரிய அபோக்கியன் என்பது எனக்குத் தெரியும். இவனால் உங்களுக்கு ஏதும் துன்பம் நேருமோ என்று பயப்பட்டேன். அதனால் என் டெபுடியிடம் ரெய்ட் நடத்த வேண்டிய பொறுப்பை ஒப்படைத்துவிட்டு இவனைப் பிடிக்க ஓடி வந்தேன்.''

சட்டென்று மின்னலைப் போன்று ஓர் உண்மை தங்கப்பனின் உள்ளத்தில் பளிச்சிட்டது. புரட்சி முன்னணியின் ரகசியக் கூட்டத்தில் தான் கலந்து கொள்ளச் சென்ற போது இந்தப் பட்டாச்சாரியாவும் அவர்களில் ஒருவனாக அங்கே அமர்ந்திருந்தான் என்பதுதான் அது.

''ஸார்! இவனை நம்பாதீங்க! இவனும் ஒரு சதிகாரன்தான்'' என்றான் தங்கப்பன்.

தினதயாளு புருவங்கள் நெரியப் பட்டாச்சாரியாவைக் கூர்ந்து நோக்கினார். ''என் ஆணையை மீறி நீ ஏன் இங்கு வந்தாய், அதைச் சொல்லு!'' என்று கர்ஜித்தார்.

பட்டாச்சாரியாவின் முகத்தில் கொடூரமான ஒரு புன்னகை அரும்பியது. அவன் கரத்தில் ஒரு துப்பாக்கி இருந்தது இப்போது. ''சும்மா கத்தாதீர்கள், ஸார்! உங்கள் ஆணை அதிகாரங்களெல்லாம் அஸ்தமிக்கும் சமயம் நெருங்கி விட்டது! இவன் என்னை அடையாளம் கண்டு கொண்டு விட்டான். இனி நான் மறுத்துச் சொன்னாலும் யாரும் நம்பப் போவதில்லை.....''

தினதயாளு ஏதோ கூற வாயெடுத்தார்.

''உஷ்! வாயைத் திறக்கக் கூடாது. இரண்டு பேரும் அமைதியாக உட்கார்ந்திருக்கும் வரை நானும் இதைப் பயன்படுத்த மாட்டேன். உங்களைப் போன்ற அதிகார மமதை கொண்ட சிலரைத் தீர்த்துக் கட்டிய கையோடுதான் ராணுவ ஆட்சி அமைக்கப்படவிருக்கிறது. இப்போதைக்கு நீங்கள் மாற்று உத்தரவு ஏதும் பிறப்பிப்பதைத் தடை செய்யமட்டுமே நான் தலைவரால் அனுப்பப்பட்டிருக்கிறேன். தங்கப்பன் மிருகஷாலையிலிருந்து தப்பி விட்டான் என்ற செய்தி கிடைத்ததும் தலைவர் என்னை ஃபோனில் அழைத்து விஷயத்தைக் கூறினார்.

''இன்னும் முக்கால் மணி நேரம் —நாற்பத்தைந்து நிமிஷங்கள் — கிடைத்தால் போதும். உங்களுடைய கட்டளையின்படி எல்லாக் காரியங்களும் கச்சிதமாக நடந்தேறி விடும். அதுவரை நீங்கள் உயிர் வாழ்ந்தால் எங்களுக்கு நல்லதுதான். ஆனால் இடையூறு செய்தால்....'' பட்டாச்சாரியாவின் விழிகள் அவர்கள் இருவரது ஒவ்வோர்

அனைவரையும் உற்று நோக்கின. துப்பாக்கி இருவருக்கும் பொதுவாகத் தயாராயிருந்தது.

சுவர்க் கடிகாரத்தின் 'டிக் டிக்' என்ற ஒலி மட்டும் தெளிவாகக் கேட்டுக் கொண்டிருந்தது. விநாடிக்கு விநாடி அது 'காலத்தின் கோலத்தை உன்னால் மாற்றி அமைக்க முடியாது தங்கப்பா!' என்று நையாண்டி செய்து கொண்டிருந்தது.

'என்னால் முடியாமல் போகலாம்; ஆனால் முயன்று பார்க்காமல் விடமாட்டேன்' என்று தனக்குள் சபதம் செய்து கொண்டான் அவன். 'தீமைகளை எதிர்க்கத் துணியாமல் விதியைச் சுட்டிக் காட்டுபவன் கோழை!' தங்கப்பனுடைய கரத்தின் ஒரு வீச்சிலே தீனதயாளுவின் மேஜையின் மீது இருந்த டெலிபோன் பட்டாச்சாரியாவின் முகத்தைத் தாக்கியது. திடீரென்று இப்படி டெலிபோன் பறக்கும் சக்தி பெற்று வந்து மோதும் என்று எதிர்பார்க்காத பட்டாச்சாரியா வேதனை தாளாமல் இயல்பாகத் தன் கரங்களை முகத்தினருகே கொண்டு போனான். தங்கப்பன் தன் கால்சராய்ப் பைக்குள் கையை விட்டு மிருணாளினியிடமிருந்து தான் விடுவித்துக் கொண்டு வந்த துப்பாக்கியை எடுத்துப் பட்டாச்சாரியாவை நோக்கிச் சுட்டான்.

ஆனால் அதற்குள் பட்டாச்சாரியாவும் தன்னிடமிருந்த துப்பாக்கியை இயக்கிவிட, குண்டு தீனதயாளுவின் நெஞ்சில் வலது புறத்தில் பாய்ந்தது. சப்ராஸிகள் சத்தம் கேட்டு அலறிப் புடைத்துக் கொண்டு ஓடி வந்தார்கள். தரையில் பட்டாச்சாரியா இறந்து விழுந்திருப்பதையும் தீனதயாளு தம் மேஜைமீதே சரிந்து கிடப்பதையும் கண்ணுற்றுக் கலங்கிச் சிலையாகி நின்றார்கள். பக்கத்தில் கண்ணாடி ஜாடியிலிருந்த நீரை உள்ளங்கையில் ஊற்றிக் கொண்டு தீனதயாளுவின் முகத்தில் தெளித்தான் தங்கப்பன்.

"தயவுசெய்து டெலிபோனை எடுத்துப் பேசுங்கள்! பேச மாட்டீர்களா?" என்று கெஞ்சினான். பெருமுயற்சி செய்து தட்டுத் தடுமாறி அவர் மேஜை மீதிருந்த மற்றொரு ஃபோனை எடுத்தார். "ஸி. பி. ஐ. ஹெட் குவார்ட்டர்ஸ் – அர்ஜண்ட்!" என்றார்.

உள்துறை மந்திரி சபையின் துப்பறியும் இலாகா தலைவருடன்தான் பேசினார்: "நான் தீனதயாளு. ரெய்டுகளை நிறுத்துங்கள்! மோசடி நடந்து விட்டது! நான் ஏமாந்து போனேன், சாகக் கிடக்கிறேன். என் அறையில் தங்கப்பன் காத்திருக்கிறான். அவன் உங்களுக்கு எல்லா விவரங்களையும் சொல்வான். உண்மைச் சதிகாரர்கள் எல்லாரையும் வளைத்துப் பிடிக்க உதவுவான். சீனாவின் தூண்டுதலும் இதில் இருந்திருக்கிறது...... ஆமாம், சீக்கிரம் இங்கே வாருங்கள்!"

தீனதயாளுவுக்கு மூச்சு வாங்கியது. கண்கள் செருகிக் கொண்டு போயின.

"அமைதியாக இருங்கள்! டாக்டரை வரவழைக்கிறேன்" என்றான் தங்கப்பன்.

தீனதயாளு புதுத் தெம்பு பெற்றவர் போல் தலையசைத்தார். "தொந்தரவு பண்ணாதே. வேலை இருக்கிறது எனக்கு!"

"ஹல்லோ! உடனே பி. எம்.முக்குப் போடு!" பிரதமரிடமும் சுருக்கமாக விஷயத்தை விளக்கினார் தீனதயாளு. "நான் ராஜிநாமா செய்கிறேன்" என்று கடைசியில் சேர்த்துக் கொண்டார். ரிஸீவர் அவர் கரத்திலிருந்து நழுவியது.

துருத்தி போல் அவர் நெஞ்சு விம்மித் தணிந்தது. வலியினால் அவர் முகம் அஷ்டகோணலாக முறுக்கிக் கொண்டது. வேதனையில் துடித்த நெஞ்சை அவர் ஒரு கரத்தால் அழுத்திப் பற்றிக் கொண்டார். விரல் இடுக்குகளினூடேயும் கடைவாயிலும் வழிந்த குருதியுடன் அவர் பயங்கரமாகத் தோற்றமளித்தார். அவரது மற்றொரு கரம் தங்கப்பனின் கையை மரணப் பிடியில் இறுக்கமாகப் பற்றியிருந்தது. "தங்கப்பா! எனக்குச் சிநேகிதர்கள் யாருமே கிடையாது. நண்பன் என்று சொல்லிக் கொள்ள ஒருவன்கூட இல்லை. உஷா..... உஷா........" முணுமுணுப்பாகச் சொற்கள் வெளிவந்தன. கண்கள் ஏக்கத்துடன் அவனை நோக்கின.

அவர் என்ன கேட்கிறார் என்பது தங்கப்பனுக்கு விளங்கியது. அவரது இறுதிக் கோரிக்கை அது. "எனக்குப் புரிகிறது" என்றான் தங்கப்பன். "உங்கள் குடும்பத்துக்கு உற்ற நண்பனாக நான் ஒருவன் இருக்கிறேன். உஷாவை நான் கவனித்துக் கொள்கிறேன்."

இப்படி அவன் கூறியதைக் கேட்கும் பாக்கியத்தை அவர் பெற்றிருக்கவில்லை.

தன் கரங்களைச் சிரமப்பட்டு விடுவித்துக் கொண்டான் தங்கப்பன். வாழ்க்கையில் அவருக்கு எத்தனையோ பற்றுதல்கள். கடைசியாக அவர் பற்றிய தன் கரங்களை அவன் பார்த்தான். அவற்றில் முகத்தைப் புதைத்துக் கொண்டு அவருக்காகக் கண்ணீர் உகுத்து அழுதான்.

(தொடரும்)



"அவர் தமிழுக்குத் தொண்டு புரியக் கிளம்பியிருக்கிறார் பார்த்தீங்களா?"

"புரியட்டும்! அதுக்கென்னத்துக்குப் பக்கெட்டில் தண்ணீர்?"

"அவர் கடற்கரையிலுள்ள உ. வே. சுவாமிநாதய்யர் சிலையை முதலில் தேய்த்துக் குளிப்பாட்டப் போகிறார்!"

# சேவைக்கு ஒரு சகோதரி

மோனிகா ஃபெல்டன் — அசுவத்தமா



இருண்ட அந்த அறையில் அடைந்து கிடந்த இரு சிறுமிகளும் கடுமையான குரலில் மிஸ் பிரேகர் அந்தக் கேள்வியைப் போட்ட போதிலும் அஞ்சவில்லை. நிராசையும் ஏமாற்றமும் தொனிக்கும் குரலில் சிறுமி பத்மா பதிலளித்தாள். ''ஐஸ் இங்கே இருக்கிறதா என்றுதேடிக் கொண்டிருந்தோம். எங்குமே கிடைக்கவில்லையே!'' என்றாள்.

ஐஸ்ஹவுஸில் அக்குழந்தைகள் ஐஸ் தேடியதில் வியப்பென்ன? விஷயமறிந்து எல்லோரும் கொல்லென்று சிரித்து மகிழ்ந்தார்கள்.

இரவு ஒன்பது மணிக்கெல்லாம் பெண்கள் அனைவரும் நிம்மதியாக உறங்கி விட்டனர். வீடு அமைதியில் ஆழ்ந்தது. தனது சிறு அறையில் தனியாகப் படுத்திருந்த சுப்புலக்ஷ்மி மட்டும் உறக்கம் பிடிக்காமல் ஜன்னல் வழியே நட்சத்திரங்களைப் பார்த்துக் கொண்டிருந்தாள். சயனித்திருக்கையில் இரவு நேரத்தில் அலை ஓசையைக் கேட்பது அவளுக்குப் புதுமையான ஓர் அநுபவமாக இருந்தது. தான் பிறந்தது முதல் காணாத சந்தோஷத்தை இன்று அடைந்து விட்டதாக உணர்ந்தாள்.

ஆகாயத்தில் உள்ள அநேக நட்சத்திரங்களில் நம்முடைய பூமியானது சமுத்திரத்தின் நடுவே உள்ள ஒரு துளி நீரைப் போன்றது தான் என்று அவள் யோசித்துப் பார்த்துக் கொண்டிருந்தாள். அப்போது பகவத் கீதையில் பகவான் கிருஷ்ணன் சொன்ன சொற்கள் நினைவுக்கு வந்தன. ''உன்னுடைய கடமையைச் செய். இதனால் தேவர்களைப் பேணுவாய். தேவர்கள் உன்னைப் பேணட்டும். பரஸ்பரம் பேணி அதனால் மேலான சிரேயஸை அடைவாய்.''

இனிமேலாவது தன்னுடைய பராமரிப்பின் கீழ் இன்று உள்ள பெண்களுக்கும், இனி வருங்காலத்தில் ஐஸ்ஹவுஸில் வந்து சேரக் கூடிய பெண்களுக்கும் சில்லறைத் தொந்தரவுகள், இடையூறுகள், மனக் கஷ்டங்கள் ஏதுமின்றி நல்ல கல்வியை அளிக்க முடியும். அவர்கள் முகத்தில் மீண்டும் சந்தோஷம் களைகட்டுவதைக் காண முடியும். அத்துடன் இவர்கள் இங்கிருந்து வெளியேறிச் செல்லும்போது தாங்கள் இங்கு கற்றதை யெல்லாம் மகிழ்ச்சி கலந்த ஆர்வத்துடன் பிற பெண்களுக்கும் சொல்லிக் கொடுக்க இயலும்.

சுப்புலக்ஷ்மி தன் தங்கைகளைப் பற்றிச் சிந்தித்தாள். பாலுவும் ஸான்டியும் சிறுவர்களாய் விளங்கியபோது இருந்ததைப் போலவே, இன்றும் ஒருவருடன் ஒருவர் ஒன்றி வாழ்ந்தார்கள். சாவித்திரி மெஸபொடோமியாவில் இந்திய ராணுவத்தில் இப்போது பணியாற்றிக் கொண்டிருந்த தன் கணவர் டாக்டர் துரைசாமியிடம் மிகுந்த அன்பு வைத்திருந்தாள். துரைசாமி அவளுக்கு அடிக்கடி கடிதம் எழுதி வந்தார். என்றாலும் நெடுந் தொலைவிலிருந்து வருகிற தபாலானதால் பல சந்தர்ப்பங்களில் காலதாமதமாகவே வந்து சேரும்.

சாவித்திரிக்கு எப்போதும் கணவனைப் பற்றிய கவலைதான். சுப்புலக்ஷ்மியும் யுத்தம் சீக்கிரமே முடிந்து துரைசாமி சௌக்கியமாகத் திரும்பி வரவேண்டும் என்று தினந்தோறும் பிரார்த்தித்த வண்ணம் இருந்தாள். திடீரென்று யாரோ வீறிட்டலறும் குரலொலி கேட்டது.

சுப்புலக்ஷ்மி பதறித் துடித்துக் கொண்டு விழித்தெழுந்தாள். அவள் எழுந்து சென்று பார்ப்பதற்குள் வேறு பலரும் அதே போல் கூக்குரலிட அவர்கள் போட்ட கூச்சல் அக்கட்டடம் முழுவதும் நிரம்பி எதிரொலித்தது.

''பேசாமல் இருங்கள்'' — சுப்புலக்ஷ்மி படுக்கை அறையின் வாயிலில் நின்று அதட்டுகிற குரலில் கட்டளையிட்டாள். ''என்ன அது...?''

''பாம்பு! பாம்பு!''

"விஸ்டர், விஸ்டர்! அது என் மேலேயே ஊர்ந்து சென்றது....!"

"சரி சரி! இனிமேல் கவலை ஒன்றுமில்லை." சித்தி அவ்வறையின் மறு கோடியிலிருந்து குரல் கொடுத்தாள். அவள் தன் இடது கையில் ஓர் அரிக்கேன் விளக்கையும், வலது கையில் ஒரு நீண்ட கழியையும் பிடித்துக் கொண்டிருந்தாள். தலை குனிந்து அப் பெரிய பாம்பைப் பார்த்துக் கொண்டிருந்தாள். அது நெளியவில்லை. அதன் துடிப்பு நின்றுபோய் விட்டிருந்தது. "செத்துப் போய் விட்டது" என்றாள் சித்தி.

ஆனால் பாம்புகள் சாதாரணமாக ஜோடியாகத்தான் வளைய வரும் என்று நம்பப்படுவதை அவர்கள் மறக்கவில்லை! வீடு முழுவதும் நன்றாகத் தேடிப் பார்த்து விட்டுப் பிறகுதான் படுத்துக் கொண்டாள்.

மறுநாள் காலை எல்லோரும் எழுந்தவுடனேயே ஒரு செம்படவன் தன் சகாக்கள் ஐந்தாறு பேர்களை அழைத்துக் கொண்டு அங்கு வந்தான். அவர்களுக்கு இரவில் இவர்கள் போட்ட சத்தம் கேட்டதாம்.

"அம்மா!" மீனவர் தலைவன் சகோதரியை நோக்கிப் பேசினான். "இது எதிர்பார்த்த தொல்லைதானே? நீங்கள் நினைப்பதை விட இது மிகவும் பயங்கரமான விஷயம். இந்த வீட்டின் மீது ஒரு சாபக்கேடு இருப்பது உங்களுக்குத் தெரியாதா?"

சகோதரியின் பதிலுக்குக் கூடக் காத்திராமல் அவன் தொடர்ந்து பேசினான். அந்த வீட்டில் பேய்களின் நடமாட்டம் உள்ளது. தலைமுறை தலைமுறையாக வாழ்ந்து வந்த மீனவர்கள் இதை உண்மை என்று அறிவார்கள். திருவல்லிக்கேணியில் உள்ள பலர் இங்கு வசிக்க வந்திருக்கும் பெண்களுக்குத் தீங்கு செய்ய நினைத்திருப்பதும் அந்த மீனவர்களுக்குத் தெரியும்! ஆனால் இவர்கள் அப் பெண்களுக்கு நன்மையைத் தவிர வேறெதுவும் நினைக்கவில்லை. அவர்களுக்குச் சகாயமாக எதை வேணுமானாலும் செய்யச் சித்தமாக இருந்தனர். காவு கொடுத்துத் தூர்த் தேவதைகளைத் திருப்தி செய்துவிடலாம். ஒரு சேவலையும், ஒரு வெள்ளாட்டையும் செம்படவர்களின் தெய்வத்துக்குக் 'காவு கொடுத்தால் போதும். பெண்மணிகள் பணம் தந்தால் தாங்களே அப்பிராணிகளை வாங்கித் தகுந்த நியமங்களுடன் காவு கொடுத்துவிட அவர்கள் தயாராக இருந்தனர்.

சகோதரி அவர்களுக்கு நன்றி கூறினாள். ஓர் ஆடும், ஒரு சேவலும் கோவிலில் பலி கொடுக்கப்பட்ட பிறகு செம்படவக் குடும்பங்களுக்கு அவை நல்விருந்தாக அமையும் என்று அவள் அறிவாள். அவர்கள் மாமிசம் சாப்பிடுவதையோ அல்லது புதிதாக வந்தவர்களிடம் கிடைத்ததைத் தட்டிக் கொண்டு போக அவர்கள் முயன்றதையோ அவள் தவறாக எடுத்துக் கொள்ளவில்லை. ஆனால் அவர்களுடைய மூட நம்பிக்கைகளுக்கெல்லாம் ஆதரவு தருவதைவிட "மேலான வகையில்' மிஸ் பிரேகரும், சித்தியும், தானும் அம் மீனவர்களுக்கு உதவி செய்ய முடியும் என்று சுப்புலக்ஷ்மி உறுதியாக எண்ணினாள். ஆகையினால் அவள் அவர்களுடைய கோரிக்கைக்கு இணங்கவில்லை. அவர்களிடம் இனிமையாகப் பேசி அனுப்பி விட்டாள். ஐஸ் ஹவுஸில் தாங்கள் இன்னும் சற்றுக் குதிர்ந்த பிறகு அவர்களுடைய மனைவி மக்களைப் பார்க்க அவர்களுடைய வீடுகளுக்கு வருவதாக' வாக்குத் தந்தாள்.

பிறகு அவள் தன்னுடைய அறைக்குச் சென்று ஓய்வு எடுத்துக் கொள்ளலானாள். சமீபத்தில்தான் கடுமையான நோயிலிருந்து மீண்டிருந்த அவளுக்கு இன்னும் பலவீனமாகவே இருந்தது. இந்தப் பலவீனம் சீக்கிரமே மறைந்துவிடும் என்று அவள் நம்பினாள். ஐஸ் ஹவுஸ் இந்தப் பரந்த உலகிலுள்ள வேறு எந்த வீட்டுக்கும் குறைந்ததல்ல என்று கூறும் வகையில் சந்தோஷம் நிரம்பிய இல்லமாகத் திகழும் என்பதில் அவள் உறுதியாக இருந்தாள்.

## 7

அந்தக் கட்டடத்தில் தங்களுக்கு முன்னால் வேறு யாரும் வசித்திருந்ததாகவே அந்தப் பெண்களுக்குத் தோன்றவில்லை. ஆரம்ப நாள் முதல் ஐஸ்ஹவுஸில் தாங்கள் மட்டுமே வசித்து வந்திருப்பதுபோல் சொந்தம் கொண்டாடினார்கள். தாங்கள் எவ்வளவு பாக்கியசாலிகள் என்பதை யாரும் அவர்களுக்கு எடுத்துக் கூற வேண்டிய அவசியம் இருக்கவில்லை.

பள்ளிக்கூடத்துக்கு நடந்து செல்வது பெரும் சோதனையாகத்தான் இன்னமும் இருந்தது. ஸ்திரீகள் தங்கள் வீட்டு வெளித் திண்ணைகளில் நின்று வெறித்துப் பார்ப்பார்கள். மற்றவர்களையும் வந்து பார்க்கும்படி கூவி அழைப்பார்கள். கொடூரமான குத்தலான மொழிகளைப் பேசுவார்கள்.

விஸ்டர், மிஸ் லின்ச், மிஸ் பிரேகர் மூவரும் இந்தத் தொல்லைக்கு முற்றுப்புள்ளி வைக்க ஒரு திட்டம் வகுத்திருந்தனர். அது, உயர்நிலைப் பள்ளிக்கான புதிய கட்டடம் ஒன்று ஐஸ்ஹவுஸ் காம்பவுண்டுச் சுவரையடுத்தாற்போல் இருந்த பொட்டல்வெளியில் அமைந்துவிட வேண்டும் என்பதுதான்.

அது பொருத்தமான இடம். அங்கு பள்ளிக்கூடக் கட்டடத்துக்கு மட்டுமின்றி விளையாட்டு மைதானங்கள், டென்னிஸ் கோர்ட்டுகள் போன்ற எல்லாவற்றுக்கும் போதிய இடம் இருந்தது. ஆனால் யுத்தம் முடியும்வரை இந்தத் திட்டத்துக்குச் சர்க்காரிடம் அநுமதி பெற முயலுவது வீண் பிரயாசையாகவே இருக்கும். இதற்கிடையில் பெண்கள் தங்களுக்குக் கிடைத்ததைக் கொண்டு திருப்தியடைய வேண்டியதுதான். பொறுமையாக இருக்கவும் அவர்கள் கற்றுக் கொள்ள வேண்டியதுதான்.

பள்ளிக்கூடக் கட்டடங்கள் பழைமையாகவும், குறைந்த வசதிகளுடனும் இருந்தன. இட நெருக்கடி மிகுந்திருந்தாலும், பள்ளிக்கூடத்தில் மகிழ்ச்சியும் நிரம்பி வழிந்தது. அதன் உள்ளே சென்று விட்டால் பிறகு ஐஸ்ஹவுஸ் பெண்களுக்கும் மற்றப் பெண



"அம்மா! நான் பள்ளிக்கூடம் போகும் போது பப்பர்மிண்ட் கடைக்கு எதிரே தடுக்கி விழுந்து விட்டேன். கடைக்காரர் என்மீது அனுதாபப்பட்டு இரண்டு மிட்டாய்கள் கொடுத்தார்!"

"அட அசடே! அப்படியே போன் ஐஸ் கிரீம் கடைக்கு எதிரே தடுக்கி விழுந்திருக்கக் கூடாதா?"

களுக்குமிடையே வித்தியாசம் ஏதும் இருக்கவில்லை. விதவை என்று சொல்லையே யாரும் உபயோகிப்பது கிடையாது. பிற்காலத்தில் அவர்கள் ஒரு வேலையில் அமர, அவர்களுடைய கடந்த கால வாழ்க்கையில் நிகழ்ந்துவிட்ட துர்ப்பாக்கியம் மிகுந்த சம்பவங்கள் இடைஞ்சலாக இருக்கலாம் என்பதால், சகோதரி சுப்புலக்ஷ்மி அவர்களின் குடும்ப விவகாரங்கள் ஏதுவும் தஸ்தாவேஜுகளில் இடம் பெறாமல் பார்த்துக் கொண்டாள். பள்ளிக்கூடத்தின் சட்டப்படி மாணவிகளின் ஜாதியைக் குறிப்பிட வேண்டியிருந்தது. ஆனால் அக்குறிப்புகளும் கண் மறைவாக வைத்துப் பூட்டப்பட்டன. பள்ளிக்கூடத்துக்குள் ஜாதி மத வித்தியாசங்கள் எழாமல் ஆசிரியைகள் கவனித்துக் கொண்டார்கள். பள்ளியில் இருந்த மாணவிகளில் பாதி பேருக்கு மேல் பிராமணர்கள் தான். பிற ஜாதி இந்துக்களும், கிறிஸ்துவர்களும் இருந்தனர். கான்வெண்டிலிருந்து வந்த கன்னி மாடத்தைச் சேர்ந்த ஸ்திரீகளுடன் ஆதித் திராவிடர்களும் ஒன்றாய்ப் படித்தனர்.

சகோதரி சுப்புலக்ஷ்மி ஐஸ்ஹவுஸுக்குச் சென்ற சில நாட்களுக்கெல்லாம் மீனவர் குழந்தைகளுக்காக ஒரு பள்ளிக்கூடம் தொடங்கியிருந்தாள். அதில் படித்த பெண்கள் சிலர் பிறகு உயர்நிலைப் பள்ளியில் சேர்ந்திருந்தனர். ஹரிஜனங்களுக்கு இடையிலேயே கூடப் பிற ஜாதியினரிடையே இருப்பது போல் பல வேறுபாடுகள் இருந்து வருவதையும் இவற்றை நீக்குவது ரொம்பக் கடினம் என்பதையும் உணர்ந்திருந்தாள் சுப்புலக்ஷ்மி. மீனவர் பள்ளியில் எழுதப் படிக்கக் கற்ற மிகவும் புத்திசாலியான, அழகான சிறுமி ஒருத்தி, ஒரு தோட்டியின் மகள். இந்த விவரம் தெரிந்திருந்தால் திருவல்லிக்கேணிப் பள்ளியில் அவளுக்குத் தோழிகளே அகப்பட்டிருக்க மாட்டார்கள். அப்பெண்ணைப் பள்ளியில் சேர்த்த சகோதரி இந்த விஷயம் யாருக்கும் தெரியக்கூடாது என்பதில் தீர்மானமாக இருந்தாள். அதனால் அந்தச் சிறுமியின் மகிழ்ச்சிக்கும் குறைவு உண்டாகவில்லை.

மாணவிகளில் பலர் தத்தம் வீடுகளில் தெலுங்கோ, தமிழோ பேசி வந்தார்கள். ஆரம்பப் பள்ளியிலும், ஆரம்பப் பள்ளிகளுக்கான ஆசிரியர் பயிற்சிப் பள்ளியிலும் வகுப்புகள் இம்மொழிகளிலேயே நடத்தப்பட்டன. ஆனால் பின்னால் ஒரு நாள் கலாசாலைக்குள் பிரவேசிக்க எண்ணும் பெண்கள் எவ்வளவு சீக்கிரம் முடியுமோ, அவ்வளவு சீக்கிரம் ஆங்கிலத்தில் பாண்டித்தியம் பெறுவது முக்கியம் என்று கருதப்பட்டது. மெக்காலே கூறியது போல ஆங்கிலம் உலகின் பல பாகங்களில் பல துறைகளிலும் ஏற்பட்டிருக்கும் நவீன முன்னேற்றங்களை வடித்துத் தரும் பாஷை என்பது மட்டுமல்ல. பதினொன்று முக்கிய மொழிகளும், பேச்சு வழக்கில் உள்ள பல நூறு கிளை மொழிகளும் கொண்ட இந்தியாவில், படித்த பெருமக்களிடையே ஆங்கிலம் தான் பழகுமொழியாகப் பயன்பட்டது. சுப்புலக்ஷ்மியின் தந்தையைப் போன்றவர்கள், படித்த சென்னைவாசிகள், தங்களுக்குள்ளேயும் நாட்டின் வேறு பகுதியினரைக் கண்ட போதும் ஆங்கிலத்தில்தான் பேசி வந்தனர்.

மிஸ். பிரேகரும் அவளுக்குக் கீழ் பணியாற்றிய இதர உபாத்தியாயினிகளும் ஆங்கிலம் கற்றுத் தருவதற்கான புதுமையான, கவனிக்கக் கூடிய முறைகளையெல்லாம் கையாண்டனர். மிஸ் பிரேகர் எனக்கு எழுதிய கடிதம் ஒன்றில் கூறுகிறார்: "இவ்விஷயத்தில் நாங்கள் வழக்கத்தில் உள்ள எல்லா விதிமுறைகளையும் மீறி விட்டோம். ஆங்கிலம் கற்றுக் கொடுப்பதற்கு ஏற்ற கவர்ச்சிகரமான வழி எதுவானாலும் அது பயன்படுத்தப்பட்டது. பெண்களுக்கும் எங்கள் நோக்கம் என்னவென்று புரிந்தது. தங்களுடைய எதிர்காலச் சிறப்பு ஆங்கிலத்தை நன்கு பயிலுவதில்தான் இருக்கிறது என்பதை அவர்கள் உணர்ந்தார்கள். மெதுவாக இச்செய்தி வெளியில் பரவலாயிற்று. வெளியே பலத்த எதிர்ப்பு இருந்தது. [illegible] சட்டசபையில் கேள்விகள் கேட்கப்பட்டன. இக்கட்டான ஒரு நிலை உருவாகி விட்டது."

ஸ்ரீ வி. எஸ். ஸ்ரீனிவாச சாஸ்திரியையும், அவரது ஆங்கிலப் புலமையையும் அறியாதவர் அதிகம் பேர் இருக்க முடியாது. பிற்காலத்தில் யுத்தமந்திரி சபையில் (Imperial War Cabinet)

சுத்தானந்த பாரதியார் எழுதும்

# தாஷ்கெண்டில் திருமணம்

...அடுத்த இதழில்....

மாணவர் உலகில்
இது ஒரு பிரச்னே

விவேகானந்தா கல்லூரி
முதல்வர்
திரு வேங்கடராமன்
பேட்டி

★

நவரச நிகழ்ச்சிகள்:
இரண்டு அற்புதங்கள்

---

அங்கம் வகிக்கவிருந்த ஸ்ரீ வி. எஸ். ஸ்ரீநிவாச சாஸ்திரி தொடக்கத்தில் சில வருஷங்கள் வரை திருவல்லிக்கேணி இந்து ஹைஸ்கூலில் ஆங்கிலம் கற்பித்து வந்தார். அவருடைய சரளமான ஆங்கிலமானது அவருக்கு 'வெள்ளி நாக்கு படைத்த சொற்பொழி வாளர்' என்று பெயரை வாங்கித் தந்தது. அவருடைய நடை தூய்மையாகவும், இலக்கண சுத்தமாகவும் இருந்ததால் தம் சுயசரிதத்தை ஆங்கிலத்தில் வெளியிட்ட போது காந்திஜி அவர்களே கையெழுத்துப் பிரதிகளை இவரிடம்தான் திருத்துவதற்காக அனுப்பி வைத்தார்.

திருவல்லிக்கேணி சர்க்கார் பள்ளியிலுள்ள சிறுமிகளுக்கு அதிகமான பாடங்களை ஆங் கிலத்தில் கற்பதினால் மிகவும் கஷ்டம் ஏற் படுவதாக அவர் எண்ணினர். 1916ம் வருடம் பிப்ரவரி மாதம் 3ம் தேதி சென்னே சட்டசபையில் பேசுகையில் அவர் இதையே குறிப்பிட்டார். கீழ் வகுப்புகளிலுள்ள குழந்தைகளின் மூளைக்கு அநாவசியமாக அதிக வேலை தரப்படுவதாக அவர் கூறினர். குழந்தைகளுடைய தாய்மொழிகளில் பாடம் சொல்லித் தரக்கூடிய ஆசிரியைகள் போது மான அளவு இல்லாததால், இப்போது ஆங் கிலத்திலேயே போதனே நடக்கிறது போலும் என்று அவர் தம் கருத்தை வெளியிட்டார். இப்போதுள்ள நிலைமைக்கு இது காரணமாக இருப்பினும் மேல் படிவங்களுக்குச் செல்லும் வரையில் பெண்களுக்கு அந்நிய பாஷைகள் கற்பிக்கப்படக் கூடாது என்று அவர் கூறி முடித்தார்.

இதன் விளைவாகச் சட்டசபை அங்கத் தினர்களும், கல்வித்துறைத் தலைவர்களும் அப்பள்ளிக்கூடத்துக்குச் செல்வது என்றும், தாங்களே நிலைமையை நேரில் அறிந்து கொள்வது என்றும் தீர்மானமாயிற்று. அவர்கள் வந்தபோது மிஸ் பிரேகரும், பிற ஆசிரியைகளும், மாணவிகளும் அவர் களை வரவேற்றனர். வந்தனேபசாரங்கள் நடந்த பிறகு, வந்தவர்களையும், மாணவி களையும் தனியே விட்டு விட்டு ஆசிரியைகள் அப்பால் சென்று விட்டனர். பெண்களுக் குத் திடமான அபிப்பிராயங்கள் இருந்தன. அவர்கள் சிறிதும் சங்கோசப்படவில்லை. கேட்ட கேள்விகளுக்குப் பளிச்சென்று பதில் அளித்துத் தம் அபிப்பிராயங்களைத் தெளி வாக எடுத்துக் கூறியபடியால், அவர்களுக்கு ஏற்கனவே ஆங்கிலத்தில் நல்ல தேர்ச்சி இருந்தது என்பது தெளிவாயிற்று. வந்த வர்கள் ஒவ்வொரு வகுப்பாகச் சென்று ஒவ்வொருவரையும் கேள்விகள் கேட்டனர். மிஸ் பிரேகர் இதைப் பற்றியும் எனக்கு எழுதி யிருந்தாள்: ''ஐந்து மணி நேரத்துக்குப் பிறகு அவர்கள் சென்றூர்கள். ஒன்றுமே கூறுமல் போய் விட்டார்கள். நாங்களும் எங்கள் வழியே சென்றோம். ஆங்கிலம் கற்பிக்கப்படு வதற்கான விதிமுறைகளை மீறிக் கொண்டே யிருந்தோம், வழக்கம் போல! தங்களுடைய சுய முயற்சியினுலேயே பெண்கள் வெற்றி அடைந்து விட்டார்கள். மேலும் தொடர்ந்து ஊக்கத்துடன் ஆங்கிலம் கற்க அவர்களுக்கு இந்த நிகழ்ச்சி துணை புரிந்தது.''

தங்கள் உபாத்தியாயினிகளை மாணவிகள் மிகவும் நேசித்தனர். அவர்களில் ஸ்ரீமதி எலிஸபெத் என்பவர் ஓர் இந்திய கிறிஸ்துவர். அவர் நடந்து கொள்கிற தோரணைகள் ஓர் உயர்தர ராணுவ அதிகாரியை நினே வூட்டும்! அழகிய *சிறுமி ருக்மிணியை அடை யாற்றுக்கு அழைத்துச் செல்லப் பள்ளிக் கூடத்துக்கு ஸ்ரீமதி அன்னிபெஸண்ட் அம்மையாரின் ரோல்ஸ்ராய்ஸ் கார் வரும். அதற்கு வழி ஏற்படுத்தித் தருவதற்காக ரிக்ஷாக்களையும் மாட்டு வண்டிகளையும் ஒதுக்கும் முயற்சியில் எலிஸபெத் ஒரு போலீஸ் உத்தியோகஸ்தரைப் போலத் தெரு வில் நின்று அமர்க்களப்படுத்துவாள். மாணவி களும், சில உபாத்தியாயினிகளும் கொல் லென்று சிரித்து மகிழ்வார்கள். 'மதருஸ் டைம்ஸ்' என்ற பத்திரிகை ஆசிரியரின் மக ளான மிஸ் க்ளின்பார்லோ (Glynne Barlow) ஆங்கிலம் போதித்து வந்தாள். அவள் சென்னே வாழ்க்கையைப் பற்றி வேடிக்கை யான நல்ல செய்யுள்களை இயற்றுவாள். பிரிஸ்டலில் (Bristol) இருந்த ஒரு சங்கீத ஸ்தாபனத்தை விட்டு விட்டு வந்த மிஸ் ஐல்ஸ் (Miss Iles) என்பவள் மிகவும் நன்ருக ஆங்கிலச் சங்கீதம் கற்றுக்கொடுத்து வந்தாள்.

இப்படிப் பலர் — முப்பதுக்கும் மேற்பட்ட வர்கள் இருந்தார்கள்.

---

* இன்று கலாக்ஷேத்திரத்தை நடத்தி வரும் ஸ்ரீமதி ருக்மணிதேவி.

பள்ளியில் கர்நாடக சங்கீதம் கற்றுக் கொடுத்த ஒருவர்தான் ஆண் மகன். அவர் சுருதிப் பெட்டியைக் கைக்கு அடியில் இடுக்கிக் கொண்டு வருவார். மிஸ். பிரேகருக்கு ஹார்மோனிய ஒலியைக் கேட்கவே பிடிக்காது. ஆகையினால் அந்தப் பாட்டு வாத்தியாரின் வண்ணத் தலைப்பாகையை ரேழியின் மறுகோடியில் கண்டதுமே அவள் ஓடி ஒளிந்து கொள்வாள். பாட்டுவாத்தியாரும்கூட வெகுநாட்கள் வரை அவள் கண்ணில் படாமல் தலைமறைவாகப் போய்விடத்தான் நினைத்தார். பிறகு ஒருவாறு தைரியத்தை வரவழைத்துக் கொண்டு ஒரு நாள் அவர் அவளுக்கு எலுமிச்சம்பழத்தைக்கொடுத்தார். அவளுக்கு ஹார்மோனியம் வாசிக்கக் கற்றுக் கொடுக்கவும் முன்வந்தார்! ஆனால் மிஸ் பிரேகர் அதற்கு மறுத்துவிட்டாள்.

சுப்புலக்ஷ்மியும் மிஸ் பிரேகரும் வேறு வேறு சூழ்நிலைகளிலிருந்து தோன்றியவர்கள் தான். இருப்பினும் மாணவிகளுக்குப் பழைமையான இந்தியக் கலைகளில் பயிற்சி



அளிக்கப்பட வேண்டும் என்பதிலும், ஆங்கிலம் கற்பதினால் மற்ற படித்த இந்தியர்களைப் போல் இவர்களும் போலி ஐரோப்பியர்களாக மாறிவிடக் கூடாது என்பதிலும் மிஸ் பிரேகரும் சுப்புலக்ஷ்மியும் ஒன்றிய மனத்துடன் ஆர்வம் காட்டினர். திருவல்லிக்கேணி பள்ளிக்கூடம்தான், தெற்கில் (ஏன் இந்தியாவிலேயே என்று சொன்னாலும் மிகையாகாது) முதன் முதலாகச் சித்திரம், சங்கீதம், நாட்டியம் யாவற்றையும் நமது சம்பிரதாயப்படி சொல்லித் தர ஆரம்பித்தது. கும்மியையும், கோலாட்டத்தையும் ஆதாரமாக வைத்து, ருதுக்களைச் சித்திரிக்கப் பற்பல விதமான நாட்டியங்களை சுப்புலக்ஷ்மி உருவாக்கினாள். அவற்றை மாணவிகளுக்குக் கற்றுத் தந்தாள். சில சமயங்களில் பொதுமேடைகளிலும் அப்பெண்கள் ஆடினார்கள். அப்பொழுதெல்லாம் அப்பெண்கள் வண்ண வண்ணப் பட்டுப் பாவாடைகளும் கருத்த வெல்வெட் சொக்காய்களும் இடுப்பில் ஒட்டியாணங்களும் அணிவார்கள். அவர்கள் கேசம் தாழம்பூ வைத்துப் பின்னப்பட்டு அலங்காரமாக விளங்கும். நகரிலேயே வசிப்போரும் வெளிநாடுகளிலிருந்து வந்துள்ளோருமான விருந்தினர்கள் இந்நிகழ்ச்சிகளைப் பார்ப்பார்கள்.

விதவைகள் இல்லத்தைப் பற்றி ஒருசிலர் இன்னமும் குற்றம் சாட்டினார்கள். சென்னையைச் சேர்ந்த ஒரு வைஷ்ணவப் பெண்மணி ஒரு நாள் சகோதரி சுப்புலக்ஷ்மியைப் பார்த்து, "இல்லறவுவில் வைஷ்ணவர்களுக்கும் ஸ்மார்த்தர்களுக்கும் தனித்தனியாகச் சமையல் நடக்குமென்று நம்புகிறேன்" என்றாள் குற்றம் குறை கண்டுபிடிக்கும் தோரணையில்.

"ஒருகாலும் இல்லை" என்று சகோதரி பளிச்சென்று பதிலளித்தாள். கேள்வி கேட்ட இதே மனுஷி, மவுண்ட்ரோடில் உள்ள ஐரோப்பிய பாணி ஹோட்டல் ஒன்றில் தன் கணவருடன் தூண் மறைவில் உட்கார்ந்து ஆம்லெட்டுகளும், மட்டன் கட்லெட்டுகளும் உண்டதாகச் சகோதரி நம்பத் தகுந்தவர்கள் கூறக் கேட்டிருந்தாள். இத்தகைய வேஷதாரியைக் கண்டு வெறுப்புக் கொண்ட அவள் தொடர்ந்து பேசினாள்: "எங்கள் பெண்கள் சைவ உணவையே உண்பார்கள். நம் முன்னோர்கள் சுத்தத்தைக் கருதி ஏற்படுத்திய ஆசாரங்களைத் தவறாமல் கடைப்பிடிப்பார்கள். இதுவே போதும். ஒரே ஜாதியினரிடையேயே வித்தியாசங்களைத் தோற்றுவித்து அந்தப் பெண்களிடையில் வேறுபாடுகளை வளர்ப்பது உசிதமல்ல, நியாயமுமல்ல."

விதவைகள் இல்லத்தைப் பார்வையிட வந்தவர்களில் அநேகம் பேர் இதை ஒப்புக் கொண்டார்கள். கடைசியாகக் கண்டனச் சொற்கள் குறைய ஆரம்பித்தன. பிராமண விதவைகள் இல்லத்துக்குப் பெண்களை அனுப்பும்படி வெளியூரில் உள்ள பெற்றோர்களை இனி மிஸ் ஸின்ச் வேண்டிக் கொள்ளத் தேவையில்லை. அநேகம் பேர்கள் தாமாகவே விரும்பித் தங்கள் பெண்களைக் கொண்டுவந்து சேர்த்தனர். அந்தப் பெரிய கட்டடமும் மெதுவாக நிரம்ப ஆரம்பித்தது! (தொடரும்)

"என்ன சார்! சோகமாய் உட்கார்ந்திருக்கீங்களே?"

"நானும் கோவிந்தசாமியும் ஒரே ஊரில் பிறந்து ஒரே ஸ்கூலில் படித்து, ஒரே காலேஜில் சேர்ந்தோம். பிறகு, ஒரே ஆபீசிலும் வேலைக்குப் போனோம். பாவம்! கடைசியிலே அந்தக் கோவிந்தசாமி......"

"என்ன? ஆள் அவுட்டா?"

"அவன் தலை எழுத்துப்படி மானேஜராகி விட்டான். நான் கிளார்க்காகவே காலந் தள்ளுகிறேன்!"

பூமணத்துடன் வீட்டினுள் நுழைந்த என்னை மனைவி வியப்புடன் வரவேற்றாள். ''என்ன, சம்பந்திகள் ஊருக்குப் போயாயிற்று ? இன்றுதான் ஐயாவுக்கு இந்த ஏழையின் நினைவு வந்ததாக்கும்? ஏது ஒரே பூமணமாயிருக்கிறதே......''

''அடடா, உன் அவசர புத்தி போகவில்லையே! இன்றுதானே விடை ஆற்றி! ஜி.டி.யில் அனுப்பி விட்டால் அப்புறம் 'ஹாய்'யாக வீட்டில் 'அம்பாள் சேவை'தான்.'' நான் மெல்லப் பேசி அவள் ஏமாற்றத்தைக் கொஞ்சலால் தவிர்க்க முயன்றேன்.

ஏமாற்றத்தைத் தோள் பட்டையில் இடித்துக் காட்டி, கண்ணீரை மறைக்க உள்ளே திரும்பினாள் கலா. என்ன செய்வது? எனக்கும் அறிவு இல்லை. அவள் சம்பந்தி என்று குறிப்பிட்ட நபர் ஒரு நாடகக் கோஷ்டித் தலைவர். சம்பு என்று பெயர். எங்கள் சங்கத்தில் காரியதரிசியாகப் பணியாற்றிய நான், அவரை வரவழைத்து ஒரு வாரம் நாடக விழா நடத்தினேன். அவர் ஊருக்குத் திரும்பும் உபசாரத்தை முன்னிட்டுத் தொண்டன் என்ற ரீதியில் நான் சொந்தமாக ஐந்து ரூபாய்க்கு மாலை வாங்கியபோது, வீட்டில் எனக்கு ஆயுள் தொண்டனாக உள்ள மனைவிக்கு அரைமுழப் பூகூட நான் வாங்காதது என் புத்திக் குறைவுதானே? கலாவின் கோபமும் அர்த்தமற்றதல்ல.....

# பரிசு

ப்ரியா



மணி ஏழடித்து விட்டது.....! அடடா, பரபர வென்று மாலைக் கூடையுடன் புறப்பட்டேன். எட்டரைக்கு வண்டி, நாடகக் கோஷ்டியை அவர்கள் ஜாகையிலிருந்து கிளப்பி ஸ்டேஷனுக்கு அழைத்துச் செல்ல வேண்டும்.

''கலா, நீயும் வருகிறாயா, ஸ்டேஷனுக்கு? எல்லாரையும் அங்கே பார்க்கலாம்.''

''ஆகா, உத்தரவு.....'' நிஷ்டூரமாக வந்த பதில் குரலுக்குச் செவி சாய்க்க நேரமில்லை. ஆனால் அவளுக்கும் உள்ளூற ஆசைதான். பல நாகரிக மனிதர்களையும், நடிகர்களையும் காணலாமே என்ற நைப்பாசையில் டாக்ஸி வருமுன் கலா தயாராகி விட்டாள்.

''இந்த ஐம்பத்துக்குக் குறைவில்லை. இந்த டாக்ஸிச் செலவையாவது சங்கக் கணக்கில் காட்டத் தெரியுமா, இந்த அசட்டுப் புருஷனுக்கு......ம்...... இது மாதிரி எத்தனையோ.......!'' என்று கலா முணுமுணுப்பதை டாக்ஸியின் ஒலி அமுக்குவதை உணர்ந்தேன். என்ன செய்வது! என் பலவீனம் அது! நம் சௌகரியத்துக்கு டாக்ஸி. அந்தக் கணக்கைப் பொதுச் செலவில் எழுதுவதா?' நான் உண்மையான தொண்டன். அதைப் பிறர் எடை போடுவதை நான் விரும்பவில்லை.

கம்பீரமாக நடுநாயகமாக நின்றார் நாடகக் குழுத் தலைவர் சம்பு. அவரைச் சுற்றிப் பிரமுகர்கள் கூட்டம். பெரிய பெரிய அதிகாரிகள் என்ன, கலைஞர்கள் என்ன, வியாபாரப் புள்ளிகள் என்ன! பெரிய தலைகள்தான்! சங்கத்தின் முதல் காரியதரிசிகூடப் பெரிய டாக்டர்தான். அந்தஸ்துக்காகச் சில பெரிய மனிதர்களைச் சங்கத்தில் வளைத்துப் போடும் வசதிக்காக இழுத்துப் போடப்பட்டவர் அவர். உழைக்கத்தான் என்னைப் போன்ற சிலர் இருக்கிறார்களே! ஒவ்வொருவராக வந்து 'சம்பு'வுக்கு மாலையிட்டனர்; கைகுலுக்கினர். டாக்டர் ரத்தினம் — காரியதரிசி — ஸோபாவில் அலுங்காமல் உட்கார்ந்து நாடகம் பார்த்தது போலவே, சம்புவுடன் தோளோடு தோள் சேர்த்து வாய் நிறையச் சிரிப்புடன் முகம் மலர நின்று கொண்டிருந்தார்.

''என்ன நீங்களும் போங்களேன்.......'' கலா என் காதருகே கிசுகிசுத்தாள்.

''இரேன், அவர்கள் நகரட்டும்....''

''அழகாயிருக்கிறது. உழைத்ததெல்லாம் நீங்கள். பெருமையாக நிற்க அவரா ?

பிரதம நடிகனுக்கு ஸ்பெஷல் காப்பி, வெந்நீர், பத்தியம் என்று வீட்டிலிருந்து எடுப்பிடி செய்ய நான்..... ஒரு நாடகம் கூட உருப்படியாக முழுசாகப் பார்க்கவில்லை! இப்போது முன்னால் நிற்க டாக்டர் தம்பதியா? உங்களுக்கே சமர்த்து போதாது!'' கலாவின் பொறுமையற்ற முணுமுணுப்பை என் எரிக்கும் பார்வையால் சாம்பலாக்கினேன். சே... இந்தப் பெண் புத்தி போகாது.

''வாங்க, வாங்க..... எதுக்கு இத்தனை சிரமம்? அதுதான் வீட்டிலேயே விடை கொடுத்தீங்களே...... பரவாயில்லை ...... உங்களுக்கெல்லாம் அத்தனை பிரியம்......'' சம்பு பெரிய கும்பிடுடன் வரவேற்றார் ஒரு பிரமுகரை. வந்தவர் பிரயாசையுடன் கூட்டத்தில் முண்டியடித்து முன்னேறினார். எங்கோ ஒரு காமிரா பளிச்சிட்டது!

''ஐயா யார் தெரியுமா? பெரிய கண்டிராக்டர். பெரிய கலாரசிகர்.... அவர் வீட்டிலே மட்டும் என்ன? ஐயாவுக்கு ஏத்த அம்மா! அன்னைக்கு அவுங்க வீட்டு விருந்து மறக்கவே மறக்காது....'' சம்பு யாரிடமோ ஜொலித்துக் கொண்டிருந்தார்.

வந்தவர் பெருமிதத்துடன் ஒரு முறை சுற்றிப் பார்த்தார்.

''அட, நீங்களா? இதென்ன? அட்டா, ஹாண்டி கிராப்ட் சாமானா? ஆகா, ஒரு பேச்சுக்குச் சொன்னேன் அன்றைக்கு....அதற்காக......'' சம்புவின் கண்கள் வேறொருபுறம் தாவின. அங்கு வந்தவர் கையிலே நிர்மல் பொம்மைகள் ஒரு செட்.

'' ஹைதராபாத் ஹாண்டிகிராஃப்ட் பிரமாதமாமே, பார்க்கலாம்னு சொன்னேன். அன்றைக்கு வெள்ளிக்கிழமையாச்சே. கடை இல்லேன்னாங்க! அப்புறம் முடியலே அந்தப் பக்கம் போக.....ஆனால் ஐயா அதை நினைப்பா வாங்கி வந்திட்டாரே.... நன்றி, நன்றி, சந்தோஷம்.......''

வந்தவர் ஒரு படி முன்னேறி, ஒரு பங்கு அதிகமான பவ்யத்துடனேயே தம் காணிக்கையை நீட்டினார். கூட்டம் கரகோஷம்செய்தது!

பொறுமை இழக்கும் கலாவைத் திரும்பிப் பார்க்கக் கூடத் தெம்பின்றி நின்றேன் நான். பரிசுகளும், அவருக்குப் பிடிக்கும் என்று பலகார வரிசைகளும் பிளாட்பாரத்தில் குவிந்தன.

சம்புவும் சளைக்கவில்லை. ''ஐயா வீட்டிலே எங்க நாலு பேருக்கு விருந்துன்னு சொல்லிச் சிநேகிதர்களும், உறவினர்களுமா நாற்பது ஐம்பது பேரைக் கூப்பிட்டுக் கல்யாண அமளி செய்திட்டாரு...... என்ன டாக்டர் சார், நீங்களும் வந்திருக்கீங்களே, எப்படி...'' என்று என்னையும்......

''நம்ம 'எக்ஸைஸ் டிபார்ட்மெண்ட்' ஆபீசர் வாங்கின 'ஷால்' பிரமாதம். இனி நான் அதைக் கட்டிக்கொண்டு பூஜைகூடச் செய்யலாம். மடிக்கு மடி, குளிருக்கும் அடக்கம்......'' என்று இது போல ஓரிரு வரையும், ''நம்ம மாலாதேவி வீட்டிலே அன்றைக்கு விருந்தோடு அவங்க ஒரு மணிநேரம் கச்சேரி செய்து நம்மையெல்லாம் மகிழ்வித்ததை நாம் மறக்கவே முடியாது. எங்க ஊரிலே அவங்க கச்சேரி என்றால் பத்து நாள் முன் 'ரிஸர்வேஷ'னுக்குக் 'கியூ'வில் நிற்க வேணும். எங்கள் பாக்கியம் இங்கு கொடுத்து வைத்தது......'' என்று முக்கியமானவர்களையும் கௌரவித்துக் கொண்டிருந்தார் எங்கள் சங்க விருந்தாளியாக வந்த கலைஞர் சம்பு!

''மிஸ்டர் நாதன்! பசும்பால்தான் எங்களுக்குப் பழக்கம்; மிஸ்டர் நாதன், எங்களுக்குத் தினம் ஆயில் பாத்துக்குக் காலை ஆறு மணிக்கு வெந்நீர் ஏற்பாடாகட்டும்....மிஸ்டர் உபகாரியதரிசி சார், நம்ம காமிடியனுக்கு இன்னைக்குக் கொஞ்சம் தலைவலி, வீட்டிலிருந்தே பத்தியச் சாப்பாடாக எடுத்து வர முடியுமா? மிஸ்டர் நாதன், மியூஸியம் பார்க்க ஏற்பாடு, நாதன், ஹீரோயினுக்குப் புடவைக் கடைக்குப் போக உதவி.....'' இப்படி ஏவி ஏவியே அந்தப் பெயர் இன்று சம்புவின் நாவில் மரத்து மறந்து விட்டதோ?

முதன் முறையாக என் மனத்துக்குள் ஏதோ குறுகுறுத்தது. உழைப்பவர்களைவிட உயர்ந்த அந்தஸ்து வேண்டும் போது மனிதனுக்கு, பிரமுகனாக விளங்க! எங்கோ ஒரு குமாஸ்தாவாக இருக்



கும் எனக்கு இந்தக் கூட்டத்தில் அதற்கு அந்தஸ்து இல்லையா?

அப்பா! என்ன சிரிப்பு, உபசாரம், பிரிவுபசாரம்!

ஆனால் ஒன்று நிச்சயம்! இந்தப் பேச்சும் சிரிப்பும் உண்மையானதல்ல என்பது என் உள் மனத்துக்குப் புரிகிறது. இதோ நான் மாதக் கடைசியில் கடன் வாங்கிச் செலவழித்துள்ள மாலையின் தூய மதிப்பு அந்த அன்பர்களின் உயர்ந்த பரிசுகளுக்கெல்லாம் இல்லை. அதே போல் பெரும் விழாவை இனிதாக முடித்துக் கொடுத்துச் சங்கத்திற்கும் இருபதினாயிரம் முதல் தேடித் தந்த நாடகக் குழுவினரிடம் எனக்குள்ள உண்மையான பக்தி, நன்றி யாருக்கு இருக்கும்? ஆனால்...இந்தப் பிளாட்பாரத்தில்?இதுவும் ஒரு நாடகமேடைதானே?

முதல் மணி அடித்தது. 'ஏறுங்கள், ஏறுங்கள்.' சம்புவை வண்டிக்குள் இனித்தனர். பட்டு அங்கவஸ்திரம் பளபளக்கப் பெரிய கும்பிடுடன் முதல் வகுப்புப் பெட்டியில் கம்பீரமாக நின்றார் அந்தக் கலையன்னையின் தவப் புதல்வர். பிரமாத நடிகர்தான் அவர்; சந்தேகமேயில்லை!

''ம்... இன்னும் என்ன, மாலையைப் போடுங்களேன்... காமிராக்காரர்கூடக் கடைசியாக ஒரு போஸ் தேடுகிறார்'' என்று கலா என்னைத் தூண்டினாள்.

திடீரென்று கூட்டத்தில் ஒரு விம்மல் எழுந்தது. அட, இதென்ன, பிரிவு உபசாரம் வார்த்தைகளோடு இன்றிக் கண்ணீர் நாடகம் கூட ஆரம்பித்தாயிற்றா? சுற்று முற்றும் நோக்கினேன்.

''மகனே... உன்னை இனி மறுபடி எப்போது பார்ப்பேன்? இந்தக் கிழக்கட்டைக்கு அந்தப் பாக்கியம் இருக்குமா?...'' முதிய குரல் ஒன்று தழுதழுத்தது. கண்ணீர் மல்கிய முகத்தை இனம் காண எனக்கு அதிக நேரம் ஆகவில்லை.

அவனருகே இரண்டு குழந்தைகள் விவரம் புரியாது 'அப்பா...பப்பா... டாட்டா...'' என்று கையாட்டின.

அவனுக்குப் பின் ஒரு மங்கை. கண்கள் கலங்க, ஆனால் கலங்கக் கூடாது என்று அறிவு தடுக்க, இதழ்கள் துடிக்க, ஆனால் மறுபடி காண்பேனோ என்று கூறுவதுகூட அபசகுனமோ என்று நடுங்குவது போல் சொல் நெஞ்சுக்குள் அடைக்கப் புயலில் அடிபட்ட கொடியெனத் துடித்து நின்றாள். அந்தச் சிறு குடும்பத்தின் பார்வைக்கு இலக்கான அன்பு ஆத்மாவை நோக்கத் திரும்பினேன். மூன்றும் வகுப்புப் பெட்டியின் வாயிலில் அவன் கம்பீரமாக நின்றான். அவன் கண்களில் கலக்கத்தை மீறிய பெருமிதம்; முகத்தில் பொலிவு; நம்பிக்கை. இடையில் அலங்கரித்தது காக்கி நிற யூனிபாரம்! போர் முனையில் அபார சாதனைகள் புரிந்து தாய்நாட்டின் கௌரவத்தை நிலைநாட்டிய பாரதத் தாயின் வீரப் புதல்வன் அவன்! ஆயிரமாயிரம் மக்களின் கண்ணீரைத் துடைக்கப் போகும் — ஏன், பாரதத் தாயின் கவலையையே துடைக்கத் துணிந்து விட்ட அந்தத் தவப் புதல்வன் தன் தாயின் கண்ணீருக்குக் கலங்கவில்லை; பின்னைப் பாசத்துக்குப் பதறவில்லை!

''என்ன, அங்கென்ன வேடிக்கை...இதோ சம்பு கூப்பிடுகிறார் உங்களை... சீக்கிரம் போங்கள்... வண்டி புறப்படப் போகிறது.'' கலா குரல் கொடுத்தாள். என் விலாவில் இடித்தாள். ''சீக்கிரம் மாலை போடுங்கள். போட்டோ எடுக்கப் போகிறார்கள்.''

பரபரப்புடன் பூப்பொட்டலத்தைப் பிரித்தேன். என் கையில் பெரிய ரோஜா மாலை மின்னியது. ''இதோ வருகிறேன் கலா... விரட்டுகிறாயே!''

''ஓ... நாதனா?'' சம்புவின் குரல் ஒலித்தது. ''உங்களுக்கெல்லாம் ரொம்ப வேலை... ஹி...ஹி...''

''ஓ!... அதற்கென்ன...ஒரு நிமிஷம்...'' மாலையில் சிக்கிய நூலொன்றை ஜாக்கிரதையாக அகற்றினேன். என் கால்கள் வண்டியை நெருங்கின. மறு கணம் என் கையிலிருந்த மாலை அந்த வீர சகோதரனின் மார்பில் மின்னியது!

''ஜய் ஹோ!'' — வழியனுப்ப வந்த சகாக்கள் மனதார வாழ்த்தினர்.

தாயார் ''மகனே...'' என்று விபூதி இட்டாள்.

மனைவி மாங்கல்யத்தைக் கண்களில் ஒற்றிக் கொண்டாள். அவன் கைகளை ஆட்டினான்; தலை நிமிர்ந்து நின்றான். வண்டி நகர்ந்தது! நான் கைகூப்பினேன்.

# பைசா பரமசிவம்

கே.வி

ஆறாயிரம் சதுர அடி கொண்ட ஒரு நிலப் பரப்பில் இருபது அடி நீளமும் பத்து அடி அகலமும் கொண்ட மாடி இல்லாத வீடு ஒன்று இருக்கிறது. அவ்வளவு பெரிய இடம் இருந்தும் ஏன் இத்தனை சிறிய வீடாகக் கட்டிக் கொள்ள வேண்டும் என்ற வினு எழுவதும் சகஜம். ஆனல் பைசா பரமசிவத்தைப் பற்றி அறிந்தவர்களுக்கு இதில் ஆச்சரியப்பட எதுவுமே இருக்காது. வீட்டுக்கும் சுற்றியுள்ள நிலத்துக்கும் ஏகபோக உரிமையாளரான அவருக்கு இருதயம் மட்டும் மிக மிகக் குறுகியதாக இருந்ததே அதற்குக் காரணம்.

சுற்றியுள்ள நிலத்தில் தோட்டம் போடலாம் என்று யாரோ யோசனை சொன்னர்கள். பரமசிவம் கணக்குப் போட்டுப் பார்த்தார். தோட்டக்காரனுக்குக் கொடுக்கும் சம்பளம், பராமரிப்புச் செலவு இவற்றையும் வரக் கூடிய லாபத்தையும் நிதானித்துப் பார்த்தார். சிரமத்துக்குத் தகுந்த லாபம் தோட்டத்திலிருந்து வராது என்று தெரிந்ததும், தம் எண்ணத்தை அவர் மாற்றிக் கொண்டு விட்டார்.

பைசா பரமசிவத்துக்குப் பெரிய குடும்பம் கிடையாது. ''ஒன்னே ஒன்னு, கண்ணே கண்ணு!'' என்று சொல்லக் கூடிய பெண் மட்டும் உண்டு. அவர் மகள் கமலாவுக்கு மூன்று வயது ஆகும் சமயம் அவர் மனைவி மீண்டும் கருவுற்றிருந்தாள்.

திடீரென்று வலி எடுத்து விட்டது. மருத்துவச்சியைக் கூப்பிட்டுப் பார்த்தால் ஆகும் செலவு அதிகமா, ஆஸ்பத்திரியில் சேர்த்து விட்டால் பணம் குறையுமா என்று அவர் யோசனை செய்து முடிவுக்கு வருவதற்குள், அவர் மனைவி இறந்தே போய்விட்டதாகக் கூடச் சொல்கிருர்கள்.

பைசா பரமசிவத்துக்கு அந்தப் பெயரைச் சூட்டியது 'கருவேப்பிலே கொத்த மல்லி' விற்கும் கிழவிதான். திங்கட்கிழமை ஒரு பைசாவுக்குக் கருவேப்பிலே வாங்கினல் ஒவ்வோர் இலையாகப் பறித்துப் போட்டு, அடுத்த திங்கட்கிழமைதான்








புதிதாக வாங்க வேண்டும். நடுவில் ஒரு நாள் அவள் குரல் கொடுத்தபோது, ''பைசாவுக்குக் கருவேப்பிலை வாங்கி மூன்று நாட்கள் ஆகின்றன, அதற்குள்ளா?'' என்று கேட்டு விட்டார். அந்தப் பெயர் அவருக்கு நிலைத்துப் போய் விட்டது.

கமலா பள்ளிக்கூடத்தில் எஸ். எஸ்.எல்.சி வரை படித்தாள். அவளுக்குப் பள்ளிக்கூடத்தில் உபகாரச் சம்பளம் கிடைத்தது. இல்லாவிட்டால் பைசா பரமசிவத்தின் பெண் எஸ். எஸ். எல். ஸி.வரை படிக்க முடியுமா?

பரமசிவம் தம் பெண்ணின் மேல் உயிரையே வைத்திருந்தார். அவர் உயிரைத் தவிர — மற்ற எல்லாப் பொருள்களுக்கும் — ரூபாய், அணா, பைசா கணக்கில் வைத்திருந்ததால் — அதைப் பெண்ணின் மேல் வைத்தார். செலவில்லாமல் செய்யக்கூடிய காரியம் அன்பாக இருப்பது ஒன்றுதானே!

கமலா வெளியே போகும் போது அப்பாவுக்குத் தெரியாமல் ஒரு பொருளை வாங்கிவிட்டாள். விலை கொடுத்து அல்ல; விலை கொடுத்தாலும் கிடைக்கக் கூடியதல்ல. ஆமாம்! கண்ணன் என்ற பிள்ளை தன் மனதை அவளிடம் தூக்கிக் கொடுத்து விட்டான்.

கமலாவின் தோழி ஒருத்தியின் அண்ணன் இந்தக் கண்ணன். போட்டுக் கொண்டிருக்கும் சட்டையின் முதல் பித்தான் எப்பொழுதும் அவிழ்ந்தே கிடக்கும். அந்தப் பித்தானைப் போட்டு விட்டால், உள்ளே கனத்த தங்கச் சங்கிலியில் தொங்கும் புலிநகம் வெளியில் தெரியாதல்லவா? நல்ல பசையுள்ள இடத்தைச் சேர்ந்த பிள்ளை. பைசா பரமசிவத்தைப் போல் பல பேர்களை வாங்கக் கூடிய சொத்துக்கு ஒரே வாரிசு!

டிரைவர் ஒரு நாள் வரவில்லை என்று தன் தங்கையைத் தானே பள்ளிக்கூடத்திலிருந்து அழைத்துப்போக வந்த கண்ணன், அப்புறம் தானே வந்தான். தினமும் வந்தான். டிரைவர் போக யத்தனித்தபோதெல்லாம் அவனை அடக்கிவிட்டுப் புறப்பட்டு விட்டான். கமலா இந்த இரும்புக் கண்ணனைக் காந்தம் போல் கவர்ந்து இழுத்ததுதான் அதற்குக் காரணம்!

கமலாவுக்குப் பரீட்சையெல்லாம் முடிந்து விட்டது. அவள் வீடு திரும்பும் வழியில் அவளுக்காகக் கண்ணன் காத்திருந்தான்.

''இனிமேல் என்னால் பொறுக்க முடியாது கமலி....உன் அப்பாவிடம் வந்து....''

''வந்து?...'' என்று தலையை உயர்த்தினாள் அவள்.

''உன்னை எனக்குத் தரச் சொல்லிக் கேட்கப் போகிறேன்!'' என்றான்.

''இப்படியேவா?'' என்று கேட்டாள்.

கண்ணன் தன் உல்லன் பாண்டையும் டெரிலின் சட்டையையும் பார்த்துக்கொண்டான். பளபளத்த காலணிகள் அவன் குனிந்த போது அவன் முகத்தில் பிரதிபலித்தன.

''ஏன்? எனக்கு என்ன குறை?'' என்று புரியாமல்தான் கேட்டான்.

''குறைவு ஒன்றும் இல்லை... என் அப்பாவுக்கு ஆடம்பரமாக இருப்பவர்களைக் கண்டால் பிடிக்காது. ஊதாரி, வீண் செலவுக்காரன் என்றெல்லாம் திட்டுவார்...''

கமலி முடிக்கவில்லை. ''எனக்குப் புரிந்து விட்டது. பைசா பரமசிவம் இல்லையா உன் அப்பா? அவருக்குஏற்றாற்போல் வருகிறேன்!'' என்று அவன் பறந்து விட்டான். என்ன எப்படி என்று அவள் கேட்பதற்குள் அவன் மறைந்து விட்டான்.

அன்று மாலை தன்னிடமிருந்து ஒட்டுப் போட்ட சட்டையையும், கிழிந்து தைத்த வேட்டியையும் சின்ன எஜமான் ஏன் வாங்கிப் போக வேண்டும் என்று புரியாமல் தவித்தான் டிரைவர். அதுமட்டுமில்லை. அவன் எப்போதோ தூக்கி எறிந்திருந்த பழைய செருப்புக்களைக்கூட அவசர அவசரமாகத் தேடிக் கொண்டிருந்தான் கண்ணன்.

பைசா பரமசிவம் நிமிர்ந்தார். அவர் வீட்டு முன் வேலியில் பொருத்தப்பட்டிருந்த மூங்கில் கதவை யாரோ திறக்கும் சத்தம் கேட்டது. அவர் நிம்மதி குலைந்தது.

அந்தக் கதவின் கீலுக்கு எண்ணெய் போட்டிருந்தால் திறக்கும் சத்தம் கேட்டிருக்காது. யார் வந்தாலும் தெரிந்திருக்காது. 'காலிங் பெல்' தேவையில்லாமலே, கீல் போட்ட ஒலியே வந்தவர்களை அறிவித்து வந்தது.

வெகு உரிமையுடன் அந்த இளைஞன் அவர் வீட்டுக்கு வந்தான். அவன் தலை கலைந்திருந்தது; சட்டை ஒட்டுப் போட்டிருந்தது; வேட்டி கிழிந்து தைத்திருந்தது. நடக்கும்போது ஓட்டைச் செருப்பு 'படக், படக்' என்று சப்தித்தது

''நீங்கள்தானே....பரமசிவம்...?''

''ஆமாம்! ...நீங்கள் யார்?'' என்று கேட்டார் பரமசிவம். அவன் வந்த நிலையிலிருந்து அவனை ஒரு யாசகன் என்று அநுமானித்துவிட்டார் என்று ஊகித்தான் கண்ணன். என்ன கேட்கப் போகிறோ என்று அவர் மனம் தவிக்கும் என்று எண்ணினான்.

''உங்களுக்குக் கன்னியம்மன் மில் கனக சபையைத் தெரியுமோ?'' என்று கேட்டான் கண்ணன்.

''தெரியுமா என்ன?... கோடீசுவரன்.''

''அவருடைய ஒரே பிள்ளை நான்... பெயர் கண்ணன்....''

பரமசிவம் நம்பியதாகத் தெரியவில்லை. மேலும் கீழும் பார்த்தார்.

''என்ன அப்படிப் பார்க்கிறீர்கள்? கோடீசுவரன் பிள்ளையாக இருந்தால் ஊதாரியாகத்தான் இருக்க வேண்டுமா? காரில்தான் வரவேண்டுமா? நடக்கக் கூடாதா? சொல்லுங்கள்!''

''நிச்சயமாக நீங்கள்...''

''நான் அவர் மகன்தான். சந்தேகமிருந்தால் உங்கள் பெண் கமலாவைக் கூப்பிட்டுக் கேளுங்கள்!''

''கமலாவையா?...'' பரமசிவம் திகைத்துப் போனவர்போல் நின்றார்.

''ஆமாம்!''

பரமசிவம் கூப்பிடாமலே அவள் ஆஜரானாள். ''ஆமாம் அப்பா! கனகசபை வீட்டிலிருந்துதான் வந்திருக்கிறார். என்னுடன் கூடப் படிக்கிறாள் என்று சொன்னேனே ராதா — அவளுடைய அண்ணா!''

''வாருங்கள், வாருங்கள்!'' என்று வாயெல்லாம் பல் தெரிய வரவேற்றார் பரமசிவம்.

''பெரியவர்களைப் பார்க்க வரும்போது சும்மா வரலாமா? ... ஓர் எலுமிச்சம் பழம் வாங்கி வந்தேன்.!'' என்று சொல்லியவன், ஒரே ஒரு எலுமிச்சம் பழத்தை மேஜையின்

மேல் வைத்தான். ''என்ன வில போங்கள்! முழுசாக ஆறு பைசா கொடுத்தேன்!''

பைசா பரமசிவம் தலை நிமிர்ந்தார்.

கோமகவரம் பின்னே ஆறு பைசா கொடுத்ததைப் பெரிதாகச் சொல்லுகிறானே என்று வியந்தார். அவனே அப்படி இருக்கும்போது அவர் அப் போது செய்து வரும் சில செலவுகளிலும் வெட்டு விழச் செய்ய வேண்டும் என்று நிர் மானித்துக் கொண்டார்.

''கமலா! ஒரு கப் காப்பி கொண்டு வா, அம்மா!'' என்றார் பரமசிவம். யாராவது விருந்தாளி ஒரு நாள் வந்தால், பிறகு தம் காப்பியை இரண்டு நாட்களுக்குக் குறைத்து விடுவார்.



''பாவம்! யாரு, விருந்தாளி வந்திருக்கிறே....ராத்திரி சாப்பிடச் சொல்ல வாய்க்கு வந்தது இல்லேங்கி இங்கேயிருக்கு...... என்ன செய்யறது!''

''காப்பியா? என் வீட்டிலேயே நான் ஒரு வேளைதான் சாப்பிடுவது. ஆமாம், வருபவர்களுக்கெல்லாம் காப்பி கொடுத்து உங்களுக்கு இந்தக் காலத்தில் எப்படிக் கட்டுப் படியாகிறது?'' என்று கேட்டான் கண்ணன்.

பரமசிவம் பதிலே பேசவில்லை. பையன் ஏக அழுத்தம் என்று நினைத்துக் கொண்டார்.

''நீங்களும் உங்கள் பெண்ணும்தானே இருக்கிறீர்கள்? இத்தனை பெரிய வீடு எதற்கு?'' என்று கேட்டான் அடுத்தபடி.

பரமசிவம் அயர்ந்துபோய் உட்கார்ந்தார்.

கண்ணன் சற்று நிதானித்தான்.

''நேரடியாகச் சொல்கிறேனே!... நான் வந்த காரியம் — என் தங்கச்சி, கமலாதான் தன் அண்ணின்னு சொல்லுது! அப்பா அம்மா எல்லோரும் நாளைக்குப் பேச வருவாங்க... நீங்க என்ன சொல்றீங்க? அவுங்க வரலாமா?'' என்று கேட்டான் கண்ணன்.

''பேஷாக வரட்டும்!'' என்றார் பரமசிவம்.

''நான் சொல்லப் போவது உங்களுக்குத் தெரியாததில்லே. நமக்குக் காக சேர்க்கிறது தான் கஷ்டம். செலவழிக்கிறது தண்ணி கொட்டற மாதிரி. எங்க அப்பா அம்மா சொல்றாங்கன்னு கல்யாணத்தை நீங்கள் தடபுடலா நடத்தக் கூடாது. ஒரு கோவில்லே, சின்னதா அம்பது, அறுபது ரூபாய்க்குள் முடிச்சுடணும். பட்டுப் புடவைன்னு ஒண்ணும் வாங்க வேண்டாம். சின்னாளப்பட்டி புடவை போதும்!''

பைசா பரமசிவத்தின் விழிகள் அகலமாக விரிந்து விட்டன.

''உங்கள் மனத்தை அறிந்த பிறகுதான் அப்பா அம்மாவை வரச் சொல்ல வேண்டும். இந்தக் கல்யாணத்தில் உங்களுக்கு விருப்பம் தானே...?''

பரமசிவம் எழுந்து நின்றார்.

''எனக்கு விருப்பம்தான்! நான் இன்னிக்குக் காலையிலே இன்னொருத்தர் இடத்திலே வாக்குக் கொடுத்திட்டேனே!'' என்றார் பரமசிவம்.

''என்ன?...'' என்று துள்ளினான் கண்ணன்.

''ஆ!'' என்று அயர்ந்து போனாள் கமலா, கதவுக்குப் பின்னால்.

''உங்களை எனக்குப் பிடிச்சிருக்கு. ஆனால் நீங்கள் தாராளக் கைன்னு தோணுது. கோவில்லே நடத்தற கல்யாணத்துக்கு அஞ்சாறு ரூபாய் தான் செலவழியும்... நீங்கள் அம்பது அறுபது ரூபாய்க்கில்லே எஸ்டிமேட் போடறீங்க... நமக்குக் கட்டுப்படியாகாதுங்க'' என்றார் பரமசிவம்.

கண்ணனுக்குத் தலையைச் சுற்றியது. அப்படியே மயக்கமாகச் சாய்ந்தான். கமலா பிரமித்துப் போய் நின்றாள்.

பரமசிவம் தண்ணீரை எடுத்து வந்து கண்ணன் முகத்தில் தெளித்தார்.

''என்னங்க அப்பா?... யாருக்கப்பா வாக்குக் கொடுத்தீங்க?...'' என்று பரபரப்புடன் வினவினாள் கமலா தன் சுய உணர்வை அடைந்தவளாய்.

''யாருக்கம்மா வாக்குக் கொடுப்பாங்க? தெருவில் போறவங்களுக்கா?... சம்பந்தி வீட்டுக்காரங்களுக்குத்தான்!''

''சம்பந்தியாம்... சம்பந்தி! எனக்குச் சம்மதமில்லாத கல்யாணம் இது... நான் ஒத்துக்கொள்ள மாட்டேன்...''

''பிள்ளையைப் பார் அம்மா!... மன்மதன் மாதிரி இருக்கிறான். ஒருதரம் பார்த்தால் மாட்டேன் என்று சொல்ல மாட்டாய்.''

பைசா பரமசிவம் தம் கல்யாணத்துக்குத் தைத்த கோட்டை ஓர் ஆணியில் மாட்டியிருந்தார். அதன் உள் பையிலிருந்து ஒரு போட்டோவை எடுத்துக் காண்பித்தார்.

பார்த்தவள் கண்கள் விரிந்தன. ''இவரா அப்பா?... உங்களை நான் தப்பாக எண்ணி விட்டேனே!'' என்று கமலா பச்சாதாபப் பட்டாள்.

அரை மயக்கமாக இருந்த கண்ணன் கமலா இப்படிப் பச்சோந்தியாக மாறியதைக் கேட்டதும் சிங்கம் போல் சீறி எழுந்தான்.

''யார் அந்தக் குரங்கு மூஞ்சி மன்மதன்?'' என்று அப்படத்தைப் பிடுங்கிப் பார்த்தான்.

அவன் முகத்தில் அசடு வழிந்தது. குரங்கு மூஞ்சியும் அவனும் ஒன்றேதான்!

பைசா பரமசிவம் மெதுவாகச் சிரித்தார். எதிலும் அவர் கணக்குத்தான்.

''அம்மா கமலா! நான் கருமிதான்! ஆனால் நான் சேர்த்து வைப்பதெல்லாம் உனக்குத்தானே! நீ இந்தப் பையனைப் பார்த்துப் பேசிய முதல் நாளே நான் முடிவு செய்துவிட்டேன்! இவன் அப்பா அம்மாவைப் பார்த்துப் பேசியாகிவிட்டது. நீங்கள் இருவரும் இந்த நாடகம் என்னிடம் ஆடியிருக்க வேண்டாம்!'' என்றார்.

''என்னை மன்னித்துவிடுங்கள் அப்பா!''

''என்னை மன்னித்துவிடுங்கள், மாமா!'' என்றான் கண்ணன்.

''தப்பு என்பேரில்தான், அப்பா!'' என்று கெஞ்சினான் மகன்.

''இரண்டு குழந்தைகளைப் பெற்றுக் கொண்டு ஆனந்தமாக வாழ வேண்டும்!'' என்று ஆசீர்வதித்தார் பரமசிவம்.

அதில்கூட அவருக்குச் சிக்கனம்தான்!

# வட்ட மேஜை

★ கட்டுப்பாடு தேவை
★ பிரசாரம் இல்லை
★ வருந்துகிறோம்
★ கட்டாயத் திணிப்பு

புதிய வருடப் பிறப்பின்போது புதிய, நூதன, விநோத முறையில் காலண்டர்கள் வெளிவருவது சகஜம். காலண்டர்களின் அவசியத்தைப் பற்றியும், சிறப்பினைப் பற்றி நமக்கெல்லாம் நன்கு தெரியும். ஆனால் இன்று அநாகரிக முறையில் காலண்டர்கள் வெளிவருவது பற்றி நாம் சற்று சிந்திக்க வேண்டும். மிகவும் அவலட்சண, அலங்கோலக் காட்சிகளில் நம் திரைப்பட நடிகைகளைக் காலண்டர் கம்பெனிகள் விளம்பரப்படுத்தியிருக்கின்றன. அத்தகைய காலண்டர் 'போஸ்'களைப் பார்த்தால் பெண்கள் தலை கவிழ்வார்கள்!

பல லட்சக் கணக்கான ரூபாய்களைக் கொட்டி எடுக்கும் படங்களில் வரும் சில காட்சிகளை சென்ஸார் தணிக்கை செய்து விடுகிறார்கள். ஆனால் வெட்டப்படும் திரைப் படக் காட்சிகளைப் பொதுமக்கள் பார்வைக்கு காலண்டர் கம்பெனியார் மலிவான விலைக்குக் காலண்டர்களாக அச்சடித்து வெளியிடுகிறார்கள்! அவர்கள் வியாபாரத்துக்கு ஒரு வரம்பே இல்லாமல் போய்விட்டது.

எளிதில் மலிவான விலைக்குக் கிடைக்கும் அத்தகைய கீழ்த்தரமான படங்கள் மாணவர்களின் விடுதியையும், நோட்டுப் புத்தகங்களையும் அலங்கரித்துக் கொண்டிருக்கின்றன

எதற்கெடுத்தாலும் 'கண்ட்ரோல்' செய்யும் சர்க்கார் இந்தக் காலண்டர் மோகினிகள் காலண்டர் கம்பெனிகள் விஷயத்தில் மட்டும் கட்டுப்பாடு செய்யாமல் இருப்பது வியப்பே!

குறள் நெறி மன்றம், ஜீ.டி. ராஜன், பி.ஏ
தங்கவயல் நாகரத்தினம், பி.ஏ.
21-1-66 பிச்சமுத்து, பி.எஸ்ஸி.

ஆட்சிப் பொறுப்பினை ஏற்று நடத்தும் காங்கிரஸ் கட்சியினர் பலப் பல புதுச் சட்டங்களை இயற்றி அரசியல் மேடையில் விளையாட்டுக் காட்டிக் கொண்டு வருகிறார்கள். 'வரதட்சிணை' மசூதாவை நிறைவேற்றினர் சட்ட சபையில். உண்மையில் இச்சட்டமானது மக்களால் ஏற்றுக் கொள்ளப்படவில்லை. பலர் இச் சட்டத்துக்காகப் பயந்து இலை மறை - காயாக வரதட்சிணை என்று வாங்காமல் பரிசுப் பத்திரங்கள், நகைகளாக வாங்கிக் கொள்ளுகின்றனர்.

சட்டமியற்றி ஆட்சி பீடத்தில் உள்ளவர்கள் தங்களிடத்தில் உள்ள பெரும்பான்மை எண்ணிக்கையைக் காட்டிக்கொள்கின்றனர். சட்டசபையில் ஒரு சட்டத்தை இயற்றிவிட்டதோடு தன் கடமை முடிந்தது என்றே அரசு எண்ணுகிறது. பெரும்பான்மை பலத்தினால் தேவையற்ற சட்டங்கள் நிறைவேற்றப்படுவது ஒருபுறமிருக்கட்டும். அவசியமான சட்டங்கள் கூட இயற்றப்பட்டு விடலாம். ஆனால் அதன் சிறப்பும், நன்மைகளும் மக்கள் மனத்தில் பதிய வேண்டும். திரு இராஜாஜி அமைச்சராய் உள்ள காலத்தில் தீண்டாமை மதுவிலக்குப் பிரசாரத்தின்போது அவர்கள் 'சட்டம் எங்களால் இயற்றப்பட்டது. ஆனால் அது உங்கள் மனத்தில், மூளையில்தான் நிறைவேற்றப்பட வேண்டும்' என்று அடிக்கடி அரசியல் மேடைகளில் கூறிவந்தார். இத் திட்டங்கள் வெற்றி கண்டன. ஆனால் இக்கால அமைச்சர்கள் பிரசாரமே செய்வதில்லை. மந்திரிகள் என்ன, காங்கிரஸ் அக்கிராசனர் கூடத்தான். அவர்களுக்குத் திறப்பு விழாக்களுக்கு விஜயம் செய்வதற்கும், கட்சித் தகராறுகளைத் தீர்ப்பதற்கும்தான் நேரம் சரியாக உள்ளது. வரதட்சிணைச் சட்டம் இருந்தும் சரியான பிரசாரம் இன்மையால் அதனால் பயன் ஏதும் விளையவில்லை.

பேட்டை,
21-1-66 ச. அரங்கராசன்

பூவாளூர் சுந்தரராமன் எழுதிய 'ஏமாறச் சொன்னது யார்?' என்ற கதையில் மாப்பிள்ளைப் பையனுக்கு மதுரையில் ''ரிசர்வ் பாங்கி''யில் ஆபீசர் உத்தியோகம் என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது. இது தவறு. தமிழ் நாட்டில் சென்னையில் மட்டும்தான் ரிசர்வ் பாங்கி இருக்கிறது.

கோவை
27-1-66 கோ. ராமசுப்பிரமணியன்

கல்கியில் 'ஜயார்ஜி' எழுதிய 'பறவைகள் பலவிதம்' என்ற அட்டைப்படக் கதையில் அந்த 'மக்கா' என்று அடைகுறியுடன் தனியாகச் சேர்த்து எழுதிய 'சனியன் மெக்காவுக்கே போய்த் தொலையட்டும்' என்று இருப்பது விரும்பத் தகாததாக இருந்தது.

31-1-66 அப்துல் ஹாஸன்

வருந்துகிறோம். — ஆசிரியர்

தென்னிந்தியாவில் பிழைக்க வழியில்லாததால் ஆயிரக் கணக்கான தென்னிந்தியர்கள் சொந்த ஊர் விட்டு இங்கு வந்து பிழைக்கிறார்கள். நல்ல நிலைமையில் வாழ்பவர்கள் சிலர். மற்ற எல்லோரும் பத்தடி அகல, நீளம் கொண்ட ஒரே அறையில் ஐந்தாறு பேர்களாக வாழ்கிறார்கள். இந்தக் கஷ்டத்தில் வாராவாரம் ரேஷன். அதுவும் முக்கால் பங்கு கோதுமை, கால் பங்கு அரிசி. மகாராஷ்டிரத்தில் வந்து தங்கியிருப்பதாலேயே அவர்களும் ரொட்டி, சப்பாத்தி, சப்ஜி சாப்பிட வேண்டும். எப்படி ஹிந்தியைத் திணிக்க முயலுகிறார்களோ அதேபோல் கோதுமையையும் தென்னிந்தியர்களுக்குத் திணிக்கிறார்கள். தென்னிந்தியர் உணவு மந்திரி, தென்னிந்தியர் காங்கிரஸ் தலைவர். ஆனால் திணிப்பதோ இந்தி; உட்கொள்ளக் கட்டாயப் படுத்துவதோ கோதுமை. இந்நிலை மாறுதா?

பம்பாய்
20-1-66 ஜீ. வேங்கடராமன்

Edited printed & published by T. Sadasivam on behalf of Messrs. Bharathan Publications Private Ltd., at the Kalki Press, Kilpauk, Madras-10

No. M. 4392
...ed as a Newspaper in Ceylon